## 3

## நடராஜன்



'ஒருவரிடமும் சொல்லாமல் போயிருக்கிறார் அப்பா. சீக்கிரம் வந்துவிடுவார்' என்றே எனக்குப் பட்டது. வாசலிலேயே நின்று பார்த்துக்கொண்டிருந்தேன். ஆனால் கால்கடுக்கப் பார்த்துக்கொண்டிருந்தது தான் மிச்சம். வண்டியையும் காணோம்; காடியையும் காணோம். அன்றைப் பொழுது வெகு வேடிக்கையாகப் போயிற்று.

நான் மதுரையிலிருந்து வந்ததுமுதல் ஊரெங்கும் காற்றாடியாகப் பறந்துகொண்டிருந்தது. குழந்தை மணி தனக்கும் காற்றாடி வேண்டும் என்று நச்சரித்துக்கொண்டிருந்தான். எனக்கும் காற்றாடி என்றால் மிகவும் பிரியம். அப்பா கோபித்துக்கொள்ளுகிறாரே என்று நிறுத்திவைத்திருந்தேன்.

வரதனைப் பத்தை சீவச் சொல்லி நான் காகிதம் கத்தரித்தேன். பாம்புக்காற்றாடி, கழுகுக் காற்றாடி என்று வரதன் எவ்வளவோ விதங்கள் செய்வான். அப்பாவும் இல்லையா? அவனுக்கும் குஷி. நல்ல பெரிய காற்றாடி ஒன்று செய்து முடித்தோம். ஒன்றியாக உம் என்று உட்கார்ந்து இருந்துவிட்டுக் குழந்தைகளுடன் விளையாடுவது மிகவும் சந்தோஷத்தைத் தந்தது. வரதன் தான் இதில் கெட்டிக்காரன். கண்ணாடித் தூள் துணுக்குகளை எல்லாம் பொடிசெய்து பசை காய்ச்சிப் பெரிய நூல் உருண்டையாகத் தயார்செய்தான். இதை நாங்கள் மாஞ்சா போட்ட நூல் என்று சொல்லுவோம்.

ராமுவும் சிறு வயசில் மும்முரமாகக் காற்றாடி விடுவானாம். அவனும் வெளியில் வந்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தான். குழந்தை மணிக்காக நான் காற்றாடி கட்டினேன் என்று பேர்தான். கத்திக் கொண்டிருந்த அவன் கையில் கொடுக்க வேண்டும் என்று

எனக்குத் தோன்றவே இல்லை. அதுதான் வேடிக்கை! வரதனுக்கும் ஒன்றும் தோன்றவில்லை. உயரத்தில் இன்னும் ஒரு காற்றாடி பறந்துகொண்டிருந்தது.

“அதோ பார் சாமி. அந்தக் காற்றாடியோடே ‘மல்’ போடலாம் சாமி” என்று வரதன் என் கையிலிருந்த காற்றாடியை வாங்கிக்கொண்டு ஓட்டின்மேல் ஏறினான். பின்னால் நானும் ஏறினேன். எனக்குப் பின்னால் மணியும் ஏறுவதை நான் கவனிக்கவே இல்லை.

கவனித்தவுடன், “ஐயோ! நீ ஏறாதே மணி, விழுந்துடுவே” என்று கத்தினேன். அசல் குழந்தை அவனுக்கு என்னைவிட ஆசை அதிகமாக இருக்குமா இல்லையா? ஒரே அமர்க்களம்! ஆளுக்கு ஆள் காற்றாடியைத் தூக்கிக்கொண்டு ஓடினோம். காற்றாடி மிகவும் உயரத்தில் பறந்துகொண்டிருந்தது மட்டும் அல்ல. அந்தச் சிறிது நேரத்தில் என் மனமும் அதற்குமேல் வேகமாகப் பறந்து விளையாடிக்கொண்டிருந்தது அதற்குள்.

“சீமா! டேய் சீமா! வா சுருக்க! எதுராளாத்து மரத்துலே எவ்வளவு நல்ல காத்தாடி ஒன்று வந்து மாட்டிண்டு இருக்குப் பாரேன்! ஓடி வாயேன் சுருக்க! வரதனை எடுக்கச் சொல்வோம்” என்று இரைக்க இரைக்க ஓடி வந்தாள் ருக்கு. காற்றாடி விளையாட்டு என்றால் ஆண் என்ன? பெண் என்ன? எல்லோருக்கும் ஒரே உத்ஸாகந் தானே? ஒரே பாய்ச்சலில் வரதன் கழியுடன் ஓடினான். அவனுக்குப் பின்னால் நான், ருக்கு, மணி எல்லாருமாக விழுந்து அடித்துக்கொண்டு ஓடினோம். தடதடவென்ற சத்தத்தைக் கேட்டுவிட்டு, “என்னடா அமர்க்களம்!” என்று ராமு கோபித்துக்கொண்டான். எல்லாம் கொஞ்ச நேரந்தானே? என் காதில் ஒன்றும் விழவில்லை.

மூச்சுத் தெறிக்க ஓடியபோது தெருவில் அத்தை வந்துகொண்டிருந்தாள். அவள் மேல்கூடப் பட்டுவிட்டேனோ என்னவோ. சந்தேகந்தான். கடைசியில் ஒரு பெரிய காற்றாடியைப் பிடித்துக்கொண்டு வந்து சேர்ந்தோம். மணி ஓடியதே தெரியவில்லை. வீட்டில் இருந்தால்தானே சத்தம் தெரியப் போகிறது? யார் என்ன கத்தினார்களோ!

குளித்துச் சாப்பிடும்போது மணி பன்னிரண்டு. அத்தை ஏன் கோபிக்கமாட்டாள்? மணியைக்கூடச் சாப்பிட அனுப்பாமல் இருந்த அசட்டுத்தனம் அப்போதுதான் எனக்குத் தெரிந்தது.

"நன்னு இருக்குடா ரொம்ப! அப்பா இல்லேன்னு இப்படிக் கூத்தடிக்கறே? கடைக்குப் போகறும், கண்ணிக்குப் போகறும்; வரதனையும் ஒரு காரியம் செய்யவிடாமே! மணி ஒண்ணறது; குழந்தையும் பட்டினி கிடக்கு. ரொம்ப அழகா இருக்கு, போ! அப்பாவையும் காணம். நாளைக்குக் காரியம் நடக்கணுமே!" என்று அத்தை பெரிய சத்தம் போட்டாள்.

"ஆமாம், இப்பவே பிடிச்சுச் சொல்லிக்கொடுத்தாத் தானே எல்லாம் படியும்? வேளை இல்லாதே, போது இல்லாதே நின்னுண்டு இருந்தாத்தானே அப்பறம் உருப்படாமே போகலாம்" என்றுள் மன்னி ஒரு பக்கத்திலிருந்து.

அத்தை கோபித்துக்கொண்டது எனக்குப் பாந்தமாக இருந்தது. ஆனல் மன்னி சொன்னதுதான் என்னவோ போல் இருந்தது; பிடிக்கவில்லை. என்னவோ சொல்லிக்கொடுக்கிறதாம்! சொலலிக்கொடுக்கவேணுமோ! அவனும் நம் அகத்துக் குழந்தைதானே? எங்களாட்டமா இல்லாமல் வேறே மாதிரியா எப்படி இருக்கப்போகிறுன்? என்னவோ குழந்தை ஆசைப்படுகிறதே என்று கட்டினேன். கொஞ்ச நாழிகை விளையாடினேம். இதுகூடவா தப்பு?

"மணி, போய்ப் படுத்துக்கோடா. அம்மா கூப்படறு" என்று அவனை அங்கேயே நிறுத்திவிட்டு வந்தேன்.

ஆனல் குழந்தைக்கு இதெல்லாம் புரிகிறதா? "சித்தப்பா!" என்று சட்டையைப் பிடித்துக்கொண்டே என்னுடன் ஓடிவந்துவிட்டான்.

மணியைத் தூங்கவைத்துவிட்டு நானும் அவன் பக்கத்தில் படுத்துக்கொண்டேன். வெயிலில் ஏறிக் குதித்து விளையாடினேமா? எனக்கும் கண்ணைச் சுற்றிக்கொண்டு வந்துவிட்டது தூக்கம். கண்ணை விழித்துக்கொண்ட போது மணி ஏகமாக ஆகிவிட்டது.

எழுந்து வந்ததும் அத்தை என்னிடம் ஒரு பெரிய சீட்டைக் கொடுத்தாள். அப்பா ஊரில் இருந்தால் இந்தக் கவலை இல்லை. இப்போது எல்லாம் எனக்கு வந்து சேர்ந்தது. சில்லறையை வாங்கிக்கொண்டு நானும் வரதனும் கடைக்குச் சென்று வேண்டிய கறி, காய் எல்லாவற்றையும் வாங்கிக்கொண்டு வந்து சேர்ந்தோம்.

வீட்டுக்கு வந்தவுடன் அத்தை இன்னொரு வேலை இட்டாள். திருவல்லிக்கேணியில் குஞ்சு இருந்தாள். போய் அவளைத் திவசத்துக்கு அழைத்துவிட்டு வரச் சொன்னாள்.

"ராமு வரானே, அவனைச் சொல்லிவிட்டு வந்துடச் சொல்லப்படாதா அத்தை? அங்கேதானே போறான்?" என்றேன்.

"அதெல்லாம் எனக்குத் தெரியாதுடாப்பா. உங்கப்பா இருந்தால் நான் ஒன்றும் சொல்லப்போறதுகூட இல்லை. அவாள்ளாம் நான் சொன்னாக் கேப்பாளா? என்னமோ நீ இன்னிக்கிக் கேக்கறயேன்னு சொல்லறேன்" என்று பதில் சொன்னாள் அத்தை.

மன்னி அப்போதுதான் அங்கே வந்துகொண்டிருந்தாள்.

'அவள் காதில் பட்டால் வம்பு!' என்று நினைத்துக் கொண்டு. "எப்போ வரச் சொல்லறது?" என்றேன்.

"எப்போன்று என்னடா அதுக்கு மூகூர்த்தம்? குழந்தைகளையும் அவனையும் அழைச்சுண்டு நாளைக்கு அங்கேயே வந்துடறும்னு அத்திம்பேரைப் பார்த்துச் சொல்லிவிட்டு வா" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள் அத்தை.

"யாரை?" என்றாள் அதற்குள் மன்னி.

"போய்க் குஞ்சுவைக் கூப்பிட்டுவிட்டு வரச்சொல்றா அத்தை" என்றேன்.

"கூப்பிட வாண்டாமா பின்னே?" என்று அழுத்தமாகச் சொல்லிக்கொண்டே போனாள் மன்னி.

அவள் சொன்னது என்னவோ ஒரு திருசாக இருந்தது. 'அவள்தான் ஒரு மாதிரி சொன்னாளா? அல்லது எனக்குத்தான் அவள் சொன்னது அப்படிப் பட்டதா?' இரண்டும் எனக்குப் புரியவில்லை. திருவல்லிக்கேணியைப் பார்க்கச் சென்றேன்.

பஸ்ஸுக்கு ஒவ்வோர் இடமாக நின்று திருவல்லிக்கேணி போய்ச் சேருவதற்கே நாழிகையாகிவிட்டது. அத்திம்பேரும் ஆபிசிலிருந்து வந்திருப்பார். சொல்லிவிட்டுவந்து விடலாம் என்று நினைத்துக்கொண்டு போனேன். ஆனால் குஞ்சுவின் வீடே பூட்டிக்கிடந்தது. எல்லோரும் எங்கே போய்விடுவார்கள்? அல் அசலில் கேட்டுப் பார்த்தேன் 'எல்லோரும் எங்கேயோ சுவாமி தரிசனத்துக்குப் போயிருக்கிறார்கள்; நேரம் கழித்துத்தான் வருவார்கள்' என்று தெரிந்தது. திரும்பி வந்துவிடலாமா என்று பார்த்தேன். வந்து என்ன செய்வது? மறுபடியும் என்னைத்தானே விரட்டுவார்கள்?

நல்ல வேளையாக நடராஜன் ஞாபகம் வந்தது. நடராஜன் நல்ல பணக்காரன். பரம்பரைப் பணக்காரனுடன் பெரிய வியாபாரமுங்கூட. பெரிய பங்களாக் கட்டியிருந்தான்; வேண்டியது இருந்தது; ஒரே பிள்ளை. என்னுடன் சேர்ந்து படித்தவனாகையால் நல்ல பழக்கம். அதுவும் அல்லாமல் பணக்காரன் என்ற கர்வம் அவனுக்கு இல்லை. என்னுடன் அவ்வளவு அன்புடன் பழகுவான். என்னுடைய உண்மைத் தோழன் அவன்தான் என்று சொல்வேன். அவன் வீடும் தூரமில்லை. 'அவனைப் பார்த்துவிட்டு வரலாம்' வரும்போது அத்திம்பேரையும் பார்த்துவிட்டு வந்துவிடலாம்' என்று நினைத்துக்கொண்டு அவன் வீட்டுக்குச் சென்றேன். நான் அடிக்கடி அவன் வீட்டுக்குப் போகும்வழக்கம் இல்லை. நடராஜன் வெளியே உலாவிக்கொண்டிருந்தான். என்னைக் கண்டதும் அவனுக்கே ஆச்சரியமாகப் போய்விட்டது.

"யார், சீமாவா? நம்பவே முடியல்லையே? என்ன அதிசயமாக இருக்கே? மழைதான் வரப்போறது" என்று சொல்லிக்கொண்டே என் கைகளை இறுகப் பிடித்துக் கொண்டான்.

"ஒன்றும் இல்லேடா; இங்கே எங்க அத்திம்பேரைப் பார்த்தூட்டுப் போகலாம்னு வந்தேன். அவரைக் காணலே; அப்படியே இங்கே வந்தேன்" என்றேன்.

"அப்படிச் சொல்லு. ஏது, நம்மைத் தேடிச் சீமாவும் வந்துட்டானென்னுன்னு பார்த்தேன், காரியம் இல்லாமே வருவையா நீ? வா உள்ளே போகலாம்" என்றான்.

இருவரும் உள்ளே சென்றோம்.

நடராஜன் பார்வைக்கு அழகாக 'மூக்கும் முழியு'மாக இருப்பான். என்னைவிட இன்னும் இரண்டு மூன்று வயது அதிகம் இருக்கும். தகப்பனார் காலமானவுடன் தாயார் அவனுக்குக் கல்யாணம் செய்துவைத்துவிட்டாள். நல்ல தும்பைப்பூப் போன்ற மல் ஜிப்பாவும் மயில்கண் வேஷ்டியும் காதில் டால் வீசும் வைரக் கடுக்கனும் அணிந்து அவன் பார்வைக்கு வெகு ஜோராகத்தான் இருப்பான்.

போய் இருவரும் அறையில் உட்கார்ந்தவுடன் பரிசாரகனைக் கூப்பிட்டுக் காபி கொண்டுவரச் சொன்னான்.

"என்னத்துக்குடா? இப்போ காபி ஒன்றும் வேண்டாம்" என்றேன்.

நாங்கள் பேச ஆரம்பித்துவிட்டால் மணி போவதே தெரியாது. பிறகு அதற்கு ஒரு முடிவும் இருக்காது. அன்று அவனும் எப்போதும் போல் இல்லை. ஏதோ வேதனை பிடித்தவன்போல் காணப்பட்டான்.

"என்ன, இன்று எங்கும் போகாமல் வீட்டைச் சுற்றிக்கொண்டே நிற்கிறாய்? ஜோலி ஒன்றும் இல்லாவிட்டால் பிச்சுக்காவது போவாயே?" என்றேன்.

"போடா, என்ன பிச்சு? ஒன்றும் பிடிக்கவில்லை" என்றான் அவன்.

"என்னடா, நீகூட இப்படி அலுத்துக்கிறே: 'மிஸஸ் ஜோடே' ஏதாவது..?" என்று நான் முடிப்பதற்குள், "ஆமாண்டா! இதுதானே உனக்குத் தெரியும்; என்னைப் பரிகாசம் செய்யக் கிளம்பிவிடு. என் பிடுங்கல் எனக்குத் தெரியும்!" என்றான் நடராஜன்.

இதைக் கேட்டதும் எனக்குச் சிரிப்புத்தான் வந்தது.

"நல்ல பிடுங்கலடா! உனக்குப் பிடுங்கல்னு அப்பறம் யாரைத்தான் சொல்லுவது போ" என்றேன்.

"இல்லேடா சிமா; ரொம்ப நாளாக உன்னுடன் ஒன்று சொல்லணும் என்று நினைத்துக்கொண்டிருக்கிறேன். விளையாட்டல்ல" என்றான் அவன்.

உண்மையில் அன்று அவனுடைய முகத்தில் ஏதோ கவலை படிந்திருந்தது.

எனக்கும் ஒன்றும் பிடிக்கவில்லை.

'நமக்குத்தான் இருக்கவே இருக்கிறதே. இவனாவது சந்தோஷமாக இருப்பான். பார்த்துவிட்டுப் போகலாம்' என்று வந்தால், 'சிலே இல்லேன்னு சித்தாத்தா வீட்டுக்குப் போனாளாம்; அவள் ஈச்சம்பாயைக் கட்டிக்கொண்டு எதிரே ஓடி வந்தாளாம்' என்ற கதையாக இருந்தது. 'தலைக்குமேல்தான் கிடக்கிறதே? இதையும் வேறு கேட்க வேண்டுமா? விதிதான்' என்று நினைத்துக்கொண்டு, "சரி சரி, என்னைப் பிடித்த சனிதான் விடவே விடாதுபோல் இருக்கு. இங்கே வந்தால் அது உன்னையும் பிடித்துக்கொண்டு விடும்போல் இருக்கிறதே? நான் போய்ட்டு வரேண்டாப்பா நல்ல வேளையிலே" என்று கிளம்பினேன்.

"முடியாதுடா. அத்தி பூத்தாப்போல் வந்திருக்கே. இருந்து சாப்பிட்டுவிட்டுத்தான் போகணும். நானே உன்னை வந்து அழைச்சுண்டு வரணும்னு நெனைச்சுண்டு இருந்தேன். நித்தியம் அம்மா என்னைத் தொந்தரவு செய்துகொண்டே இருக்காள்" என்று பிடித்துக்கொண்டு விட்டான்.

"அத்திம்பேரைப் பார்க்கணும். அப்பா ஊரில் இல்லை. வீட்டில் வேறு வேலை இருக்கிறது" என்று எவ்வளவு சாக்குச் சொல்ல முடியுமோ அவ்வளவும் நான் சொன்னேன்.

"உன்னைப் பிடித்த சனி, என்னைப் பிடித்த சனி இரண்டையும் ஒழிக்க ஒரு வழி கண்டுபிடித்திருக்கிறேன்

நான். அப்பா ஊரில் இல்லேங்கறயே? எங்கே போயிருக்கா?'' என்று கேட்டான் அவன்.

"எங்கே போயிருக்கிறார் என்று எனக்கே தெரியாது. நான் மதுரைக்குப் போயிருந்தபோது கிளம்பிப் போயிருக்கார்; என்னமோ சொல்லுகிறாயே; ஏதாவது ஜோஸ்யம் கிஸ்யம் பார்த்தாயா என்ன?'' என்றேன் நான்.

"வா சாப்பிடலாம் முதல்லே. எல்லாம் அப்புறம் பேசலாம்'' என்றான் அவன். இருவரும் எழுந்து சென்றோம்.

நடராஜன் வீட்டுக்குப் போவேனே ஒழிய அநேகமாக வெளியிலிருந்தே பேசிவிட்டு வந்துவிடுவேன். வெளியில் பங்களா எப்படிப் பிரமாதமாக இருந்ததோ அப்படியே உள்ளுக்குள்ளும் இருந்தது. இருவரும் இலையில் உட்கார்ந்ததும், "அம்மா, இதோ பார், சீமாவை நன்றாகப் பாத்துக்கோ; தினம் கத்தறயே?'' என்றான் நடராஜன் சிரித்துக்கொண்டே.

"என்னடா பரிகாசம் நடராஜா? இதுக்குத்தான் என்னைப் பிடித்துக்கொண்டாயா?'' என்றேன். அதற்குள், "நித்தியம் உன்னைப்பத்தித்தான் நாங்கள் பேசிண்டிருக்கோம். நடராஜனுக்கு உன்னைக் கண்டாத்தான் உசிராய் இருக்கு. 'சீமாவைப்போல் பிள்ளை கிடைக்க மாட்டான் இனிமே'ன்னு நாளைக்கு ரெண்டு தடவை சொல்லிக்கொண்டே இருக்கான்'' என்றாள் அவன் தாயார், என்னைப் பார்த்து.

இதைக் கேட்டவுடன் எனக்குக் கொஞ்சம் வெட்கமாகப் போய்விட்டது. இவர்களுக்கு நான் எந்த விதத்தில் ஈடு? என்னை எதற்காக ஸ்தோத்திரம் செய்ய வேண்டும்? உண்மையில் அது எனக்கு ஸ்தோத்திரமாகப் படவில்லை. நடராஜன் என்னை வேண்டுமென்று அவமானப்படுத்துவதுபோல் இருந்தது.

"என்னடா? இப்படி என்னை இறக்கணும் என்று எவ்வளவு நாளாக நினைத்துக்கொண்டிருந்தாய்?'' என்றேன் சற்றுக் கோபத்துடன்.

அவன் பெரிதாகச் சிரித்துவிட்டான்.

"வேடிக்கை என்னடா? எல்லாம் உனக்கு வேண்டிய சமாசாரந்தான். மட்டம் தட்டுவதானால் இதுவரை யிலுமா அழைத்துக்கொண்டு வர வேண்டும்? வாசலி லேயே அனுப்பியிருக்க மாட்டேனா? ரொம்ப நாளாக என் மனத்தில் ஒரு யோஜனை; அதை உன்னிடம் சொல்ல லாம் என்றுதான் பிடித்துக்கொண்டேன். இனிமேல் இப்படி நீயும் டபாய்க்க முடியாது தெரியுமா?" என்று நடராஜன் சொன்னது எனக்கு வேடிக்கை யாகவே தோன்றியது.

"சரி, சரி; நீ எப்போதும் இப்படித்தான். ஆரம் பித்துவிட்டாயானால் அவ்வளவுதான். நான் போக வேண்டும்" என்றேன்.

"எங்கே? அத்திம்பேரைப் பார்க்கத்தானே? வா, நானும் வருகிறேன்" -என்று வண்டியை எடுத்துக் கொண்டு வந்தான். இருவரும் அதில் ஏறிக்கொண்டோம்.

நாங்கள் போனபோது அத்திம்பேர் சாப்பாட்டை முடித்துக்கொண்டு சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொண் டிருந்தார். வெற்றிலை மடித்துக் கொடுத்துக்கொண் டிருந்த குஞ்சு எங்களைக் கண்டவுடன் உள்ளே சென் றாள்.

அத்திம்பேர் என்னை, 'வா' என்று அழைத்து விட்டு நடராஜனைப் பலமாக உபசாரம் செய்தார்.

"வாப்பா, யார் நடராஜனா? வரணும் வரணும்" என்று பிரமாதத் தடபுடல்படுத்தினார்.

உலகத்தில் பணம் என்றால் அவ்வளவு மதிப்பு!

வெகுநேரம் உட்காருவதற்குப் பொழுது ஏது? நான் அத்திம்பேரையும் குஞ்சுவையும் கூப்பிட்டுவிட்டு, "கிளம்பலாமா நடராஜா?" என்றேன்.

அவனும் எனக்காகத்தானே வந்தான்? உடனே கிளம்பிவிட்டான். வண்டி எங்கள் வீட்டை நோக்கி வந்துகொண்டிருந்தது.

"என்னடா? உங்க அத்திம்பேர் அடிக்கடி ஆத்துக்கு வருவதுண்டா?" என்று என்னைக் கேட்டான் நடராஜன்.

"வராமல் என்ன? கேள்வி விசித்திரமான்னு இருக்கு. எங்களுக்கென்ன சண்டையா? பூசலா?" என்றேன் நான்.

"அதற்கு இல்லேடா. ஒரு விஷயம் கேள்விப்பட்டேன். அது உண்மையா அல்லது வீண் வம்புதானு என்று தெரிந்துகொள்ளலாம் என்று பார்க்கிறேன். நீ கேட்பதைப் பார்த்தால் உனக்கு ஒன்றுமே தெரியாது போல் இருக்கிறதே?" என்றான் அவன்.

நடராஜன் இப்படிச் சொன்னபோது எனக்குத் தூக்கிவாரிப்போட்டதுபோல் இருந்தது.

"யார், அத்திம்பேரைப்பற்றியா? யார் சொன்னார்கள் உனக்கு? விஷயம் என்ன?" என்றேன் நான். ஏதோ இல்லாவிட்டால் அவன் அப்படிச் சொல்லமாட்டான் என்பது எனக்குத் தெரியும்.

ஆனால் நடராஜன் ஏதோ தப்புச் செய்துவிட்டவன் போல் உதட்டை இழுத்துக் கடித்துக்கொண்டான்.

"ரொம்ப நல்லதாகப் போச்சு. தெரியாதவரையில் க்ஷேமம். எதையாவது அப்பாவிடம் உளறிவைக்காதே போ!" என்று அவன் முடிப்பதற்குள் வண்டி எங்கள் வீட்டு வாசலை அடைந்தது. எனக்கு வேதனையாக இருந்தது. வண்டியிலிருந்து இறங்கிக்கொண்டே, "சொல்லித் தொலையேன்டா விஷயத்தை" என்று நான் கேட்டுக்கொண்டிருந்தேன். அவன் வேகமாக வண்டியைத் திருப்பிக்கொண்டு சென்றுவிட்டான்.

"ஊரில் எல்லோருக்கும் நம்மைப்பற்றித் தெரிந்துவிடுகிறது. நமக்கு மாத்திரம் ஓர் இழவும் தெரிகிறதில்லை" என்று எனக்குள் சொல்லிக்கொண்டே உள்ளே நுழைந்தேன்.

"என்னடா இவ்வளவு நேரம்?" என்றான் ராமு.

"குஞ்சுவைப் பார்க்கப் போனேன்" என்று சொல்லிக்கொண்டே உள்ளே வருவதற்குள், "என்ன சொன்

ருள்? அத்திம்பேரைப் பார்த்தாயா? இன்னும் சாப்பிட வில்லையே நீ?'' என்று அத்தை கேள்விக்கு மேல் கேள்வி யாக அடுக்கிக்கொண்டே வந்தாள்.

எனக்கு இருந்த வேதனையில் அவள்பேரில் 'சிள் ளென்று விழுந்தேன்.

''ஆமாம்! இங்கேயிருந்து போ, போ, என்று துரத்து வது. அங்கே போனல் யார் இருக்கிருர்கள்? இவ்வளவு நேரம் காத்துக்கொண்டு கிடந்தேன். அத்திம்பேரால் வர முடியாதாம்; குஞ்சுதான் வருவதாகச் சொன்னுள்'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டேன்.

'நடராஜன் எதைப்பற்றிச் சொல்லியிருப்பான்?' என்று என் மனம் எங்கே எல்லாமோ அலைந்துகொண் டிருந்தது. 'நம் வீட்டுச் செய்தி நமக்கே தெரிகிறதில் லையே' என்று நினைத்துப் பார்த்தபோது வேடிக்கையாக இருந்தது.

# 4

## தங்கம் வந்தாள்

மன்னியின் ஜோஸ்யம் பலித்தது. மறுநாள் பொழுது விடிவதற்குள் அப்பா தங்கத்துடன் வந்து சேர்ந்தார். குழந்தை நன்றாக வளர்ந்து 'ஸெலுலாய்டு' பொம்மை யைப்போல் இருந்தது. வீட்டில் நாலைந்து குழந்தைகள் ஓடுவதைப் பார்த்து எனக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது.

"என்னடா சீமா, இளைத்துப்போய் என்னமோ போல் இருக்கயே?" என்றாள் தங்கம். என் முகம் என்ன மாக இருந்தது என்று எனக்குத் தெரியவில்லை. "ஒன்றும் இல்லையே!" என்றேன்.

"குஞ்சுவைக் கூப்பிட்டுவிட்டு வந்தாச்சாடா?" என் றார் அப்பா.

"உம்" ... என்பதற்குள், "சித்தியைக் கூப்பிட வேண் டாமா?" என்றாள் தங்கம்.

அப்போதுதான் எனக்கும் நினைவு வந்தது. "அத்தை ஒன்றும் சொல்லலையே" என்றேன். அவள் எப்படி மறப்பாள்?

"ஆமாம். பச்சைக் குழந்தையோ நீ? இதுகளுக்கே ஒரு காரியமும் தோணாது" என்று அலுத்துக் கொண் டார் அப்பா.

தங்கமும் மன்னியும் அத்தை இருந்த இடத்துக்குப் போனார்கள். அங்கே வெட்கப்பட்டுக்கொண்டு நின்று கொண்டிருந்த ருக்குவைப் பார்த்ததும் அதிசயமாகப் போய்விட்டதுபோல் இருந்தது.

"அடே! ருக்கு மேலாக்குப் போட்டுக்கொண்டு பெரி யவளாக வளர்ந்துவிட்டாளே?" என்று அவளைப் பிடித் துக்கொண்டு வந்து அப்பாவின்முன் நிறுத்தினாள் தங்கம்.

"கல்யாணமும் பண்ணிவிடுகிறது" என்றுர் அப்பா சிரித்துக்கொண்டே. "குறைச்சலென்ன?" என்று அத்தை அலுத்துக்கொண்டது என் காதில் விழுந்தது.

எப்போதும் அதிகப்படி காரியம் என்றுல் ஒரு சித் தாள் போட்டுவிடச் சொல்லுவார் அப்பா. ஒரு கிழவி வந்து கூடமாடச் செய்துகொண் டிருந்தாள். அத்தை வேண்டியதைப் பார்த்து எடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்தாள். "மன்னி கைக்குழந்தைக்காரி. சீக்கிரம் குளிக்க வேண்டாம்" என்றுள் அத்தை.

திவசம் என்றுல் ராமு வெகுநேரம் ஆக்குவான். அப்பா அதுவரையில் பட்டினியோடும் பசியோடும் இருந்தால் தள்ளாது என்று சீக்கிரமே சாப்பிட்டுவிட்டார். எல்லோருமாக உட்கார்ந்து பேசிக்கொண் டிருந்தோம். 'காலையிலேயே வருகிறேன்' என்ற குஞ்சுவைப் பத்து மணி ஆகியும் காணவில்லை.

"அத்திம்பேரை ஆபீசுக்கு அனுப்பிவிட்டு வருவதானுல் கொஞ்ச நேரம் ஆகாதா?" என்றுள் தங்கம்.

"வந்தால் சொல்லு" என்று சொல்லிவிட்டு அப்பா படுக்கைக்குச் சென்றுவிட்டார்.

ராமு எழுந்து வந்து நிதானமாக எல்லாம் செய்து முடிக்க மணி இரண்டு ஆகிவிட்டது.

அதற்குமேல், ராமு, நாங்கள் எல்லோரும் சேர்ந்து சாப்பிட உட்கார்ந்தோம்.

குஞ்சு ஏன் இப்படி வராமல் வைத்துவிட்டாள். என்று எல்லோருக்கும் கவலையாக இருந்தது.

என் எண்ணம் எங்கே எங்கேயோ போய் அலைந்து கொண்டிருந்தது.

நடராஜன் சொன்ன விஷயத்தைச் சொல்லிவிட வேண்டும்போல் இருந்தது. அங்கே இருந்தால் வம்பு என்று எழுந்து போய்விட்டேன்.

அன்று முழுவதும் வீட்டில் ஒரே அமர்க்களம். குழந்தைகள் கூச்சல் ஒரு பக்கம்; ஒரு பக்கம் ஒரே கல்யாணப் பேச்சாகவே இருந்தது. திடீரென்று என் கல்யாணத்துக்கு

என்ன இவ்வளவு முடை என்பதுதான் எனக்குப் புரிய வில்லை; எல்லாம் தங்கத்தின் வேலை.

காலேஜுக்குப் போய்விட்டு வந்து படித்துக்கொண் டிருந்தேன். அப்போது கூடத்தில் அப்பாவும் அவளும் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்க மிகவும் வேடிக்கையாக இருந்தது. 'அதை ஏன் கேட்டுக்கொண்டிருக்க வேண்டும்; படிப்பதுதானே?' என்றால் உலகத்தில் எல்லோரையும் ஒரே மாதிரியாக நினைத்துவிடுகிறார்களே? அதுதான் வேடிக்கை.

தங்கம் அவர்கள் வீட்டு யோகக்ஷேமங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தவள், "ஏன் அப்பா, சீமாவுக்கு ஒரு கல்யாணத்தைச் செய்துவிடேன். அதை முடித்துவிட்டால் உனக்கும் ஒரு பாரம் விட்டது. வீட்டில் இரண்டு பேர் நடமாடிக்கொண்டிருந்தால்தான் கலகலவென்று இருக்கும்" என்றாள்.

என்னிடமோ அல்லது வீட்டில் வேறு யாருடனோ அப்பா இதைப்பற்றி ஒன்றும் பேசியதே இல்லை.

"அதுதான் எனக்கும் மனத்துக்குள். இந்த ஒரு வருஷப் படிப்பு முடிந்துவிடட்டும். அவனையும் ஏதாவது ஒன்றில் இழுத்துப்போட்டு ஒரு கல்யாணம் செய்துவிட வேண்டும் என்பதுதான் என் எண்ணம்" என்றார் அவர்.

"அதற்காகப் படிப்பை ஏன் நிறுத்த வேண்டும்? அவன்பாட்டில் படிக்கட்டுமே. இதற்கும் அதற்கும் என்ன!" என்றாள் தங்கம். அப்பா ஒன்றும் சொல்லாமல் சிரித்துக்கொண்டார். அதன் கருத்தும் எனக்குத் தெரிய வில்லை.

படிப்பை இத்துடன் நிறுத்த வேண்டும் என்ற எண் ணம் எனக்குப் பிடிக்கவில்லை. ஏதாவது நல்ல உபயோக மான வழியில் படித்துக் கவலை இல்லாமல் சம்பாதிக்க வேண்டும். ஒருவர் கையை எதிர்பார்த்துக்கொண்டு நிற் பது என்ன அசட்டுத்தனம்?

அப்பா இப்படியே சிரஞ்சீவியா, அம்மணி கூறுவது போல்? பொழுது விடிந்தால் நம் வீடு இருக்கும் இருப்பும் லோலோவென்று காசுக்குப் பறக்கும் பறப்பும்! நினைத்

துப் பார்க்கவே என்னுல் முடியவில்லே. ஏதாவது ஒரு முடிவுக்கு வர வேண்டியதோ, வேறு ஏற்பாடு செய்வதோ ஒன்றைத் தீர்மானமாகச் செய்ய வேண்டும் என்று தோன்றியது. 'டர்ம்' பீஸ் கட்டுவதற்கு அப்பா வுக்குக்கூட மறந்துவிட்டதென்ருல் என்ன செய்வது? அவர் இருக்கும் நிலையில் ஒன்றும் கேட்கவும் முடியவில்லே; கேட்காமல் இருக்கவும் முடியவில்லே. ராமுவைப்பற்றித் தான் கேள்வியே இல்லே. அவன் நம்மைக் கேட்காமல் இருந்தால் போதும். ஆனுல் ஒரு வழி இருந்தது. கூடப் பிறந்தவர்கள் நான்கு பேரும் பத்துப் பத்து ரூபாய் அனுப் பினுர்களானுல் எனக்கு என்ன குறைவு? இது அவர்களுக் காகத் தோன்ற வேண்டுமே ஒழிய மற்றவர் சொன்னுல் நன்ருக இருக்காது. 'தனக்காகத் தெரியக்கூடாதா?' என்று வருத்தமாகத்தான் இருந்தது. மற்ரென்று. இதைப்பற்றி ஒன்று நானுவது பிரஸ்தாபிக்க வேண்டும் அல்லது அப்பாவாவது பிரஸ்தாபிக்க வேண்டும். இல்லா விட்டால் அவர்களுக்கு எப்படித் தெரியப்போகிறது? எல்லாம் சரியாக நடந்துகொண்டு இருக்கிறதென்றுதான் நினைத்துக்கொண் டிருக்கப் போகிருர்கள். அப்பாவின் போக்கு ஒரு வேளையைப்போல் இருக்கவே இருக்காது அவரை விட்டுக்கொடுக்கவும் பிடிக்கவில்லே. ஆனுல் இதைப்பற்றிப் பிரஸ்தாபம் வந்திருக்கும்போது கட்டா யம் தங்கத்தினிடம் பேச வேண்டும் என்று தீர்மானம் செய்துகொண்டேன்.

அதற்குள், "ஏன் அப்பா யோஜனே செய்கிருய்? அவன் என்ன சொல்லுகிருன்?" என்ருள் தங்கம்.

"நான் நினேப்பதுபோலவே அவரும் நினேக்கக் கூடாதா?" என்று ஆசையாக இருந்தது எனக்கு. ஆனுல் அப்பா ஒரே நிமிஷத்தில் என் ஆசை எல்லாவற்றையும் பாதாளத்தில் தள்ளி அழுத்திவிட்டார்.

"ஆமாம்! இந்தக் காலத்தில் ஒவ்வொருவனும் படித்துவிட்டு என்ன புரட்டிவிடுகிருன்? காசையும் கரி யாக்கிவிட்டு உட்கார்ந்துகொண் டிருக்கிறதுகள். பணத் தைக் கொட்டி வைத்துக்கொண்டு என்ன செய்வதென்று தெரியாதவர்கள் எதை வேண்டுமானுலும் செய்துகொண்

டிருக்கலாம். நமக்கு அப்படியா? 'ஏதோ கவலை இல்லை. பட்டினி கிடக்கமாட்டான்' என்று பார்த்தால்தானே எனக்குத் திருப்தி?'' என்று ஒரே தீர்மானமாகச் சொல்லி விட்டார்.

ஆனால் தங்கத்தைப்பற்றி நான் எண்ணியது சரியாகவே இருந்தது.

''நீ எதற்காக அப்பா இதற்கெல்லாம் கவலைப்பட வேண்டும்? கூடப் பிறந்தவர்கள் நாங்கள் நாலைந்து பேர் இன்று இல்லையா? தரித்திரபக்ஷம் ஆளுக்கு ஒரு பத்து ரூபாய் அனுப்பினேனுமானால்கூட உனக்கு என்ன கவலை? படிப்பில் அவனும் துடியாக இருக்கிறான். எதற்காக விலக நிறுத்தவேண்டும்?'' என்று எனக்குப் பரிந்து கொண்டு வந்தாள்.

எவ்வளவு ஏமாற்றம் இருந்தாலும், 'அவளாவது இவ்வளவு கவலை வைத்துக்கொண் டிருக்கிறாளே' என்று சிறிது சந்தோஷமாக இருந்தது. கையில் இருந்த புத்தகத்தை மூடிவிட்டு மேல் என்ன நடக்கிறது என்று கேட்டுக்கொண் டிருந்தேன். நானும் சென்று கலந்துகொள்ள வேண்டுமென்று ஆசைதான்; ஆனால் பயமாக இருந்தது.

''நீ கூறுவதெல்லாம் சரிதாம்மா! எனக்கும் சந்தோஷம். உங்க ஆத்துக்காரருக்கும் ஒரு வேலை என்று கிடைத்துவிட்டால் நான் அதைப்பற்றிக் கவலைப்படப் போவதில்லை. இப்போது அவனும் ஒருவர் கையைத் தானே எதிர்பார்த்துக்கொண்டு இருக்கவேண்டி இருக்கிறது? இல்லாவிட்டால் இவனை உன்னிடமே விட்டுவிடுவேன். கவலையில்லாமல். அவள் - பட்டு, எங்கேயோ இருக்கிறாள்; வரப் போகக்கூட முடிகிறதில்லை. பாபுவைப்பற்றித்தான் கேட்டாலே கவலையாக இருக்கிறது. போட்ட கடிதத்துக்குக்கூட அந்தப் பெண் பதில் போடவில்லை. இதோ பாரேன் குஞ்சுவை! போய்க் கூப்பிட்டுங்கூட வரவில்லை. எனக்குந்தான் வயதாகிவிட்டது. இதையெல்லாம் எப்படி நம்புவது; சொல்லு'' என்றார் அப்பா.

குஞ்சு வராமல் இருந்தது எல்லோருக்கும் கவலைதான். 'ஏன் இப்படி வராமல் இருந்துவிட்டாள்? ஒரு

சமயம் குழந்தைகளுக்கு ஏதாவது உடம்போ? சீமாவைப் போய்ப் பார்த்துவிட்டு வரச்சொல்லுகிறேன். இல்லா விட்டால் நாளைக்கு நானே போகிறேன்' என்றாள் தங்கம்.

"உம்......இந்தப் பஸ்ஸுக்கும் வண்டிக்கும் காத்துக் கொண்டு இருக்க வேண்டுமென்றால் எனக்கும் மிகவும் அலுப் பாக இருக்கிறது. இருக்கட்டும். எங்கேயாவது நன்றாக இருந்தால் சரி" என்று அப்பா பெருமூச்சு விட்டபோது எனக்கு என்னவோ வேதனை செய்தது. நாலைந்து குழந்தை களைப் பெற்றுவிட்டால் எப்போது பார்த்தாலும் வேத னையும் விசாரத்தையும் தவிரச் சந்தோஷம் என்பது இருக் கக் கூடாதா? 'விரலுக்குத் தகுந்த வீக்கம்' என்பது போல் எப்படி இருந்தாலும் அதற்குத் தகுந்த கவலை ஒன்றை வைக்காமல் ஈசுவரன் யாரைத்தான் விட்டு விட்டார்?

பெருமூச்சு விட்டுக்கொண்டே, "உங்க நாத்தனாருக்கு என்ன உடம்பு? என்னவோ தடபுடல் படுகிறதே உங் காதில்" என்றார் அப்பா. அப்போது அத்தையும் வந்து பேச்சில் கலந்துகொண்டாள்.

"எந்தப் பொண்ணுக்கு? போன வருஷம் கல்யாணம் ஆச்சே அதுக்கா? என்ன உடம்பு?" என்றாள் அவளும்.

"இல்லை அத்தை. எங்க லலிதா இருக்காளோன்னு அவளுக்கு. வைத்தியன்களுக்கே என்னவென்று சொல்லத் தெரியவில்லை" என்றாள் தங்கம்.

"அப்படி ஒரு புது வியாதியா? நீங்கள் அழைத்துக் கொண்டு வந்துஎவ்வளவு நாள் ஆகிறது? அவள் புக்ககத் தில் ஒன்றும் பார்க்காமேயா இருந்தா, இதுவரையிலும்?" என்றார் அப்பா.

"பார்க்காமல் இருந்துவிடுவார்களா? அவர்களும் எவ்வளவோ பார்த்துவிட்டுத்தான் எங்களுக்கு எழுதினார் கள். மாமனார் போய் அழைத்துக்கொண்டு வந்தார்" என்றாள் தங்கம்.

"அதென்ன போடியம்மா! சின்னஞ் சிறுசுகளெல் லாம் இப்படி வியாதி கொண்டாடுமோ? எல்லாம், 'எடுப்பாரும் புடைப்பாரும் இருந்தால் புள்ளை களைத்

தாற்போல் இருக்கும்' இங்கராப்பலேதான் இருக்கு" என்று அத்தை கூறியவுடன் எனக்கு அங்கேயே சிரிப்பு வந்துவிட்டது.

"என்ன அத்தை? அடுக்கறயே பிரமாதமாக?" என்று கேட்டுக்கொண்டே எழுந்து வந்துவிட்டேன். அவளும் வந்தது கொஞ்சம் தைரியமாக இருந்தது.

"ஒன்றும் இல்லேடா, உலகம் இருக்கிற இருப்பைப் பார்த்தால் வேடிக்கையாக இருக்கு. அதுக்குத்தான் சொன்னேன். நம்மாத்துக் குழந்தைகளைப் பாரேன். ஏதாவது கொண்டாடுகிறதா? கொண்டாடினால்தான் யார் இருக்கா கேட்க? உன்னையும் பார்த்துக்கொள்ளேன். உங்க அம்மா ஒருத்தி இருந்தா இருக்குமா இப்படி எல்லாம்? இருகிறன்னு குழந்தைகள் வருகிறதும் செய்யறதும் வேறேதான். நான் இருக்கேன் சோத்துக்குப் பாரமாக! வான்னுக்கூட வரதுகளா இதுகள்? அந்தப் பொண்ணு மேலே மேலே எழுதுகிறது. ஒரு பத்து ரூபாய் அனுப்ப முடியல்லே இருக்கிற இருப்பு. இந்தப் பொண்ணு இங்கேயே இருக்குன்னு பேரு. அதைப் போய் எட்டிப் பாத்துட்டு வரத்துக்கு முடியவில்லை" என்றாள் அத்தை.

"அம்மா இருந்தா இப்படிப் பேசுவாளா முதல்லே எல்லாரும்?" என்றாள் தங்கம்.

"நானும் இப்படித் திண்டாட வேண்டுமா?" என்று நான் நினைத்துக்கொண்டேன்.

"சரி, அப்படி என்ன செய்கிறது? ஜுரம் ஏதாவது வருகிறதா? பார்த்தால் நமக்கு என்ன தோன்றுகிறது?" என்றார் அப்பா.

"அதுதான் அப்பா மிகவும் வேடிக்கையாக இருக்கிறது. ஓகோவென்று அப்படி ஜுரமும் இல்லை. உடம்பும் நன்றாக இருக்கிறது. 'லங்' நன்றாக இருக்கிறது என்கிறார் வைத்தியர். நம்ம ஊர் டாக்டரை விடக் கெட்டிக்காரன் யார் வந்து பார்க்கப் போகிறான்?" என்றாள் தங்கம்.

"ஒருவேளை மனத்தில் ஏதாவது விசாரப்படுகிறதோ? அவனும் நல்ல வேலையில்தானே இருக்கிறான்? மாமியா

ராத்தில் நன்றாக வைத்துக்கொண் டிருக்கிறார்களோ இல்லையோ?'' என்றார் அப்பா.

''மாமியாரைப்பற்றிக் கேட்க வேண்டாம். தங்கமான மனுஷி. மாமனார் அதற்குமேல் தங்கக் கம்பி. இப்பவும் வாரத்துக்கு ஒரு தடவை பழமும் மருந்துமாக வாங்கிக்கொண்டு வந்து பார்த்துவிட்டுத்தான் போகிறார்கள். எதைச் செய்தால் என்ன? ஒன்றும் பிரயோஜனந்தான் இல்லை. மருந்தும் மாயமும் கொடுக்கிறதெல்லாம் எங்கேதான் போகிறதோ எனக்கே வேடிக்கையாக இருக்கிறது?'' என்றாள் தங்கம்.

''எழுந்து நடமாட்டம் ஏதாவது உண்டா? உங்க மாமியார் அன்னிக்கி அவளைத் தூக்கி உட்காரவைத்துக் கொண்டிருந்தாளே?'' என்றார் அப்பா.

''நடமாட்டமா? எப்போது பார்த்தாலும் ஒரே இருமிருப்பு, மயக்கம்; இதெல்லாம் மிகவும் பயங்கரமாக இருக்கிறது. ஆளைப் பார்த்தால் நமக்கு ஒன்றுமே தெரியவில்லை. அலக்ஷ்யமாக நான்கு அடி எடுத்து வைத்துவிட்டால் அப்படியே விழுந்துவிடுவாள்; கட்டையோடு கட்டையாகப் போட்டுவிடுகிறது. சாப்பாட்டில் குறைவில்லை; ஒன்றிலும் குறைவில்லை. 'உடம்பு என்ன? எப்போதும் இப்படித்தான் இருக்கப் போகிறது' என்று அவளே அலுத்துக்கொள்கிறாள் பாவம். மாமியார்தான் வேறு என்னவோ யோஜனை செய்துகொண்டு இருக்கிறார்'' என்று தங்கம் முடிப்பதற்குள் அத்தை அவசரமாக ஆரம்பித்தாள்.

''ஆமாண்டீ! ஆமாம், ஏதாவது குத்தம் இல்லாட்டாப் பேய் பிசாசு என்றால்தான் இப்படியெல்லாம் இருக்கும். 'ஆள் அழகா, துப்பட்டிக்காரான்னு' இருந்து என்ன செய்வது? இதெல்லாந்தான் அப்படிப் படுத்தும். இரு இருக்கவாவது கட்டையோடு கட்டையாப் போடவாவது! ஒரு ரக்ஷை ஏதாவது கட்டணும் பார்த்து. பட்டண வாசத்தில் இருக்கிறவாளுக்கு இதெல்லாம் எங்கே தோணப் போறது? 'திருடனை உள்ளே வச்சுக் கதவைச் சாத்தினாப் பலே' வியாதியா இருந்தா இத்தனை நாளைக்குள் உடம்பு

தரும்பாய்ப் போய்டாதோ?" என்று அடுக்கினாள் அத்தை.

அவள் பேசுவது எங்கள் எல்லோருக்கும் வேடிக்கை யாக இருந்தது.

"என்ன அத்தை? அடுக்கிண்டே போறயே? உன்னைக் கொண்டுபோய் விட்டால் உடனே வைத்தியம் செய்து விடுவாய்போல் இருக்கே" என்றேன் நான்.

"பின்னே என்னடா? 'கைப் புண்ணுக்குக் கண்ணா டியாம்', இங்கராப்பலே, கிருகிருன்னு வரதாம், கட்டை யோடு கட்டையாப் போடறதாமே? வீட்டுலே பெரிய வான்னு இருந்தா இதைன்னு மொதல்லே கவனிப்பா."

"ஏண்டி! உங்க மாமியாருக்குத் தோணலையா இதெல்லாம்? அவளும் பத்துப் பிள்ளைகுட்டி பெத்தவ ளாச்சே" என்று கேட்டாள் அத்தை. தங்கத்துக்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை.

"ஏன் அத்தை உனக்கு இவ்வளவு ஆத்திரம்? அவாவா அவாவா காரியத்திலே கரிசனம் இல்லாமயா இருப்பா? இப்போதே போய்ச் சொல்லிவிட்டு வந்துவிடு வாய்போல் இருக்கிறதே? எங்க மாமியாரும் நித்தியம் ஏதோ செய்துகொண்டேதான் இருக்கா" என்றாள் தங்கம்.

"ஏதாவது தெய்வக்குத்தமாய்த்தான் இருக்கணும்! அப்படி ஏதாவது உண்டோ அவாத்துலே?" என்று அத்தை குறுக்கே பாய்ந்தாள்.

"இப்படி அவசரப்பட்டா என்னாலே ஒண்ணுமே சொல்ல முடியாது அத்தை. ஒவ்வொன்றாகச் சொல்லிக் கொண்டுதானே வரணும்?" என்று தங்கம் சற்றுக் கோபித்துக்கொண்டதும் எனக்கு யோசனையாக இருந் தது. அத்தை ஏதாவது கோபித்துக்கொண்டுவிடு வாளோ என்ற பயம்.

"என்னமோ அவளுக்கு அவ்வளவு ஆவல்; கேக்கரா. உனக்கு ஏன் இவ்வளவு கோபம் வருகிறது?" என்றேன் நான்.

"உம்......உம்...உங்க மாமியார் என்ன சொல்ரு? நல்ல ரசைஷ கட்டுகிறவன் உங்க ஊரிலே யாராவது இருக்கானு? இல்லையா?" என்ருர் அப்பா.

"மலையாளத்திலே இதைப்பத்தியா கேக்கனும்? இதுக்கே பேர் போனதாச்சே. அதனுல்தான் எனக்கு முதலில் அவ்வளவு சந்தேகம் தட்டினதுகூட" என்ருள் அத்தை.

"பேயும் இல்லே; பிசாசும் இல்லே. ஏதோ தெய்வக் குத்தம்" என்கிருள் மாமியார்.

"அப்படி என்ருல்" என்ருேம் மூவரும் ஒரே மூச்சில்.

"அவள் புக்ககத்தில் எவ்வளவோ வருஷங்களாகச் சுமங்கலிப் பிரார்த்தனை நின்றுபோய் இருக்கிறதாம்; அதுதான் இந்தப் பெண்ணைப் பிடித்து ஆட்டுகிறதாம் இப்படி - என்று கோபித்துக்கொள்ளுகிருள் மாமியார்" என்ருள் தங்கம்.

"சுமங்கலிப் பிரார்த்தனை செய்யாவிட்டால் இப்படி எல்லாம் வந்துவிடுமாமோ? பைத்தியந்தான்" என் றேன் நான். சிறிது நேரம் அப்பாவும் பேசவில்லை; அத்தையும் பேசவில்லை.

"உம்......அதுதான் இப்படி ஆட்டிவைக்கிறது. குத் தம்னு இதெல்லாம் சாதாரணக் குத்தமா? அப்படியே குடித்தனத்தையேன்னு அழிச்சுடும்! போனவ வாயார வாழ்த்தினுன்னு குழந்தையும் குட்டியும் நன்ருக இருக் கும்" என்று சொல்லிக்கொண்டே வந்த அத்தை அப்பா வின் முகத்தைப் பார்த்தாள்.

அப்பா ஒரு பெருமூச்சு விட்டார். அவர்கள் இருவரு டைய முகமும் ஏன் அப்படி மாற வேண்டும் என்று எனக் குத் தெரியவில்லை.

"ஏன் அத்தை? திடீரென்று வாயை மூடிக்கொண்டு விட்டாயே?" என்ருள் தங்கம்.

அத்தை என்னையும் அப்பாவையும் பார்த்துவிட்டு, "நம்மாத்திலும் குழந்தைகள் எல்லாம் நன்னு இருக்கனு மேன்னு ரொம்பக் கவலையாக இருக்கு" என்று எல்லோ ரையும் மாறி மாறிப் பார்த்தாள்.

அப்பா ஒன்றும் பேசவில்லை. என்றால் பேசாமல் இருக்க முடியவில்லை. "அதுக்கும் நம்மாத்துக்கும் என்ன சம்பந்தம் இப்போ?" என்றேன்.

"நம்மாத்திலும் இப்படிச் சுமையாகச் சுமத்தி வச்சிருக்கே என்று நினைக்கும்போது எனக்கு அப்படியே பகீர் என்கிறது வயத்தே. தாயில்லாக் குழந்தைகள் எங்கேயோ நன்றாயிருக்க வேண்டாமா?" என்றாள் அத்தை.

"நம்மாத்திலே எதற்கு இப்போ சுமங்கலிப்பிரார்த்தனை?" என்றேன் நான் மறுபடியும் விடாமல்.

"என்னடா இது சீமா? அசட்டுப் பிசட்டுன்னு கேள்வி கேட்டுக்கொண்டிருக்கே, இப்படி? வீட்டில் சுமங்கலியா ஒருவர் செத்துப்போனால் சுமங்கலிப் பிரார்த்தனை ஒவ்வொரு வருஷமும் செய்யணும். அதைத்தான் அத்தை சொல்லுகிறாள். தெவசம் கழிந்து நம்மாத்திலும் நடக்கணுமோன்னோ?" என்றாள் தங்கம்.

"ஆமாண்டி, பெரிய வழக்கம். நாம்ப எதையோ பண்ணி இங்கே சாப்பிட்டுவிட்டமாறு அவளுக்குத் திருப்தியாகப் போய்விட்டதாக்கும்! எல்லாம் என்னமோ பைத்தியந்தான்" என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே திடீரென்று அப்பா குறுக்கிட்டார்.

"இந்தாடா! தெரியாத விஷயத்தில் எல்லாம் தலையிடாதே. இந்த விஷயங்களெல்லாம் உனக்கு என்ன தெரியும்? பேசாமல் எழுந்து போ!" என்று கொஞ்சம் கடுமையாகவே அப்பா சொன்னார்.

எனக்கே அசடு தட்டிவிட்டது. அப்பா இதுவரையிலும் ஒன்றும் பேசவில்லையே; அவருக்கும் என்னைப் போன்ற எண்ணமாகத்தான் இருக்கும் என்று நன்றாக மனத்தில் நிச்சயம் செய்துகொண்டுவிட்டேன்போல் இருக்கிறது; அவருக்குப் பரிந்துகொண்டு பேசுவதாக மனத்தில் எண்ணம்; நான் எழுந்திருந்தேன்.

"ஒவ்வொரு தடவையும் இப்படித்தான் தட்டிப் போகிறது. தங்கமும் வந்திருக்கிறாள்; ராஜமும் இருக்கிறாள்; குஞ்சுவையும் போய்க் கையோடு அழைத்துக்

கொண்டு வந்துவிடச் சொல்லு. நான் வரும்போது புடைவை பார்த்து எடுத்துக்கொண்டு வந்துவிடுகிறேன். இந்தத் தடவையாவது நடந்துவிடட்டும்'' என்றார் அப்பா, அத்தையைப் பார்த்து. அத்தையும் எதையோ நினைத்துக்கொண்டவள்போல் அவசரமாக எழுந்து போனாள்.

தங்கத்துக்கும் அப்பாவுக்கும் மன்னி காபி எடுத்து வந்து வைத்தாள்.

''குழந்தை முழித்துக்கொண்டு விட்டானா மன்னி?'' என்றாள் தங்கம்.

''ஒரு நாழியாச்சு; பேசிண்டு இருக்கேளே என்று பாலைப் போட்டிவிட்டேன்'' என்று சொல்லி விட்டு மன்னி போய்விட்டாள்.

காபி தம்ளர்களை எடுத்துக்கொண்டு தங்கமும் கிளம்பினாள்; நானும் மெள்ள நழுவினேன்.

கீழே குழந்தைகள் ஏக ரூட்டி செய்துகொண் டிருந் தார்கள். 'குஞ்சுவைப் போய்ப் பார்த்துவிட்டு வர வேண் டும்' என்றாள் தங்கம். ஆனால் மன்னி வர அன்று ஒழி யாதுபோல் இருந்தது. ''நாளைக்குச் சாப்பிட்டவுடன் போய்விட்டு வந்துவிடலாமே'' என்றேன் நான். தங்க மும் பேசாமல் இருந்துவிட்டாள்.

மாலையில் அப்பா வரும்போது ஏகமாகப் பழங்க ளும் கறி காயும் வாங்கிக்கொண்டு வந்தார்.

சுமங்கலிப் பிரார்த்தனைக்கு என்று நாலைந்து புடை வைகளும் எடுத்து வந்திருந்தார். தங்கத்தினிடம் கொடுத்து, 'எது வேண்டுமோ அத்தையைப் பார்த்து எடுக்கச் சொல்லு' என்றார்.

நல்ல அரக்கில் கோத்துவாங்கிய கரைபோட்ட மல்லிகைப்பொட்டுப் புடைவை ஒன்றைப் பொறுக்கி எடுத்தாள் அத்தை.

''கறுப்பில் சரிகைக் கரை போட்டு மிகவும் நன்றாக இருக்கிறதே, அத்தை'' என்றேன் நான்.

''சுமங்கலிப் பிரார்த்தனைக்குக் கறுப்புத்தான் எடுப் பாளா?'' என்று என்னை மடக்கினாள் தங்கம்.

# 5

## கல்யாணப் பேச்சு

நான், மன்னி, தங்கம் மூன்று பேரும் குஞ்சுவைப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்தபோது அத்திம்பேர் வாசலில் உட்கார்ந்துகொண் டிருந்தார்.

"அடாடா! எப்போ? கடுதாசுகூடப் போடாமல்" என்றேன்."

"நீ எழுதாவிட்டால் எனக்குத் தெரியாதா? ஜோஸ்யம் தெரிந்துகொண்டு வந்துவிட்டேன். 'எட்டு நாள் முந்தியே வந்து நடத்தி வைக்கணும்' என்று ஒரு கடுதாசு போடலாம் என்று நினைத்துக்கொண் டிருந்தாயோ மனசுக்குள்?" என்றார் அவர் சிரித்துக்கொண்டே.

"என்ன அத்திம்பேரே? ஒன்றும் புரியவில்லையே?" என்றேன்.

"புரியுமா? சின்னப் பாப்பாவோன்னோ? பாவம்!" என்று என்னை மடக்கினார்.

அத்திம்பேர் மிகவும் கலகலப்பான பேர்வழி. பரிகாசம் செய்வதென்றால் மிகவும் பிடிக்கும்.

"அதெல்லாம் இருக்கட்டும் அத்திம்பேரே! காபி எல்லாம் ஆச்சோ இல்லையோ?" என்றேன்.

"பேஷ், பலே கெட்டிக்காரன் ஆகிவிட்டாயடா நீ. எப்போது கற்றுக்கொண்டாய் இந்தத் திருப்பூந்துருத்தி உபசாரம் செய்ய? ஜோஸ்யரை அழைத்துக்கொண்டு வந்தேன். அத்தை இருக்கும் இடத்தில் சாப்பாட்டுக்கும் காபிக்கும் என்ன குறைச்சல்? வயிறுதான் இரண்டு வேண்டும்" என்றார் அவர்.

"ஜோஸ்யரா, யாரது? எதுக்கு இப்போ? என்ன அத்திம்பேரே?" என்று கேட்டேன்.

"யாராக இருந்தால் உனக்கு ஆக வேண்டியது என்னடா சீமா? கல்யாணத்தை முடித்துவைக்க வேண்டும்;




அதுதானே உனக்கு வேண்டியிருக்கு? இவ்வளவு பேர் எங்களுக்குச் செய்தபின் உன்னை மட்டும் விட்டுவிடுவார்களா? கவலைப்படாதே; மெத்தைக்குப் போ அங்கே என்று தங்கம் ஒருபக்கம் பரிகாசம் செய்தாள். அத்திம்பேருக்கு எப்போதும் இதே வேலைதான்.

இவர்கள் சொன்னது எனக்கு ஒன்றும் நன்றாக விளங்காவிட்டாலும், வீட்டில் கல்யாணப்பேச்சு ஏதோ நடந்துகொண்டிருக்கிறது என்பதுமட்டும் பட்டது. பேசாமல் உள்ளே போனேன். அப்போது மெத்தையில் அப்பா யாருடனோ சத்தம்போட்டுப் பேசிக்கொண்டிருந்தது காதில் விழுந்தது. சட்டையைக் கழற்றிப் போட்டுவிட்டு, யார் பார்க்கலாம் என்று மெத்தையைப் பார்க்கப் போனேன்.

அங்கே சென்றதும் எனக்கே பகீர் என்று ஆகிவிட்டது. எனக்கு இவ்வளவு மறதி இருக்கும் என்று நான் எண்ணவில்லை. 'அப்பா என்ன சொல்லுவாரோ?' என்று தேகம் ஒரு கணம் பதறிவிட்டது. நன்றாக எதிரில் போய் நின்றுவிட்டேன்; மறைந்து கொள்ளுவதற்கும் வழி இல்லை.

ஆனால் நான் இவ்வளவு பயந்துகொண்டேனே ஒழிய அப்பா என்னைக் கோபித்துக்கொள்ளவில்லை. என் மனத்தைத் தெரிந்துகொண்டவர்போல், 'ஏன் அங்கேயே நிற்கிறாய்? வாயேன் உள்ளே' என்றார்.

அப்பா ஒன்றும் கோபிக்காவிட்டாலும் அவர் என்ன சொல்லுவாரோ என்று எனக்கு மனத்தில் கொஞ்சம் உதைப்புத்தான். அவருக்குப் பின்னால் போய் நின்றேன். வேண்டியவர், அவ்வளவு சொல்லி அனுப்பினாரே. இப்படியா மறந்துபோய்விடுவது?' என்று நினைத்தபோது வெட்கம் தலைதூக்க முடியவில்லை.

"இவர்தான் நம்மாத்து ஜோஸ்யர்; தெரியாதா உனக்கு இவரை?" என்றார் அப்பா.

'ஓகோ! ஜோஸ்யரா? அதுதான் அவ்வளவு டிமிக்கி கொடுத்தார், ஆசாமி எனக்கு! ஆளுக்குத் தகுந்தாற் போல் பேசுவதற்கு இவர்களுக்கல்லவா தெரியும்? அடே

யப்பா! இவர்கள் சாமர்த்தியமாவது சாமர்த்தியம்!' என்று நினைத்துக்கொண்டேன்.

"உம்......எல்லாம் இந்தக் காலத்துப் பிள்ளைகளோன்னோ? அப்படி உடம்பே மறந்துபோய்விடுகிறது. நாம் ஏதாவது சொல்லலாமா?" என்றார் அவர்.

அவர் பேச்சிலிருந்து அப்பாவுக்கும் அவருக்கும் இதைப்பற்றிப் பேச்சு நடந்திருக்கும் என்று பட்டது. அத்திம்பேர் கேலி செய்கிறாரோ என்று சந்தேகமாக இருந்தது. உண்மையாக அப்பாவும் அவரும் ஏதோ கல்யாணத்தைப்பற்றித்தான் பேசிக்கொண்டிருந்தார்கள்.

ஜோஸ்யர் ஜாதகங்களை வைத்துப் புரட்டிக்கொண்டிருந்தார். "என்ன குழந்தை? கல்யாணம் வரது சீக்கிரத்திலேயே!" என்று அவரும் பரிகாசம் செய்ய ஆரம்பித்தார்.

"கல்யாணமாவது கார்த்திகையாவது? வேலை என்ன உங்களுக்கு? யாரோ இப்போப் பண்ணிக்கப் போறாப்பலே!" என்று காதில் பட்டதும் படாததுமாகச் சொல்லிக்கொண்டே கீழே இறங்கிப் போய்விட்டேன்.

இங்கே வந்தால் அதற்குமேல் இருந்தது. அத்திம்பேர் வந்த இடம் எப்படித்தான் இருக்கும்? அவரைக் கல்யாண மனுஷர் என்று நாங்கள் எல்லோரும் சொல்வோம். அதற்குத் தகுந்தபடி அவர் வந்தால் வீடு கல்யாணம் பட்ட பாடு படும். கடைசியில் ஒரு கல்யாணத்தையும் முடித்தேவிடுவார்; எல்லாம் விளையாட்டுத்தான்.

"இதோடா, இதோடா, இங்கே இருக்கா ருக்கு! எங்கே எங்கேயோ போய்த் தேடறயே?" என்று தரதரவென்று என்னைப் பிடித்துத் தாழ்வாரத்துக்கு இழுத்துக்கொண்டு போனார் அத்திம்பேர்.

"என்ன அத்திம்பேரே, இப்படிச் சின்னக் குழந்தை போல் விளையாடறேள்?" என்று நான் கேட்பதற்குள் குழந்தைகள் எல்லோரும் என்னை வந்து சூழ்ந்துகொண்டு விட்டனர்.

அவ்விடத்தில் இருந்த ருக்கு சிட்டாய்ப் பறந்துவிட்டாள்.

"சின்னவர்களைக் கேலி செய்யாமல் வேறு கிழத்தை யும் கட்டையையுமா கேலி செய்வார்கள்? ரொம்ப அழ காய் இருக்கே நீ கோபித்துக்கொள்வது?" என்று அத்திம் பேரும் குழந்தைகளும் ஒரே சிரிப்பாகச் சிரித்தார்கள்.

திடீரென்று வீடு இப்படி அமர்க்களப்பட்டுக்கொண் டிருந்ததே ஒழிய இதைக் கேட்டு என் மனத்தில் ஓர் உத் ஸாகமும் உண்டாகவில்லை. 'இரண்டு தம்பிடிக்கு வழியைக் காணவில்லை; படிப்போ லாட்டரியாக இருக்கிறது. 'கிடக் கிறதெல்லாம் கிடக்கட்டும்; கிழவனைத் தூக்கி மணையில் வை' என்று அத்தை சொல்வதுதான் எனக்கு நினைவு வந் தது. அதுவும் அல்லாமல் ஏதோ ஒரு விஷயம் என் மனத்தை உறுத்திக்கொண்டே இருந்தது. 'பேசாமல், ஒருவர் கண்ணிலும் படாமல் வெளியே போய்விடலாமா?' என்று தோன்றியது. கொஞ்ச தூரம் போனவுடன் அது வும் பிடிக்கவில்லை.

'ராமேசுவரம் போனாலும் சனீசுவரன் விடாது' என்பதுபோல மனத்தில் பிடை இருந்தால் எங்கே போனால்தான் என்ன? நிம்மதி எங்கிருந்து, ஆகாயத்தி லிருந்தா வந்துவிடும்? மனிதன் தன் மனத்தைக் கட்டுப் படுத்தி ஒரு வழிக்குக் கொண்டுவருவானானால் அவன் எந்த இடத்தில் இருந்தால் என்ன?' என்று இப்படி எல் லாம் என் மனம் சர்ச்சை செய்யத் தொடங்கிவிட்டது. வெளியே போனவன் மறுபடியும் வீட்டை அடைந்தேன். 'அத்திம்பேர் கண்ணில்மட்டும் படாமல் இருக்கவேண்டும்' என்று நினைத்துக்கொண்டு வாசலில் நுழைந்தேன். அவர் உட்கார்ந்துகொண்டு பத்திரிகை பார்த்துக்கொண் டிருந்தார். நல்லவேளையாக ஒன்றும் கேட்காமல் விட்டார்.

உள்ளே தங்கம் குழந்தையைத் தூங்கவைத்துக் கொண்டிருந்தாள். மன்னியும் எதிரில் உட்கார்ந்துகொண் டிருந்தாள். இருவரும் பேசாமல் உட்கார்ந்துகொண்டிருப் பதைப் பார்க்க எனக்குப் பிடிக்கவில்லை.

'வேடிக்கையாக ஏதாவது பேசிக்கொண் டிருப்பார் கள்; கேட்கலாம்' என்று வந்தால். "ஏன் ரெண்டு பேரும் இப்படி உம்மணாமூஞ்சிபோல் உட்கார்ந்து கொண் டிருக்கேள்?" என்றேன்.

"நாங்க இருப்பது கிடக்கு; கல்யாணம் என்றவுடன் உன் முகத்தில் ஏன் இப்படி பேஸ்து வைத்திருக்கிறது? அதைச் சொல்லு" என்ருள் தங்கம் சட்டென்று.

உடனே அவளுக்கு என்ன பதில் கூறுவது என்று எனக்குத் தோன்றவில்லை. சற்று யோசித்துவிட்டு, "ஏன நான் சம்பாதிக்கிற சம்பாதிப்பை என்ன செய்வதென்று தெரியவில்லை, பார்! கல்யாணம் ஒன்றுதான் குறைச்சல்" என்றேன்.

"இன்றைக்கு இல்லாட்டா நாளைக்குச் சம்பாதிச்சு விட்டுப் போறே. ஜோஸ்யர் சொல்லுவதைக் கேட்டா யாருல் சொல்லுவாய். உனக்கும் ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைத்துவிட்டால் அப்பாவுக்கு ஒரு பெரிய பாரம் விடுமோன்னோ?" என்ருள் தங்கம்.

"ஆமாம், ஜோஸ்யாளுக்கு என்ன? ஆசாமிகளைப் பார்த்துக்கொண்டு எதைச் சொல்ல வேண்டுமோ, சொன்னுல் சரியாக இருக்குமோ அதைத்தான் சொல்லுவார்கள். எங்கே, ஒரு மனிதனுக்குப் பிடிக்காத விஷயத்தைச் சொல்லட்டும் பார்ப்போம். அப்புறம் யாராவது அந்த ஜோஸ்யரிடம் போவார்களா? நீயே யோசித்துப்பார். 'உனக்கு ஒன்றும் வராது; யோகமே இல்லை' என்று சொல்லுகிருர் என்று வைத்துக்கொள். நீ போய்க் கேட்பாயா அவரை?" என்றேன் நான். ஜோஸ்யம் என்ருலே எனக்கு என்னவோ வெறுப்பாக இருந்தது.

"நம்மாத்து ஜோஸ்யரை நீ அப்படி நினைத்துவிடப் படாது சியா. எனக்கு மாத்திரந்தான் அவர் ஒன்றும் செய்யவில்லை; சொல்லவில்லை. அப்போ அப்பாவும் எங்கேயோ இருந்துவிட்டார். மற்றவா எல்லோருக்கும் அவர்தான் எல்லாம் பார்த்துச் செய்தாராம். முக்கால் வாசிக் கல்யாணங்கூட அவர்தான் முடித்துவைத்தாராம். அப்பாவைக் கேட்டுப் பார்; அவரைப்பற்றிச் சொல்லுவார். குழந்தையிலேயே என் ஜாதகத்தைப் பார்த்துவிட்டு அப்பாப் பெருமை அடித்துக்கொண்டாராம். இப்போ சொல்லேன்; எனக்கு என்ன குறைச்சல்?" என்ருள் தங்கம்.

என் மனம் எங்கெல்லாமோ அலேந்து திரிந்தது.

"சரி, எல்லாம் அப்படியே வைத்துக்கொள். அது போகட்டும். குஞ்சு என்ன சொன்னுள் கடைசியில்? வரு கிருளாமா?" என்றேன்.

"நீயுந்தானே எங்களுடன் இருந்தாய்?" என்று கேட்டாள் மன்னி.

"புறப்படும்போது நான் வாசலுக்கு வந்துவிட்டேன். அதனுல்தான் கேட்டேன்" என்றேன்.

"என்னமோப்பா என் மனத்தில் உள்ளதைச் சொல் லுகிறேன்; அவள் சொன்னத்தைக் கேட்டால், வருவாள் என்ற நம்பிக்கை எனக்கு இல்லே என்றுதான் சொல்லு வேன்" என்ருள் தங்கம்.

"ஏன்? ஏதோ சாக்குச் சொன்னுள் என்ருல் அதற் காக வரவே மாட்டாள் என்று வைத்துவிட்டாயா நீ அதற்குள்?" என்ருள் மன்னி.

"என்னமோ மன்னி, எனக்குத் தோன்றியதைச் சொன்னேன்" என்ருள் தங்கம்.

"அதிருக்கட்டும்; குழந்தைகள் எல்லாம் ஏண்டீ இப் படி இருக்கு தங்கம்? ஒவ்வொன்றும் மூஞ்சியும் மோரை யுமா இக்கறதே? அந்தப் பொண் இருக்கே ஸபீ. அது இருக்கிற இருப்பைப் பார்த்தாயா?" என்றேன் நான்.

அந்தக் குழந்தைகளைப் பார்த்தபோது எனக்கு உண்டான வேதனே இவ்வளவு அவ்வளவு இல்லே.

"நான் போன தடவை வந்தபோது குழந்தைகள் எப் படி நன்ருக இருந்தது தெரியுமாடா? கொழுகொழுன்னு ஸபீ திருஷ்டிப்படும்போல் இருந்தது. வீடும் வாசலும் அப்படிக் கிளி கொஞ்சிண்டுன்னு இருந்தது" என்று குறைந்துகொண்டாள் தங்கம்.

"அதெல்லாம் ஆச்சரியமில்லே சீமா! கலகல வென்று நம்மைக் கண்டால் வந்து ஒட்டிக்கொண்டுவிடும் குழந்தைகள். இப்போ ஒன்றும் வாயைக்கூடத் திறக்க மாட்டேங்கறதுகளே? நானும் ஆனமட்டும் பேசிப் பார்த் தேன். பேந்தப் பேந்த விழித்துக்கொண்டு குழந்தைகளே என்னமோ பிரமை பிடிச்சாப்பலேன்னு இருக்கு. வாயைத்

திறக்கமாட்டேங்கறதுகளே" என்றாள் மன்னி என்னைப் பார்த்து.

நான் பேச வாயெடுத்தேன். அதற்குள், "அடே! இன்னும் ஒன்று சொல்ல மறந்துவிட்டேனே, அவள், குஞ்சுதான் ஆகட்டும்! 'இரு, காபி சாப்பிட்டுவிட்டுப் போகலாம்' என்று ஏதாவது சொன்னாளோ, 'பார்த்தாயா?" என்றாள் தங்கம்.

"இல்லை தங்கம். அன்னிக்கித் திவசத்துக்கு வரவில்லையே, 'ஏண்டி நீங்கள்லாம் வரல்லே? தாத்தா கூடக் காத்துண்டு இருந்தாரே' என்று கேட்டேன் நான் ஸபியை. அதற்கு அது என்ன சொல்லித்துத் தெரியுமா? எல்லாரும் எங்கேயோ கோவிலுக்குப் போயிருந்தார்களாம். அங்கே யாரோ பெரியவாள் இருக்காளாம். இது தெரியுமா உனக்கு?" என்றேன் நான்,

"சொல்லும்போது குஞ்சுவின் முகத்தைப் பாத்தயோ நீ?" என்றாள் மன்னி அவசரத்துடன்.

"அதென்னமோ, வீடே களை போய்விட்டது. பிச்சைக்காரக் குழந்தைகளைப்போல் அதுகளைப் பார்த்தால் என்னமோ சொல்லத் தெரியாத வேதனை செய்கிறது" என்றாள் சிறிது நேரம் கழித்து மன்னி தானே.

"வரட்டும் மன்னி. அங்கேயே ஒன்றும் கேட்க வேண்டாம் என்று இருந்தேன். 'அவளையே கேட்டுவிடுகிறது' என்றுதான் வைத்திருக்கிறேன். அத்திம்பேருக்கும் பெரிய வேலையாகி இருக்கிறதென்று சொல்லுகிறாள். ஏன் இப்படிப் பேய்போல் நிற்கிறதுகள் என்பதுன்னு தெரியவில்லை" என்று தங்கம் சொல்லிக்கொண்டிருக்கும்போது, "என்னது பேயும் பிசாசும்? உங்காத்துக் கதையை ஆரம்பித்துவிட்டாயா நீ?" என்று கேட்டுக்கொண்டே வந்தார் அப்பா.

அவரைக் கண்டதும் மன்னி எழுந்திருந்து கிளம்பினாள். நானும் எழுந்தேன்.

"மன்னிதான் நாட்டுப்பெண்; அவர் வந்தால் எழுந்திருப்பாள். நீ என்னத்துக்கு எழுந்திருக்கறே இப்போ? நீயும் நாட்டுப்பெண்ணா?" என்று பரிகாசம் செய்தாள்

தங்கம். அப்பா இரேழி குழந்தைகளுடன் கொஞ்சம் விளை யாடிக்கொண்டு இருந்துவிட்டுச் சாப்பிட்டார். ஜோஸ் யர், அத்திம்பேர் இவர்கள் புது விருந்தாகையால் ஜோரான சாப்பாடு. அத்தை ஜமாய்த்திருந்தாள். எல் லோருடைய சாப்பாடும் முடிந்ததும் அத்திம்பேரும் ஜோஸ்யரும் ராமுவோடு பேசிக்கொண் டிருந்தனர். ஜோஸ்யம் என்றால் ராமுவுக்கும் கொஞ்சம் பைத்தியம்.

நான் அவர்கள் பந்தியில் உட்காரவில்லை. மன்னி, தங்கம், அத்தை எல்லோரும் உட்கார்ந்தபோது நான் சாப்பிட்டேன். அப்பாவும் நாங்கள் சாப்பிடும்வரையில் திண்ணையில் உட்கார்ந்துகொண்டு பார்த்துக்கொண் டிருந்தார். மெத்தைக்குப் போகும்போது, "சிமா, மெத் தைக்கு வாடா" என்று சொல்லிவிட்டுப் போனார். கையை அலம்பிவிட்டு நான் போனபோது இருட்டில் ஒளிந்துகொண் டிருந்த ருக்கு உள்ளே ஓடினாள்.

"ஏ! ருக்கு! என்னடீ வெறும் அசடாய் இருக்கே? என்னத்துக்கு இப்படி இருட்டிலும் மூலையிலும் போய்ப் பூந்துகொள்ளுகிறாய்? அத்திம்பேருக்கு இதுதான் வேலை" என்று அவளை ஒரு அதட்டல் போட்டுவிட்டு மெத்தைக்குப் போனேன்.

என்னைப் பார்த்தவுடன், "உம் ...... உன்னோடு பேச வேண்டும் என்றுதான் வரச்சொன்னேன். வா இப்படி" என்றார் அப்பா. அவர் எதிரில் இருந்த ஜன்னல் கம்பி களைப் பின்புறமாகப் பிடித்துக்கொண்டு சாய்ந்து நின்றேன்.

"என்ன நம்ம ஜோஸ்யர் இருக்கிறாரே? ரொம்ப நல்ல கை. எது சொன்னாலும் பலிக்கும். தெரிஞ்சுதா? உங்கம்மா எல்லாவற்றையும் என் தலையில் கட்டிவிட் டுப் போய்விட்டாள். எனக்கோ இனிமேல் வயசாகி விட்டது. உனக்கு ஒரு வழி செய்து கல்யாணத்தையும் செய்து பார்த்துவிட்டேனானால் என் பாடு விட்டது. நம்ம ருக்குவின் ஜாதகம் மிகவும் நன்றாக இருக்கிறதாம்; அதுக்கும் உன் ஜாதகத்துக்கும் ரொம்பப் பொருத்தம் இருக்கிறதாம். குலம் விசாரிக்க வேண்டுமா? கோத்திரம் விசாரிக்க வேண்டுமா? உன்னையும் ஒரு வார்த்தை

கேட்டுவிட வேண்டும் என்றுதான் வரச் சொன்னேன். என்ன சொல்லுகிறாய் நீ?" என்றார் அப்பா.

இதுவரையிலும் அவருடன் தாராளமாகப் பேசாத எனக்கு அவருக்கு என்ன பதில் கூறுவது என்று தெரியவில்லை. திடீரென்று இப்படிக் கேட்பாரென்று நான் எதிர் பார்க்கவில்லை.

இந்த விஷயம் கேட்பவர்களுக்குச் சுலபமாக இருக்கலாம். ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் கல்யாணம் என்பதுதான் முக்கியமான சம்பவம். இதுவரையில் சந்தோஷமாக இருந்த வாழ்க்கை ஒரே நொடியில் மாய்ந்து துன்பப் புயலையும் எழுப்பலாம்; துன்பத்தால் அடிபடும் ஒருவனை மகிழ்ச்சி வெள்ளத்திலும் ஆழ்த்தலாம். இந்த விஷயத்தில் மனிதர் ஒரு முடிவுக்கு வர வேண்டுமானால் திடீரென்று முடியுமா?

திடீரென்று என்றும் பார்த்திராத ஒரு பெண்ணின் மீது காதல் கொள்ளலாம். அதைத் தடுத்துக் கூறவும் ஒருவரால் முடியாது. ஆனால் என் விஷயம் அப்படிப் பட்டதா? அவள் நேற்றுவரையில் என்னுடன் விளையாடிய குழந்தை. பூர்ணசந்திரன் போன்ற அவளுடைய அழகிய முகம் என்னை எவ்வளவோ தடவைகள் தடுமாறச் செய்தது; அவள் என்ன நினைக்கிறாள் என்பதைப் பார்க்க வேண்டாமா?

அத்தை, அத்திம்பேர்! ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள்; சம்பந்தியம்மாள் கூறியதுபோலவே நடப்பதை நினைத்துக்கொண்டால் எனக்கு ஒரு பக்கம் பயமாகவும் இருந்தது. 'இருக்கும் தொல்லைகள் போதாவென்று இதையும் வேறு இழுத்துக்கட்டிக்கொண்டு மாரடிக்க வேண்டுமா?' என்று எனக்கு ஒன்றும் தோன்றவில்லை.

இப்படியெல்லாம் சிந்தித்துக்கொண்டு நின்ற எனக்கு அப்பாவுக்கு என்ன பதில் கூறுவது என்று தோன்றவில்லை.

"இந்தப் படிப்பை முடித்துவிட்டு நான் ஏதாவது ஒரு வழியைப் பார்த்துக்கொள்ள வேண்டாமா அப்பா? கல்யாணத்துக்கு என்ன அவசரம் இப்போ?" என்றேன்.

"அதுக்கு என்னடா இப்போ? இந்தப் படிப்பைப் படித்துவிட்டுத்தான் என்ன சம்பாதித்து விடுகிருன் எல்லோரும்? புத்தியுள்ளவனுக மாத்திரம் இருந்தா யாறுல் எவ்வளவோ சம்பாதிக்கலாம். எதிலாவது பார்த்து இழுத்துவிடுகிறேன். எவ்வளவோ விஷயங்கள் சொல்லுவேன். ராமுதான் ஒன்றையும் காதில் வாங்க மாட்டேன் என்கிருன். நான் சொல்வதைக் கேட்கமாட்டாயா? அதையெல்லாம்பற்றி நீ ஒன்றும் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லே. ருக்குவைப் பண்ணிக் கொள்ள உனக்கு இஷ்டம் உண்டா இல்லையா? அதைச் சொல்லு" என்ருர் அப்பா.

"இந்த ஜோஸ்யர்கள் சொல்லுவதை எல்லாம் நம்பிக்கொண்டு படிப்பை வீணுகக் கெடுத்துக்கொள்ள எனக்குப் பிடிக்கவில்லே அப்பா" என்றேன் நான். தைரியமாக இதை எப்படிச் சொன்னேனே எனக்கே தெரியவில்லே. 'சொந்த வாழ்க்கை என்ருல் மனத்துக்கும் இப்படித்தான் தைரியம் வந்துவிடுமோ என்னவோ!' என்று எனக்கே ஆச்சரியமாக இருந்தது.

அப்பாவின் முகம் மாறியது.

உனக்குப் பிடிக்காவிட்டால் ஜோஸ்யரையும் ஜோசியத்தையும் ஏன் பழிக்கிருய்? நம்மாத்தில் எல்லோருக்கும் பார்த்தவர் அவர்தான். உன் ஜாதகமும் ரொம்ப யோகமாக இருக்கிறது; படிப்புக் குறைவாக இருந்தாலும் ஏராளமாகச் சம்பாதிப்பாய் என்கிருர். உன் விஷயத்தில் எனக்குமட்டும் கவலை இல்லாமல் போய்விடுமா? அதிகப்பிரசங்கித்தனமாகப் பேசுகிருயே? இந்தக் கல்யாணம் உனக்குப் பிடிக்கவில்லே என்ருல் தைரியமாகப் 'பிடிக்கவில்லே' என்று சொல்லிவிட்டுப் போயேன். எனக்கும் நல்ல மதிப்பு!" என்று குறையோடு சொன்ஞர் அப்பா.

அழகிய ருக்குவைக் கல்யாணம் செய்துகொள்ள எனக்கென்ன கசப்பா? இல்லே, என்னேப் பார்த்து எந்தச் சீமான், பெண்ணே வைத்துக்கொண்டு வேண்டப் போகிருன்?

"நாளைக்குப் பேசிக்கொள்ளலாமே அப்பா, இதைப் பற்றி" என்று சொல்லிவிட்டு இறங்கி வந்துவிட்டேன்.

ஒரு முடிவுக்கும் வராமல் தயங்கித் தயங்கி நின்று விட்டு நான் கீழே வந்தபோது வெகுநேரம் ஆகி விட்டது. வீட்டு வேலைகள் எல்லாம் முடிந்து எல்லோரும் படுக்கைக்குப் போய்விட்டார்கள். சமையல்காரி மீனாட்சி இல்லை. அத்தை உள்ளுக்குள் காரியத்தை முடித்துக் கொண்டு வெளித் தாழ்வாரத்தில் வந்து உட்கார்ந்து கொண்டிருந்தாள். அத்திம்பேர் திண்ணையில் உட்கார்ந்துகொண் டிருந்தார்.

குழந்தைக்குப் பால் கொடுத்துவிட்டுப் பாட்டிலை அலம்ப வந்துகொண் டிருந்த தங்கம், "இங்கே பார்த் தாயா கூத்தை? எல்லாரையும் கேலி செய்கிறார் இவர்? இங்கே வா சொல்றேன், சிமா" என்று என்னைக் கூப் பிட்டாள்.

'ஆமாம் எதை வேணுமோ செய்துகொள்ளட்டு போகட்டுமே! இதைப் பார்க்க வரணுமாக்கும் ஒருவர்!' என்று தோன்றியதே ஒழிய எனக்குப் போகப் பிடிக்கவில்லை. கடைசியில், தங்கம் ஏதாவது கோபித் துக்கொண்டுவிடப் போகிறாளே; வழக்கமாச்சே' என்று நினைத்துக்கொண்டு அவள் பின்னால் சென்றேன்.

அத்திம்பேர் எப்படிக் கேலிப் பேர்வழியோ அதே போல். பார்த்தாலும் வேடிக்கையாகவே இருப்பார். 'கத்திரிக்காய்க்குக் கையும் காலும் முளைத்ததுபோல் விசுக்கு விசுக்கென்று நடை போடுவதைப் பாரேன்!' என்று அத்தையே பரிகாசமாகச் சிரிப்பாள். படக்காட்சி களில் ஹாஸ்ய நடிகன் கண்களை உருட்டி உருட்டி விழிப் பதுபோல் விழிக்கும் அவருடைய விழிகளைப் பார்த் தாலே நமக்குச் சிரிப்பு வரும்.

"தேவலையே அத்திம்பேர்? நல்ல காரியந்தான்! எப்போ எல்லோரும் படுத்துக்கப் போறான்னு காத் துண்டு இருந்தேளாக்கும்! பழைய ஞாபகங்களெல் லாம் வந்துட்டாப்பலே இருக்கு; பொண்ணுக்குக் கல்

யாணம் பண்ணறத்துக்குள்ளே! பலே' என்று கண்ணாடி உடைந்ததுபோல் கலீரென்று சிரித்தாள் தங்கம்.

"ஆமாண்டியம்மா ஆமாம்! நீங்கள் எல்லாம் இந்தக் காலத்துக் குழந்தைகள்; பழைய காலத்து அருமை உங்களுக்கு என்ன தெரியப்போறது? தாலி கட்டுவதற்குள் 'லவ்' வந்துவிடுகிறது; லவ்; கதவைச் சாத்திண்டு மணிக்கணக்காய்ப் பேசறேள். கடைசியிலே என்னடான்னு ஒரு வருஷத்துக்குள்ளே சின்னு ஆய்விடு கிறது. எங்க நாளிலே கேளு; கதவுக்கு இடுக்கிலேயும், கட்டுப்பொட்டிக்கு இடுக்கிலேயும், குதிருங் கிழேயும், எங்கே ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ளப் போறோம்னு காத்துண்டு இருப்பா. அசட்டுப் பிசட்டுன்னு பெரியவா இருக்கிற இடத்திலே இப்படியெல்லாம் நின் னுச் சுட்டுவிட மாட்டாளா சுட்டு! என்னடா லாபம்னு? பொம்மனாட்டிகளுக்கு நம்மைக் கண்டா ஒரு மரியாதை இருக்கும். நேத்திக்கு வந்ததெல்லாம் என்னமோ கூத்துக் கூத்துன்னு ஆடுகிறதே; பொம்மலாட்டப் பொம்மை மாதிரி! பார்த்திருக்கிறீர்களா நீங்களெல்லாம் பொம் மலாட்டத்தை? தை தைன்னு ஒரு பொம்மையை ஆட்டு வானே ஒருவன், மீசையும் தாடியும் பயங்கரமாக? அந்த வேடிக்கையெல்லாம் நீங்க என்னத்தைக் கண் டேள்? கிக் கிக், கிக் கிக்குன்னு சிரிப்பேன் நன்னு!" என்றார் அத்திம்பேர் விட்டுக்கொடுக்காமல்.

"ஓகோ! என்ன அத்தை, அதுக்காகத்தான் இப் போது காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்து இருக்கயா?" என்றாள் தங்கம் சிரித்துக்கொண்டே.

"எதுக்குடீயம்மா என்னைப் போட்டுப் பிராணனை வாங்கறேள்? அவருக்கு என்ன வேலை? 'பூஜை வேளை யிலே கரடியை விட்டு அடிச்சாப்பலே' ஏதாவது சொல் விண்டு இருப்பார்; சமயம் இல்லாதே! எப்பவும் இந்தக் கூத்தும் கொட்டமுந்தானே? போய்ப் படுத்துக் கோங்கோ பேசாமே" என்றாள் அத்தை.

"பார்த்தயா சீமா, அத்தையின் சாமர்த்தியத்தை? மெள்ள எதையோ சொல்லி நம்மைத் தள்ளிவிடப் பார்க்

கரா! எப்படி இருக்கு அத்திம்பேர்?" என்று அத்தையைக் கேலி செய்தாள் தங்கம்.

என்ன வேடிக்கையும் கேலியும் வேண்டியிருக்கிறது இப்போ? எனக்கு அதில் கலந்துகொள்ளப் பிடிக்க வில்லை. அத்திம்பேரும் விடவில்லை.

"பாரேன் நீதான்! நான்பாட்டுக்கு அக்கடான்னு படுத்துக்கப் போனவனையும் தடுத்து! ரெயிலில் வந்தால் இந்த நாளில் லேசாய் இருக்கா! முதுகு ரணமாக வலிக்கிறது! கேட்டுக்கோயேன் உங்க அத்தையை!" என்று ஓரே போடாகப் போட்டார்.

"பார்த்தயா ரெண்டு பேரையும்? அடேயப்பா!" என்று தங்கம் விழுந்து விழுந்து சிரித்தாள்.

"அடி, என்னடியம்மா! இதுகள் படுத்தற பாடு! என்னமோ சொல்லுவாளே! 'திண்ணையிலே கிடக்கிற கிழவனுக்குத் திட்டுத் திடுக்குனு வந்துதாம்; வந்துதாம் தெரட்சிக் கல்யாணம்' ங்கறாப்பலே இருக்கு கதை. போங்கோடீ போங்கோ; கூத்திலே கோமாளி வந்தாப்பலே அவர் எதையாவது சொல்லிண்டுதான் இருப்பார். அதைக் கேட்டுண்டு இருக்கேளே நீங்க ஒரு பக்கத்திலே. அப்பா வந்துடுவா இப்போ! எவ்வளவுக்குச் சிரிக்கறேளோ அவ்வளவுக்கு அழுவேள் நாளைக்கு; தெரியுமா? போடி தங்கம்! குழந்தை தூங்கறச்சே தூங்கு நீயும்! என்னமோ காத்து வரதே சித்தேன்னு வந்து ஒக்காந்தேன். அதுக்குள் இவர் வந்துட்டார். கூத்தடிக்க இங்கே! காரியம் கிடக்கிறது நாளைக்கு; சொமையாய்ச் சொமந்து கிடக்கிறது; எல்லாரும் வந்து சரியாக நடக்கணுமே, புள்ளையாரே, தேங்காய் உடைக்கிறேன்னு வேண்டிண்டு கிடக்கறேன் நான்! 'கூத்துக்குப் பித்துக் கட்டிறாப்பலே' யாருக்கு வேண்டிக் கிடக்கு!" என்று எழுந்தாள் அத்தை.

"பாவம், அத்தை; எப்படி இளைச்சுப் போயிடுத்துப் பார், அத்தைக்கு உடம்பு!" என்றாள் தங்கம்; அத்தையின் முதுகைத் தடவிக்கொண்டே.

"ஆமாண்டீயாயி! ஆமாம்! எல்லாம் எப்படி இருக்கு தெரியுமா? கொண்டவனும் கொடுத்தவனும் ஒன்

ருய்ப் போய்விடுவா, கொட்டுமோளக்காரனுக்குத்தான் கோணக் கோணா இழுக்கும்' என்கிற கதையா இருக்குடீ ஆத்தா! உங்க அத்தையோன்னோ? அப்படி உருகிப் போறே நீ! கடைசியிலே இளிச்சவாயன் நான்தானே?" என்றார் அத்திம்பேர் சிரித்துக்கொண்டே.

அதைக் கேட்டதும் தங்கத்துக்கு இன்னும் சிரிப்பு அதிகமாகிவிட்டது.

"பேஷ் அத்திம்பேர்! அத்தையும் நீங்களும் சேர்ந்து ஒரே பழமொழியா அடுக்கித் தள்ளறேளே? என்னது சொன்னேள்; சொல்லுங்கோ இன்னொரு தடவை! என்னது கொட்டுமோளக்காரனா?" என்றாள் தங்கம். என்பதற்குள்ளேயே, "என்னமோ பிரமாதப்படுத்தறேளே! இப்படிப் பேசத் தெரியுமா உங்களுக்கெல்லாம்? போய்ப் படுத்துக்கோங்கோடீ! அசடுகளா!" என்று சொல்லிக்கொண்டே அத்திம்பேரும் எழுந்தார்.

அன்றைப் பொழுது விளையாட்டும் வேடிக்கையுமாகக் கழிந்தது. என் மனதில் துளி நிம்மதி இல்லை. படுக்கையில் படுத்தேனே ஒழியத் தூக்கம் எங்கிருந்து வரும்? ஹாஸ்ய உலகத்தை விட்டுக் கவலை நிறைந்த உலகத்தில் என் மனம் எதையோ தேடி அலைந்துகொண்டிருந்தது.

# ௬

## சுமங்கலிப் பிரார்த்தனை

மறுநாள் வெள்ளிக்கிழமை. வீடு திமிலோகப்பட்டுக் கொண்டிருந்தது. அத்திம்பேர், ஜோஸ்யர் இருவருக்கும் மெள்ளப் பேசுவதென்பதே மருந்துக்குக்கூடத் தெரியாது. அவர்களுடைய சத்தம் ஒரு பக்கம், குழந்தைகளுடைய சத்தம் ஒரு பக்கம், சுமங்கலிப் பிரார்த்தனைத் தடபுடல் ஒரு பக்கமாக எல்லாம் சேர்ந்து சந்தை இரைச்சல் போல் இருந்தது வீடு. முதல் நாள் இரவு நடந்ததை நினைத்துக்கொண்டு தங்கமும் நானும் கொஞ்ச நேரம் சிரித்துக்கொண் டிருந்தோம். சுமங்கலிப் பிரார்த்தனை என்றால் வீட்டில் அதிக வேலை அல்லவா? தங்கம் மடி செய்துகொண்டு ஏதோ உள்ளுக்கும் வெளிக்குமாகப் போய்க்கொண் டிருந்தாள்.

வாசலில் ஒரே கூட்டம். அப்பா, ஜோஸ்யர், அத்திம்பேர், ராமு எல்லோரும் தடபுடல் செய்துகொண் டிருந்தார்கள். ஜோஸ்யர் என்றால் எவ்வளவு பேரைப் பரிசயமாய்விடுகிறது? ஊரில் ஒருவர் பாக்கி இல்லை. அவ்வளவு சமாசாரங்கள் அத்துபடியாகிக்கொண் டிருந்தன. அங்கே போனால் எதையாவது மறுபடியும் கிளறப் போகிறார்களே என்று நான் உள்ளேயே உட்கார்ந்து கொண்டு எல்லாவற்றையும் காதில் வாங்கிக் கொண்டிருந்தேன்.

"என்னங்கறேள் மாப்பிள்ளைவாள்! இந்தக் காலமே ஒரு மாதிரியாக இருக்கு. குழந்தைகளுக்கெல்லாம் அந்த அந்தக் காலத்தில் செய்துவிடாமல் போனால் கடைசியிலே ரொம்ப ரஸாபாஸமாகப் போய்விடுகிறது. என்ன சொல்றேள் மாப்பளே?" என்றார் அத்திம்பேரைப் பார்த்து. அத்திம்பேரை அவர்கள் எல்லோரும், அப்பா உள்பட அப்படித்தான் அழைப்பது வழக்கம்.

"எந்த விஷயத்தைப்பற்றிச் சொல்லறேள்? கல்யாணத்தைப் பற்றித்தானே? ரொம்ப வாஸ்தவம்" என்றார் அத்திம்பேர்.

"அதென்ன புதுசாய் எதையோ கிளப்பறேளே, ஊரில் ஏதாவது சமாசாரம் தெரிய வேண்டும் என்றால் உங்களைக் கேட்டால் போரும் போல் இருக்கே!" என்றார் அப்பா சிரித்துக்கொண்டே.

"ஆமான்னு, விளையாட்டுக்குச் சொல்றேன்னு நெனைச் சுண்டு இருக்கேளா? இப்போ, நேத்திக்கி நடந்தது. வேணும்னா அந்த ராமையரையே போய்க் கேளுங்களேன்! முதல்லே நம்ம நாளிலே எல்லாம் குழந்தைகள் தானே ஜாதகத்தை எடுத்துண்டு அலையுமா இப் படி? இப்போ என்னடான்னு, அப்பா அம்மா வாவது! ஆட்டுக் குட்டியாவது! ரெண்டு கிளாஸ் படிக்கறத்துக்குள்ளே ஜாதகத்தை நம்ம கிட்டே எடுத்துண்டு ஓடி வரதுகள். நம்மை நம்பித்தானே வரது கள்னு எதையாவது சொல்லித்தானேன்னு தொலைக்க வேண்டி இருக்கு? எல்லாம் ஒரே மாதிரியாவா இருக்கு ஜாதகங்கள்! கையால் தொடக்கூட யோக்கியமில்லேன் னாலும், "நல்ல இடத்திலே கல்யாணமாகும்; பெண் டாட்டி ரொம்ப அழகாய் வருவள்; நல்ல பணமும் காசும் சீரும் செனத்தியுமா வருவள்; இன்னும் ரெண்டு மாசத் திலே கல்யாணம் கட்டாயம் ஆய்விடும்' என்று சொல் லித்தான் ஆகவேண்டி இருக்கு. இந்த ரெண்டுங்கெட் டான் வயசுப் பிள்ளைகளெல்லாம் நம்மைத் தேடிண்டு எதுக்கு வரது பின்னே? சரி, சந்தோஷமாக எதையாவது சொல்லி அனுப்புவம்னா, 'குதிரை விழுந்ததும் இல்லாமே குழி ஒன்றும் பறிச்சுதாம்' ங்கறாப்பலே இருக்கு எல்லாம். கடைசியிலே நம்ம தலையிலேயே கல்லைத் தூக்கிப் போடப் பார்க்கறதுகள். இருக்கிற இடத்திலே ரெண்டு பொண் குட்டிகள் இருக்காதுகளா? நாம் சொன்னதை வச்சுக் கிண்டு பெரிசாய் மனக்கோட்டை கட்டிண்டு அங்கே போய் ரஸாபாஸம் செய்து வைக்கிறதுகள். என்னுங்கறேள்? பெரியவாளுக்கு இது எட்டினால் ஒரே அனர்த்தம்! இதுகளுக்குத்தான் ரெண்டு எழுத்து எழுதத் தெரிஞ்சுடுத்தா? உடனே ரெண்டு கடுதாசை எடுத்துண்டு ஏதோ கன்னாபின்னான்னு வரிஞ்சு தள்ளிவிடுகிறதுகள்.

"இதுக்கெல்லாம் லாபம் என்னடான்னு பெத்தவா நம்மோடே 'மாள் மாள்'னு சண்டைக்கு வரா. இந்த

அசடுகளைக் காணுட்டா அதுக்கு நாம்பளா பாத்தியம்? 'அதைச் சொலலையளாமே? இதைச் சொன்னேய ளாமே? கண்டம்னும் சாவுன்னும் குழந்தைகளிடத்தி லெல்லாமா சொல்லுவா ஜோஸ்யா?' என்று நமக்கு ஒரு பயமுறுத்தல்.

"என்ன ஐயா இது, நல்லது நடக்கும், கல்யாணம் நடக்கும் என்றுதானே ஐயா சொன்னேன்?' என்ருல், 'ஆமாம், போமையா! எல்லாம் குழந்தை டைரியில் எழுதி வைத்துவிட்டுப் போயிருக்கிருன்' என்று நம்ப மேல் சீறுகிருர்கள். இதுகள் செய்யறதையும் செய்தூட்டு ஜோஸ்யாளுக்கு அசட்டுப் பட்டம்! 'அவறுக்கு ஒன்றும் தெரியாது! முட்டாள்!' எப்படி சமாசாரம்?" என்று ஜோஸ்யர் முடித்ததும் அப்பா தொந்தி குலுங்கச் சிரித்தார்.

"சரி சரி, அப்பா, இங்கேயும் ஏதாவது கதை கிளம்பி விடப்போகிறது! முன்னுலே ஒரு முடிச்சைப் போட்டு வைத்துவிடு இதுகளுக்கு" என்ருன் ராமு கேலியாக.

"சரியாப் போச்சுப் போ. நமக்கு வந்து சேர்ந்தது எல்லாம்!" என்ருர் அப்பா.

"உலகத்திலே பைத்தியத்திலே எவ்வளவு தினுசுங் கறேள் ஜோஸ்யர்வாள்? உங்களைப் பைத்தியமாக அடிக் கறதுகள் இன்னுன்னு கோவம் வரது உங்களுக்கு? இந்த வயத்தெரிச்சலைக் கேளுங்கோ சித்தே. எங்க அடுத்தாத் திலே ஒரு சமத்து இருக்கு. அது எப்படித் தெரியுமா? இப் படியும் சமத்துகள் இருக்கேன்னுதான் எனக்கே வேடிக் கையாக இருக்கு."

"அவாத்திலே ஏதோ பெரிய காரியம் வந்தூடுத்து. என்ன வயித்தெரிச்சல்? - சாவு - பாவி முப்பது வயசு வரைக்கும் கல்யாணம் ஆகாமல் அவனுக்கு ஒரு தம்பி இருந்தான். திடீரென்று அவன் காரியம் ஆயிடுத்து. ரொம்பக் கண்ணராவி! ரொம்ப வருத்தந்தான். அவனு டைய வருத்தத்தைப்பற்றிக் கேட்கணுமா? வருவோரும் போவோருமாக விடு அல்லோலகல்லோலப்பட்டுக்கொண் டிருந்தது. விட்டில் இவன்தான் மூத்தவன். இவனைத் தானே எல்லாரும் துக்கம் விசாரிக்கப் போவார்கள்?

போய் விசாரித்துவிட்டு வந்தவர்கள் எல்லோரும், 'இப்படி ஒரு சமத்து இருக்குமாடா!' என்று உருகிவிட்டார்கள். என்னங்கறேள்? யார் போய்த் துக்கம் விசாரிக்கட்டும், அது வழிந்த அசடு இவ்வளவு அவ்வளவு இல்லை.

"'என்னமோ ஸார், போறவா போய்டறா. அப்புறம் என்ன செய்யறது! அவாளுக்கு நன்னாச் செய்யணும். இந்தக் காரியங்கள் எல்லாந்தான் எனக்கு ரொம்பப் பிடிக்கும். மனிதன் வேறு என்ன செய்து பிரயோசனம்? தள்ளாமை, இது, அது என்று நான் ஒன்றும் பார்க்கப் போவதில்லை ஸார். திருப்தியா அவனுக்குச் செய்யணும்னு ஒரே ஆசைதான். எவ்வளவு செலவானாலும் சரி. என்ன நீங்க சொல்றது? கொடுத்து வைக்கணும் ஸார், இதுக்கெல்லாம்' என்று எல்லோரிடமும் இதே பல்லவி. அவனுடைய தமக்கை, தங்கை, எல்லோருங்கூட, 'இப்படி அசடு வழியாதேயேன்' என்று முட்டிக்கொண்டிருந்தார்கள். வந்தவர் போனவர் எல்லோரும், 'இப்படி உண்டா, இப்படி உண்டா!' என்று அசந்து போய்விட்டார்கள். அதுக்குத் தெரிந்த லக்ஷணம் அதுதான். ரொம்ப சமத்தாய்ப் பேசறம்னு மனசில் எண்ணம். எத்தனை சொன்னேன் என்கறேள்? பார்த்திருக்கிறீர்களா எங்கேயாவது?" என்று ஒரு கதை சொன்னார் அத்திம்பேர்.

"இப்படி ஒரு அசடு உண்டோ?" என்று அப்பா, ஜோஸ்யர், ராமு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள்.

'ஒருவன் பைத்தியமாகவோ அசடாகவோ இருந்தால் எல்லோரையுமா அப்படி நினைத்துவிடுவது? சே! என்ன உலகம்?' என்று எனக்கு வெறுப்பாக இருந்தது. இனிமேல் இங்கே உட்கார்ந்திருக்கக்கூடாது என்று எழுந்து உள்ளே சென்றேன்.

தங்கம் அவசரமாக வந்துகொண்டிருந்தாள். "உன்னைத் தேடிக்கொண்டுதான் வருகிறேன். சித்தியும் குஞ்சுவும் இன்னும் வரவில்லை. சித்தி கட்டாயம் வந்துவிடுவாள். நாழிகையாகிவிட்டது என்கிறாள் அத்தை. நீதான் போயாவது பார்த்துக்கொண்டு வாயேன் அவளை" என்றாள் என்னிடம். எனக்குக் கோபம் தாங்க முடியவில்லை.

"ஆமாண்டா, நித்திடம் போய்க்கொண்டு இருக்கா! இதுதானே வெல்ல போது விடிந்தால்! அவ்வளவு சொல்லி விட்டு வந்திருக்கிறது போய்! வந்தால் வரட்டும், வரா விட்டால் போகட்டும்! அக்கறை இருந்தால், தானே வரு கிறாள். வராதவர்களைத் திரும்பத் திரும்பப் போய்க் கூப் பிட்டுத்தான் என்ன பயன்? நான் ஒன்றும் போகமாட் டேன்" என்று கோபத்துடன் சொன்னேன்.

"என்னடா இது? நீகூட இப்படிப் பேசறே ஏமா? அவள் வராமல் எப்படிச் செய்யறது? எல்லாக் காரி யத்தையும் போலவாடா இது!" என்று அவள் கேட்டுக் கொண்டிருக்கும்போதே நான் போய்விட்டேன்.

வீட்டில் இருந்தால்தானே இந்தத் தொல்லையெல் லாம்? எங்கேயாவது ஒழிந்து போகலாம் என்று வெளி யில் கிளம்பினேன். கிளம்பி வேறு எங்கே செல்வது? நட ராஜனுடன் பேசிவிட்டு வரலாம் என்று அங்கே சென் றேன். என் மனத்தை யாரிடமாவது திறந்து காட்ட வேண்டும் போல் அவ்வளவு ஆத்திரமாக இருந்தது. அது வும் அல்லாமல் அன்று அவன் அத்திம்பேரைப்பற்றி ஏதோ அரைகுறையாகச் சொல்லிவிட்டு நிறுத்திவிட்டது முதல் அவனை என்னவென்று கேட்க வேண்டும் என்ற ஆவல் எனக்கு இருந்துகொண்டே இருந்தது.

என் துரதிருஷ்டம், நான் போனதும் அவன் வீட்டில் இல்லை என்றார்கள். என்ன செய்வதென்று பார்த்தேன். செடி கொடிகள் என்றால் எனக்கு மிகவும் பிரியம். நட ராஜன் பங்களாவில் இல்லாத செடிகொடிகளே இல்லை. அவ்வளவு அழகாய்த் தோட்டத்தை நந்தவனத்தைப் போல் வைத்திருப்பான். சுற்றிக்கொண்டே வந்தேன். மனிதனுக்கு எவ்வளவு வேதனை இருந்தாலும் பசுமை வாய்ந்த இளம் கொடிகளையும் செடிகளையும் பார்த்தால் சற்று மறந்துவிடும் என்பது உண்மை. வெகு நேரம் வரையில் எனக்கு இந்த உலக நினைவே இல்லைபோல் இருந்தது. ரோஜாச் செடிகள் இருக்கும் இடத்தை அடைந்தேன். ஒவ்வொரு செடியிலும் கொத்துக்கொத் தாகப் பூத்திருக்கும் அந்த மலர்களைக் கண்டதும் என் மனம் மறுபடியும் கலங்கிவிட்டது. சிவந்து மலர்ந்த ஆம்

பல்கள் எனக்கு ருக்குவின் அழகிய முகத்தை நினை வூட்டின. அவைகள் என்னைக் கண்டு புன்னகை புரிவது போல் இருந்தன. ஒரே கணத்தில் மறுபடி என் மனம் வீட்டுக்குப் போய்விட்டது.

"ஓ! வீட்டு வேலைகளையும் மறந்துவிட்டு ஒரு மனிதனு? இதற்கெல்லாம் ஈடு கொடுக்கவில்லை என்ருல் புருஷனு அவன்? கஷ்டம் என்பதெல்லாம் சோம்பேறிகளுக்கும் கையால் ஆகாதவர்களுக்கும்" என்று என் உள்ளம் குத்திக் காண்பிப்பதுபோல் இருந்தது.

"மணி என்ன? ஐயர் வந்துவிட்டாரா?" என்றேன் தோட்டக்காரனை. அவன் உள்ளே சென்று பார்த்துவிட்டு, "ஐயர் இன்னும் வரலிங்க. மணி பன்னெண்டு ஆவுதுங்க" என்ருன்.

மணி பன்னிரண்டு என்றதும் எனக்கு ஒன்றும் ஓட வில்லை. அப்பாவும் அத்தையும் கோபிக்காமல் இருக்க வேண்டுமே! பத்து ரோஜாப் புஷ்பங்களைப் பறித்துக் கொண்டு அங்கிருந்து கிளம்பினேன்.

நான் வரும்போதுதான் புருஷர்களுடைய பந்திச் சாப்பாடு நடந்துகொண்டிருந்தது.

"எங்கேடா போய்விட்டாய்? நமஸ்காரம் செய்ய அத்தை தேடினுளே?" என்ருர் அப்பா. என்னுல் ஒன்றுமே பதில் சொல்ல முடியவில்லை.

"கல்யாணப் பிள்ளையை ஒண்ணும் சொல்லாதேங் கோன்னு" என்ருர் அத்திம்பேர்.

நான் சாப்பிடும்போது சித்தியும் நம் வீட்டுப் பேரும் இருந்தார்களே ஒழிய வேறு ஒருவரையும் அங்கே காண வில்லை. குஞ்சு வந்ததாகவும் தெரியவில்லை. வந்தால் என் கண்ணில் படாமல் எங்கே போய்விடுவாள்?

நான் வைத்த ரோஜாப் புஷ்பங்களை எல்லோருக்கும் கொடுத்துக்கொண்டே, "ரொம்ப நன்னு இருக்குடா சிமா! இப்படித்தான் இருக்கணும் ஒரு சமயம்னு. உப காரம்னு ஊரை விட்டு ஓடிவிடுகிறேளே எல்லாரும்" என்று குத்தலாய்ச் சொன்னுள் தங்கம்.

ஏதோ குழப்பத்தில் செய்துவிட்டேன். 'எப்படி நடந்தது? எல்லாம் சரியாய் நடந்ததா?' என்று தெரிந்து கொள்ள எனக்கும் ஆவலாகத்தான் இருந்தது. ஆனால் என் தப்பை உணர்ந்தபோது அங்கே நிற்க முடியவில்லை. என் அறைக்குச் சென்றுவிட்டேன்.

மாலையில் அப்பா வெளியில் சென்றதுந்தான் வெளியில் வருவது என்று இருந்தேன். ஒரு சந்தடியும் தெரியவில்லை. 'என்ன ஒரு சத்தத்தையும் காணவில்லை? குழந்தைகள் எல்லாம் எங்கே?' என்று பார்ப்பதற்கு வெளியே வந்தேன். பேச்சு ஒன்றுமில்லாமல் அப்பா, சித்தி, தங்கம் மூன்று பேரும் தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்தனர்.

"வாடா இப்படி! சித்தி வந்திருக்கிறாளே என்று கூடப் பார்க்கவல்லை. இப்பத்தான் மாப்பிள்ளையாட்டமா ஒளிஞ்சுக்கறே! வா இங்கே" என்றார் அப்பா என்னைக் கண்டதும்.

நானும் வந்து உட்கார்ந்தேன்.

"குஞ்சுவைப் பார்த்துக்கொண்டு வா என்று நான் சொன்னேன்; வெளியிலே போய்ட்டான் அப்பா. நல்ல சீமா!" என்றாள் தங்கம்.

"உம். போடா போ! இதுகூட இல்லாட்டா நாம் தான் என்ன செய்யறது?" என்றார் அப்பா.

"நீ போனாயா சீமா இப்போ?" என்றாள் சித்தி என்னைப் பார்த்து.

நான் தலையை அசைத்தேன்.

"வேறே எங்கே போனாய், எல்லாத்தையும் விட்டு விட்டு?" என்றார் அப்பா.

"நடராஜனைப் பார்த்துவிட்டு வரலாம் என்று போனேன். நாழி ஆய்விட்டது" என்றேன் மெதுவாக.

"நாளும் கிழமையுமா அங்கே போய் நிப்பானேன்? உன்னை எல்லோரும் இங்கே சல்லடை போட்டுச் சலித்தோம். உம்..." என்றார் அப்பா சலிப்புடன்.

அதற்குள் சித்தி பேச்சை மாற்றினாள்.

"ஆமாம், நீ அங்கே போகிறதைவிடக் குஞ்சுவாத்துக்குப் போயிருந்தாத் தெரிஞ்சிருக்கும் நோக்கு" என்றாள் யோசனையுடன்.

"எதற்கு அங்கே போகிறது? வருகிறவளானால் தானே வரமாட்டாளா? அவ்வளவு அலக்ஷ்யம்!" என்றார் அப்பா வெறுப்புடன்.

"அலக்ஷ்யம் இல்லை அத்திம்பேர். இன்னும் ஒரு விஷயமும் தெரியாதுபோல் இருக்கு உங்களுக்கு? ஊரெல்லாம் தெரிகிறதே? நம்மாத்துச் சமாசாரம் நமக்குத்தான் ஒன்றும் தெரிகிறதில்லை" என்றாள் சித்தி.

"என்னது? தெரியாதே ஒண்ணும்" என்றார்கள் அப்பாவும் தங்கமும் சேர்ந்து. இதைக் கேட்டு அத்தையும் வாசற்படியில் வந்து நின்றாள். மன்னி ஜன்னல் ஓரமாக நின்றாள்.

"குஞ்சுவாத்திலே அமக்களப்படுகிறது ஆறு மாதமாக. என்னமோ ஜபமாம்! ஹோமமாம்! எப்போது பார்த்தாலும் வீட்டிலே கல்யாணம் மாதிரி இருக்குன்னு எல்லாரும் சொல்லறு!" என்றாள் சித்தி நிதானமாக.

"எதுக்கு இப்போ இதெல்லாம்? புள்ளை குட்டி இல்லாதவான்னு இப்படியெல்லாம் செய்வா? என் காதில் கூட இதையெல்லாம் ஒன்றும் போடவில்லையே?" என்றார் அப்பா சாதாரணமாக. இதைத்தானு நடராஜன் சொல்லியிருப்பான்? எனக்குக் கொஞ்சம் சந்தேகம் தட்டியது.

"உனக்கு யார் சொன்னு இதெல்லாம்? அங்கே போனயா?" என்று கேட்டேன் சித்தியை.

"எங்க தெருவெல்லாம் ஒரே அடியாய் அமர்க்களப்பட்டது. போய்ப்பாத்தூட்டு வரலாம்னு போனேன். உங்களுக்கெல்லாம் தெரியும் என்று நினைத்துக்கொண்டிருந்தேன். நீங்க சொல்லுவதைப் பார்த்தா உங்கள் காதிலேயே ஒன்னும் படவில்லைபோல் இருக்கே" என்றாள் சித்தி.

தங்கம் அப்பாவையும் என்னையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

"இங்கே யார் குழந்தையைத் தினம் போய்ப் பாக்கறு? ஒன்றும் தெரியறதில்லே. என்ன நடக்கறது சொல்லு? எல்லாம் வேடிக்கையான்னு இருக்கு, இந்தக் காலத்திலே" என்று அத்தை சித்தியின் அருகில் வந்து உட்கார்ந்தாள்.

சித்தி அப்பாவை ஒரு தடவை பார்த்துவிட்டு, "என்னமோ வயசு காலத்தில் உங்கள் காதில் இதை யெல்லாம் போடவேண்டாம்னுதான் இருந்தேன் நான். அந்தப் பொண்ணுக்கும் எவ்வளவு சொன்னேன் தெரியுமா? அதாவது! இனிமே வழிக்கு வரதாவது! எனக்குத் தோணலே" என்று சித்தி மேலும் கூறுவதற் குள் அப்பாவுக்கும் அத்தைக்கும் தாங்கவில்லை.

"அடீ, விஷயத்தைச் சொல்லாமல் எதையோ வளத் துக்கொண்டு போறயே? உன்னைப் புத்தி சொல்லல லேன்னு யார் சொன்னு இப்போ?" என்றார்கள் படபடப் புடன்.

"வேறே என்ன? ஏதோ சாமியாராம்! அதைக் கொண்டுவந்து வீட்டில் வைத்துக்கொண்டு கண் தலை தெரி யாமல் குதிக்கறதுகள். ஒருத்தரா இரண்டு பேரா? சரியா ஐம்பதுபேர். நாறு பேர் வருவதும் போவதும், சாப்பாடும் மபறும்; சத்திரம் மாதிரி ஆய்விட்டது. நாம் எவ்வளவு சொல்ல முடியும்?" என்று சித்தி முடிக்கக்கூட இல்லை.

"இப்படியும் இருக்குமோடீ ஒரு பொண்ணு! ஆண்டி யையும் சாமியாரையும் யாராவது வீட்டிலே கொண்டு வந்து வைத்துக்கொள்ளுவாளோ? எனக்கு அப்பவே இந்தப் பொண்மேலே கொஞ்சம் சந்தேகம் தட்டித்து. சொன்னு நம்மைக் கோவிச்சுக்கப் போறுளேன்னு அடக் கிண்டு இருந்தேன். வந்துடுத்தா அனர்த்தம்!" என்றுள் அத்தை.

அப்பாவின் முகத்தைத்தான் பார்க்கவே முடிய வில்லை. இவர்களுக்கெல்லாம் வேடிக்கைதான். அவருக்கு எப்படி இருக்கும் கேட்பதற்கு? சித்தியின்பேரில் எனக்குக் கொஞ்சம் கோபம் வந்தது. இனம் தெரியாமல் என்ன பேச்சு! எனக்குப் பிடிக்கவே இல்லை.

"நாங்க நேத்[illegible] போயிருந்[illegible] ஈ காக்கா கூடக் காணம் அங்[illegible] [illegible]விட்டுத் தங்கத் துக்கும் ஜாடை காண்பி[illegible].

"இதைப்பற்றி ஒரு வார்த்தைகூட அவளும் சொல்லவில்லையே! அப்படி யாராவது இருந்தால் எங்க ளுக்கும் காட்டியிருக்க மாட்டாளா?" என்றாள் தங்கம். தங்கமும் அப்பாவின் காதில் இதையெல்லாம் போட வேண்டாம் என்று எண்ணினாள். சித்தியை மேலும் சொல்லாமல் மடக்க வேண்டும் என்று நினைத்தோம். தங்கம் கண்ணையும் சிமிட்டிக் காட்டினாள். குடித்தனம் செய்யும் ஒரு பொம்மனாட்டிக்கு இது புரியாமலா போய் விடும்? அவள் வேண்டுமென்று சொல்லுகிறாள் என்றே எங்களுக்குப் பட்டது.

"ஆனால் நான் பொய் சொல்லுகிறேன் என்கறேளாக் கும்? வேண்டியதுதானே! நம்மாத்துக் குழந்தை யைச் சொல்லி எனக்கு ரொம்ப ஆகணுமோன்னோ?" என்றாள் சித்தி முகத்தைச் சுளித்துக்கொண்டு.

"அப்படி அர்த்தமா சித்தி அதற்கு? நீ பொய் சொல்லு கிறாய் என்று யார் சொன்னா இப்போ? யாராவது சொல் லிக் காதில் பட்டிருக்கும். பத்துப் பேர் சொன்னால் எதை யும் ஜனங்கள் உண்மை என்றுதானே நம்புவார்கள்? அப்படி ஏதாவது சொல்லுகிறாயோ என்னமோன்னு நெனைச்சுண்டு சொன்னோம். அதுக்குள் இப்படி ஆரம் பிக்கறயே?" என்றேன் நான்.

"உம் - உம்...... போரும் நிறுத்துங்கோ. பேச்சைச் சண்டையாக்கி விடுவேளே நீங்கள்ளாம் சேர்ந்தால்! நீ பார்த்தயா அந்தச் - சாமியாரை? வீட்டில் கொண்டு வந்து வைத்துக்கொள்ளும்படி யார் அந்தச் சாமியார்? தெரிந்தால் நானும் போய்ப் பார்த்துவிட்டு வருவேனே!" என்றார் அப்பா எங்களை அடக்கிவிட்டு.

"ஆமாம், இவர் நம்மை அடக்க வந்துவிடுவார்" என்று நானும் தங்கமும் முணுமுணுத்துக்கொண் டோம்.

"என் கண்ணாலே பார்க்காமே இருந்தா எனக்கும் எப்படி நம்பிக்கையாக இருக்கும்? ஊரார் சொல்றதைக் கேட்டு என் தேகம் ஒடுங்கிவிட்டது. ஊர் சிரிக்க நாம் நம்ம குழந்தையைப் பார்த்துக்கொண்டு இருக்கலாமோ? நல்லத்தைப் பொல்லாததை நாம்தானே சொல்லனும்? ஊருக்கு முந்தி ஒரு தப்பட்டத்தைக் கட்டிண்டு அடிப்பானேன் என்று உங்களுக்குச் சொல்லவில்லே. தம்பட்டத்தைக் கட்டிண்டு அடிக்கறவாளானுல் அன்னிக்கே ஒடி வந்திருப்பா! மனசு கேக்கல்லே. ஓடிப்போனேன். பார்த்தால் அந்த அமக்களத்தை ஏன் கேக்கறே! தடியனுட்டமா ஆகாசத்துக்கும் பூமிக்கும் ஒருத்தன் இருக்கான். அவன் சாமியாராம்! சலவை செய்த வெள்ளை மல்வேஷ்டியும் அவன் சோகுசும்! நல்ல பயில்வான்போல் இருக்கான். அவன் ஒரு கட்டிலில் மெத்தையும் தலகாணியுமா உட்கார்ந்து இருக்கானும்! இதுகள்ளாம் போய் அவனுக்குக் கால்பிடிக்கறதாம்! கைபிடிக்கிறதாம்! அவனையே சுத்தண்டு நிக்கறதுகள். இப்படித் தடியன்கள் சரியா நூறு இருந்து விட்டாலே. விடாவா இருக்கு!" என்ற சித்தி இன்னும் பேச்சை முடிக்கவில்லை.

அப்பாவுக்கு முகத்தில் கோபம் தெறித்துவிடும்போல் இருந்தது. தங்கத்துக்கும் எனக்கும் திகில் பிடித்துக் கொண்டுவிட்டது. அப்படியே எங்கேயாவது சாய்ந்து விடப் போகிறாரே என்று நான் அவர் பின்னுல் போய் நின்றுகொண்டேன்.

"நீ உடனே வந்து என் காதில் போடுவதற்கென்ன? ஏன் பேசாமல் இருந்தே?" என்றார் அப்பா கோபத்துடன்.

"ஊர் முழக்கத் தம்பட்டம் கொட்டப் பொழுது இருக்கு! இங்கே வந்து ஒரு வார்த்தை சொல்ல முடியலலே! இவான்னு மனுஷா!" என்று அந்தை சொல்லிக்கொண்டு போனது என் காதில் பட்டது. 'கரிசனம் உள்ளவளானுல் அப்பவேன்னு ஓடி வரணும்?' என்று தான் எனக்கும் தோன்றியது.

"உங்க காதிலே போடாட்ட என்ன? என்னுல் எவ்வளவு செய்ய முடியுமோ அவரால் எவ்வளவு செய்ய

முடியுமோ அவ்வளவுந்தான் செய்து பார்த்தோம். எதை யாவது அவர்கள் காதில் வாங்கிக்கொண்டால்தானே? பெரியவாளாம் பெரியவாள்! நாம் ஏதாவது சொன்னால் கூட நாக்கு அப்படியே புழுத்துப் போகும்னுன்னு சொல்றா! நித்தியம் ஒரு படி பாலாம், பாதாம் ஹல்வாவாம்! இது தவிரப் பக்ஷணங்களாம்; இதைத் தின்றுவிட்டு அந்தப் பிராமணனும் பிழைச்சு இருக்கானே; அதைச் சொல்லுங்கோ! கிழங்கு மாதிரி எப்படி இருக்கான் தெரியுமா? அவன் சாப்பிடுவதாம். அதில் மிச்சம் இருப்பதை இதுகள் எல்லாம் காக்காய் மாதிரி கொத்தித் திங்கறதுகள்!'' என்று சித்தி சொன்னபோது அப்பாவின் தேகம் துடித்துக்கொண்டிருந்தது.

அவர் கண்களில் கண்ணீர் நிறைந்திருப்பதைக் கூடப் பார்க்காமல் என்ன பேச்சு இது? நான் ஒன்றும் சொல்ல முடியாமல் உதட்டை இழுத்துக் கடித்துக் கொண்டு புருவத்தை நெரித்துக்கொண்டேன்.

''என்ன பேச்சு சித்தி! யாராவது கேட்டால் என்ன நெனைச்சுக்குவா? போரும் நிறுத்து'' என்றாள் தங்கம்.

அப்பாவுக்கும் இதற்குமேல் கேட்கப் பிடிக்கவில்லை போல் இருந்தது. ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு எழுந்து உலாத்த ஆரம்பித்தார். 'சித்தி எதற்காக வந்தாள்?' என்று எனக்கும் தோன்றிவிட்டது.

தங்கம் கூறியது அவளுக்குப் பொறுக்கவில்லை.

''என்ன நினைத்துக்கொண்டு விடுவாடி அம்மா? பிரமாதப்படுத்துகிறயே? அத்திம்பேர் கேட்டார், சொன்னேன். இவ்வளவு நாள் ஓடி வந்தேனா சொல்வதற்கு?'' என்றாள் சித்தி கோபத்துடன்.

தங்கமும் பேசாமல் இருக்கவில்லை.

''அப்போதே வந்திருந்தால் இவ்வளவு வம்பு இல்லையே! அப்பா உடனே போயிருப்பார்; இல்லாவிட்டால் யாரையாவது அனுப்பி இருப்பாரோ இல்லையோ? நன்றாய் வேர் ஊறினப்பறம் வந்து சொல்லறயே விடிய விடிய!'' என்று படபடவென்று பேசிவிட்டாள். அப்பா மறுபடியும் கோபித்துக்கொள்ளுவாரோ என்று எனக்குப் பயம்தான்.

ஆனால் அவரும் அதை ஆமோதிப்பவர்போல் சித்தியைப் பார்த்தார். அப்பா தனக்குப் பரிந்துகொண்டு வருவார் என்று சித்தி எதிர்பார்த்தாளோ என்னவோ? அவரும் பேசாமல் இருந்தவுடனே முகமே மாறி விட்டது.

"தன் மனுஷாள் அழ அழச் சொல்வா, அசல் மனுஷா சிரிக்கச் சிரிக்கச் சொல்லுவா ங்கறாப்பலே நான் சொன்னால் உங்களுக்கு அப்படித்தான் இருக்கும். எனக்கு மட்டும் அவளைச் சொல்லுவதில் ஆசையா? இன்னும் எத்தனையோ பேர், இந்த வீட்டைப்பற்றி இவ்வளவு அவ்வளவு இல்லே; அவ்வளவு சொல்லறா. எதையாவது வாய் எடுத்தேனா நான் இப்போ? என்னமோ அவளைப்பத்திப் பேச்சு வந்தது; உங்களுக்கும் எல்லாம் தெரிஞ்சு இருக்காதான்னு சொல்லிவிட்டேன். நான் என்ன தினம் வரேனா போறேனா? இந்த வாசப் படியை யார் மிதிச்சா? எல்லாந்தான் அக்காவோடே போச்சே" என்று சித்தி முடித்தாள்.

"வேறே என்ன இருக்கு இந்த அகத்தைப் பத்திச் சொல்ல? இவ்வளவு சொன்னவள் அதையுந்தான் சொல்லிவிடேன். அப்படித்தான் என்ன இருக்கு பார்ப்போம்" என்றாள் தங்கம், வாயை மூடிக்கொண்டு இராமல்.

இன்னும் எதையாவது கிளறப்போகிறாளே என்று எனக்கு மட்டும் பயமாக இருந்ததே ஒழிய அப்பாவும் என்னவென்று கேட்பதில் ஆவலுள்ளவர்போல் காணப் பட்டார்.

சித்தி கொஞ்சம் தயங்கினாள்.

"ஏன் தயங்கறே? இன்னும் என்ன? சொல்லேன்" என்றாள் தங்கம்.

"நான் ஒன்றும் தயங்கவில்லே. இதுக்கா இங்கே வந்தோம்னு நினைச்சுப் பாத்துண்டா ஒன்றும் தோணலே. சொல்றத்துக்கு என்ன ஒண்ணு ரெண்டா? எல்லாத்தையும் நெனைச்சுப் பாத்தா இந்த வாசப்படியை மிதிக்கக்கூடப் பிடிக்கலே எனக்கு. அவாவா கொடுக்க

வேண்டியவாளுக்கெல்லாம் வாயில் மண்ணைப் போட்டு விட்டுச் சௌக்கியமா இருந்தா யார்தான் என்னதான் சொல்லமாட்டா? நாலு பேர் வயிறு எரிஞ்சா நன்னு இருக்குமா விடு?"

இதற்குள், "உம் ... உம் ... போரும் நிறுத்து" என்றார் அப்பா.

சித்தி இதையெல்லாம் கவனிக்கவே இல்லை.

"நான் வேணும்னு உங்காத்து மனுஷி. போனுப் போறதான்னு வாயை மூடிண்டு இருப்பேன். அவாளெல்லாம் பொறத்தியாராத்துப் புள்ளைகள் இல்லையா? நன்னுத்தான் கேட்பா. சொனை சொனையா எண்ணிக் குடுத்தூட்டு எல்லாரும் வாயில் விரலையா வைத்துக் கொண்டு உட்கார்ந்திருப்பா? 'இவ்வளவு வாடகை கொடுத்து வீடு என்னத்துக்கு? மூணு வேலைக்காரனும் நாலு வேலைக்காரனும் எதுக்கு? இவாள்ளாம் நன்னு இருக்க வாண்டாமா?' என்றுதான் கோபிக்கறு.

"அன்னிக்கி அம்மாஞ்சி வந்து கண்ணுலே ஜலம் விட்டு அழுதான். கல்யாணத்துக்குப் பொண் நிக்கறது; கேட்டால் கோபித்துக் கொள்ளுகிறூர்னு அழுதான் பாவம். கேக்கறத்துக்கு மின்னுலே அப்படியே தூக்கிக் கொடுக்கலையா?" என்று சரமாரியாக அடுக்க ஆரம்பித்தாள் சித்தி.

"என் சித்தி இந்தப் பழைய புராணங்களை எடுக்கறே இப்போ? பணம் காசு எங்கே ஓடிப் போறது? மனுஷா வேணும்னுப் போயிடறு. இன்னிக்கி இல்லாட்டா இன்னும் ஒரு வருஷம் கழிச்சுக் கொடுத்தூடப் போறது" என்று அவளை அடக்கினுள் தங்கம்.

சித்தி விடுவதாக இல்லை. "ஆமாண்டீ! வர காசை இன்னும் தாம் தூம்னு வாரி இறைச்சுண்டு இருக்கட்டும்! நித்தியம் போது விடிஞ்சாப் போது போதாய் நான் கேட்டுண்டு இருக்கேன்; எல்லோரும் சொல்வதை! பார்த்தா என்னத்துக்கு இவ்வளவு செலவழிக்கணும்? இன்னும் கொஞ்சம் அடக்கமாக இருந்தால் என்ன?" என்றுள் கண்களில் ரத்தம் தெறிக்க.

"என்னத்தை வாரி இறைச்சுடறு அப்படி? ஒவ்வொன்றும் போட்டுக்கக் கூடத்தான் துணி இல்லாமே நிக்கறதுகள். இருந்த இருப்புக்கு இப்படிப் பார்ப்பது கூட உனக்குக் கண்ணை உறுத்துகிறதா? நல்லதுதான்டியம்மா! உனக்கே இப்படி இருந்தா, பொறத்தியாரைப் போய்ச் சொல்லுவானேன்னு கேக்கறேன் நான்! என்னத்தை அநிகப்படியாச் செய்தாடறு? எனக்கு வாரிக் கொடுத்துவிடுகிருரா? இல்லே; பிள்ளைகளுக்குச் சேர்த்து வைத்துவிடுகிருரா? நாங்கள் வந்தால், எங்களுக்கும் நாங்கள் செய்துகொண்டு, இங்கேயும் செய்துவிட்டுப் போக வேண்டி இருக்கு!" என்று கடுகடுப்போடு சொன்னுள் தங்கம். அவளிடம் எதற்கு இதெல்லாம்?

"என்னன்னு கேக்கறயே குழந்தை; நானும் சொல்லறுபோன்னே? பிள்ளைகளுக்குச் சேர்த்து வைக்கறுரான்னு கேக்கறயே? அதுவானம் செய்தா உண்டே. நாளைக்கு நாம் கேட்டால் ரெண்டு காசு அதுகளானும் கொடுக்கும்! அதுவுந்தான் இல்லே. அந்தப் பொண் நம் மாத்துக்கு வந்திருக்கேன்னு ஒரு திருகுஞ்சுரை! எல்லாத்தையுந்தான் தொலேச்சாச்சு. இனிமேயும் பொறந்தாத்திலேயே எல்லாம் செய்துண்டு இருக்கறும்னு, அவாளும் சம்சாரிதானே? எனக்கே குழந்தைகளையும் அவளையும் பார்த்தால் வயித்தெரிச்சலாத்தான் இருக்கு. என்ன சுகத்தைக்கண்டுத! இவ்வளவுக்கும் வாயைத்திறக்கிறதா அந்தப் பொண்? இன்னொன்றய் இருந்தா இத்தனை நாளைக்கு ஊரைச் சிரிக்கடிச்சிருக்கும். தேமேன்னு, ராமுவுக்கும் எனக்கும் என்ன இருக்கு இந்தாத்தில்? எல்லாம் அக்கா இருந்தா இப்படி இருக்குமா? இப்போ அத்தை ஹூம்...ங்கறத்துக்குள்ளே அந்தப் பொண் நடுங்கறும்! அதைத்தான் சொல்று அவாத்துலே" என்று சித்தி மேலும் மேலும் பேசிக்கொண்டிருப்பதை அப்பாவால் கேட்கவே முடியவில்லை. பதில் சொல்லவும் வழி இல்லை.

"அம்மாடீ!" என்று அடிவயிற்றிலிருந்து அவர் சொன்னதைக் கேட்க எனக்கு வேதனையாக இருந்தது. அவர் அங்கே நிற்கவில்லை; வாசல் பக்கம் போய்விட்டார். இதெல்லாம் அத்தையின் காதில்மட்டும் படாமல் இருந்துவிடுமா?

"என்னடீம்மா! போராக் குறைக்கு ..., மண்டையையும் போட்டு உருட்டறே? அத்தை இ.., வீட்டில் இருப்பது ஜாஸ்தியாய் இருக்கு அதுதானே!" என்று படபடவென்று விழுந்துவிட்டுப் போய்விட்டாள் அத்தை. மன்னி எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்துவிட்டு அப்பா வாசலுக்குப் போனதும் வெளியில் வந்தாள்.

அவளைக் கண்டதும் சித்தி விசித்து விசித்து அழ ஆரம்பித்துவிட்டாள்.

"வெள்ளிக்கிழமை! சாயங்காலம், சுமங்கலிப் பிரார்த்தனையும் செய்த இடத்திலே ஏன் சித்தி இப்போ கண்ணிலே ஜலம் விடறே? சொல்லுவதெல்லாம் நீ தானே சொன்னே எங்களை? உன்னை யார் என்ன சொன்னா இப்போ அழறத்துக்கு? இருக்கிற ஒண்ணு ரெண்டாவது நன்னா இருக்க வாண்டாமா?" என்று அவளைச் சமாதானப்படுத்தினாள் தங்கம்.

"ஆமாம். எப்பவும் இப்படித்தான். அக்கா இருந்தா இதுகள்ளாம் நாட்டாமை செய்யுமா இங்கே? எனக்கு இருக்கற பாத்தியந்தான் அதுக்கும் இருக்கு இங்கே. அதுக்குப் பரிஞ்சுண்டு பேசறவா யார் இருக்கா?" என்று மன்னிக்குப் பிரமாதமாகப் பரிந்துவிட்டு மஞ்சள் குங்குமம், ரவிக்கைத் துண்டு எல்லாவற்றையும் அப்படியே போட்டுவிட்டுப் போய்விட்டாள் சித்தி. அவள் அழுது கொண்டே போனபோது அப்பா, அத்திம்பேர், ஜோஸ்யர் எல்லோரும் வாசலில்தான் இருந்தார்கள். மஞ்சள் குங்குமம் எல்லாவற்றையும் வாசல்வரையில் எடுத்துக் கொண்டு ஓடினாள் மன்னி.

"இதுக்கெல்லாம் பயப்படாதே நீ! வா, கோவிலுக்குப் போய்விட்டு வரலாம்! வெள்ளிக்கிழமையும் அதுவுமா அழறாளாம் ஒரு பொம்மனாட்டி!" என்றாள் தங்கம்.

"இதற்குத்தான் வந்தாள்போல் இருக்கு! பெரிய கலகம் செய்ய!" என்றேன் நான் வழியில்.

"இதோடு போச்சா? இன்னும் நாளைக்குப் பாரேன்! இதையெல்லாம் நெனச்சுண்டு வேதனைப்பட

...டாம். சித்தெ நாழியாவது அக்கடான்னு சுவாமி ...சலம் செய்துவிட்டு வரலாம்னு வந்துட்டேன். அவளைக் கூப்பிட்டால் என்னமோ பிரமாத ராங்கி பண்ணிக்கொள்கிருள்; அதான் மன்னி. அப்பப்பா, நம்மாத்தைப்போல் எங்கேயும் இருக்காதுடா'' என்ருள் தங்கம்.

"சித்தி சொல்வதுபோல் அம்மா ஒரு தலை இருந்தால் இப்படியெல்லாம் நடக்குமாடீ?'' என்று சொல்லிக் கொண்டே கோவிலுக்குள் நுழைந்தேன்.

வெள்ளிக்கிழமை; கோவிலில் கண்கொள்ளாச் சேவை.

# 7

## புயல் ஓய்ந்தது

அத்தையின் வாய்க்குச் சர்க்கரை போட வேண்டுமென்றுதான் நினைத்துக்கொண்டேன். முதல் நாள் இரவு அவள் கூறியதுபோல் வீடு எவ்வளவு சந்தோஷமாக இருந்ததோ மறுநாள் அவ்வளவு அலங்கோலமாகப் போய்விட்டது. மூலைக்கு ஒருவராக உம் என்று நின்றுகொண்டிருந்தார்கள். விடிந்தும் விடியாததுமாக, 'சாமி, அந்தச் சித்தியம்மா பல்லைக்கரயிலும் என்னமோ வசுக்கிட்டே போறாங்க. 'பாத்துக்கலாம் இந்த அத்தையின் கொட்டத்தை அடக்காங் காட்டின்னு, சபிச்சுக்கிட்டே போறாங்க. இருக்கறவங்களாச்சியும் நல்லா இருக்க வாணாமா சாமி? நம்ப மனுசாளுன்னு இப்படி இருப்பாங்களா?'' சாமி என்றான் வரதன் என்னிடம் வந்து.

நாளைக்குக் 'காலேஜ் டர்ம் பீஸ்' கட்டியாக வேண்டும். வீடும் வாசலும் இருப்பதைப் பார்த்தால் அப்பாவிடம் போவதற்கே கால் எழும்பாதுபோல் இருந்தது. வீட்டில் இருக்கவே பிடிக்கவில்லை. பாடம் ஏதோ கொஞ்சம் சந்தேகமாக இருந்தது. வாத்தியாரைப் பார்த்துக்கொண்டு வரலாம் என்று அவர் வீட்டுக்குப் போனேன். அவர் உள்ளே பையனுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக்கொண்டிருந்தார். கொஞ்ச நேரம் காத்துக் கொண்டிருக்க வேண்டியிருந்தது. அவருடைய பையனும் என் வகுப்பில் படித்துக்கொண்டிருந்தான். வகுப்பில் எல்லாவற்றிலும் நல்ல மார்க் வாங்குவான்.

"உனக்கு என்னடாப்பா? வாத்தியார் பையன்; வெறும் காகிதத்தைக் கொடுத்தால்கூட முதல் கிளாஸில் பாஸாகி விடலாம்'' என்று பையன்கள் எல்லோரும் பரிகாசம் செய்வோம். அரைமணி, முக்கால் மணி நேரம் காத்துக்கொண்டிருந்த பிறகு வாத்தியார் வந்தார்.

"என்ன செய்தி? பாடம் சந்தேகமாக்கும்?" என்றார். "ஆமாம் சார், நீங்கள் சொன்னது கொஞ்சம் சந்தேகமாக இருந்தது; கேட்டுக்கொண்டு போகலாம்னு வந்தேன்" என்றேன்.

வாத்தியார். 'ஹூம்..' என்று ஒரு முக்கல் முக்கிவிட்டு, "இந்தக் காலத்துப் பிள்ளைகளாய நீங்களெல்லாம் எதற்குப் பிரயோஜனப்? ஆன்னு, ஊங்கத் தெரியவில்லை. பொழுது விடிஞ்சா எங்கே கிரிக்கெட் மாட்சு, எங்கே குதிரைப் பந்தயம்னு காத்துண்டு நிக்கறேள். பாடத்தைப் படிக்கச் சொல்லு; மூக்கால் அழுவை! ஊர் சுத்தச சொன்னு எங்கேயாவது போய் நாள் முழுக்க வெய்யல்லே நின்னுவிட்டு வரும்! இன்டர் படிக்கிறதாம்; பி. ஏ. படிக்கிறதாம்! எழுத்துப் பிழை இல்லாமல் எழுதக்கூடத் தெரியவில்லை. படிக்கிறதாம் எல்லாம் படிப்பு! ஒரு காசுக்குப் பிரயோஜனம் இல்லேடா நீங்கள்ளாம்!" என்று ஒரே அடுக்கலாக அடுக்கினர். அதற்கு மேல் என்னுல் அவரோடு பேச முடியவில்லை. பேசாமல் நின்றேன். அவரும் உள்ளே சென்றுவிட்டார். என்ன செய்வது என்று தோன்றுமல் நின்றுகொண்டிருந்தபோது அவர் பையன் வெளியில் வந்தான்.

என்னைப் பார்த்ததும் அவனுக்கே ஆச்சரியமாக இருந்ததுபோல் தோன்றியது. "என்னடா காலையில் எழுந்து? காலேஜுக்கு நாழியாகவில்லே?" என்றுன். "ஒன்றும் இல்லேடா. வாத்தியாரைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன். இன்னிக்கு அவர் எதோ கோபமாக இருக்கிறுப்போல் இருக்கு. நான் போய்ட்டு வறேண்டா" என்றேன்.

"இரு" என்று கையில் இருந்த புத்தகத்தை உள்ளே வைத்துவிட்டு என்னுடன் அவனும் வந்தான்.

"என்னடா சிமா! வரவர எனக்கு எங்கேயாவது ஓடிப் போய்விடலாம்போல் அவ்வளவு வெறுப்பாக இருக்கிறதுடா; படிப்பும் வேண்டாம், மண்ணுங்கட்டியும் வேண்டாம் என்று தோன்றுகிறது. பொழுது விடிந்தால் பாடம்! மாலே வீட்டுக்கு வந்தால் பாடம்! இரவு பாடம்!

அறுபது நாழியுமா ஒருவன் பாடம் படிப்பான்! நான் புத்தகத்தை எடுக்காவிட்டால் அப்பாவே வந்துவிடுகிறார் புத்தகத்தை எடுத்துக்கொண்டு, சொல்லிக்கொடுப்பதற்கு. இருக்கும் மூளையும் குழம்பிப் போய்விடும்போல் இருக்கிறது. உலகத்தில் நாயாகப் பிறந்தாலும் பிறக்கலாம்; வாத்தியார் பிள்ளையாக மட்டும் பிறக்கக்கூடாதுடா!" என்று அவன் மனத்தில் உள்ளதை எல்லாம் ஒரேயடியாக என்னிடம் கொட்டினான்.

"நல்லதைத்தானேடா சொல்லுகிறார்? நீ முதலாவதாக வர வேண்டும் என்றுதானே. நாங்களெல்லாம் தலைகீழாக விழுந்தாலும் நடக்கிறதா? முப்பத்து ஐந்து மார்க்குக்கு மேல் ஒன்று வருகிறதா?" என்றேன்.

"போடா! உனக்கு என்ன தெரியும்? இப்படியெல்லாம் நம்ம காலேஜ்வரையிலுந்தானே? பரிக்ஷையில் 'கோட்டு'த்தான்" என்றான் அவன். எல்லாம் 'அக்கரைக்கு இக்கரை பச்சைதான்!'

நாழிகையாய்விட்டது என்று நானும் வீட்டுக்கு வந்துவிட்டேன். வீட்டில் ஒரு சந்தடி இல்லை. பள்ளிக்கூடம் போகும் குழந்தைகளையும் காணவில்லை; அவ்வளவு நேரம் ஆகிவிட்டது. உள்ளே நுழைந்ததும், "ஏண்டா, காலேஜுக்கு நாழிபாகலையா? இன்னிக்குத்தானே தெறக்கிறு உனக்கு?" என்றாள் தங்கம். "நல்ல வேளை, எப்படாப்பா திறக்கப் போகிறதுன்னுதான் நானும் காத்திண்டு இருந்தேன்" என்று சொல்லிவிட்டு அவசர அவசரமாக இரண்டு வாய் அள்ளிப் போட்டுக்கொண்டு போய்விட்டேன்.

அத்தையோ மன்னியோ ஒருவரும் என்னுடன் பேசவில்லை. பேசாதவரையிலும் க்ஷேமம்.

. காலேஜுக்குப் போனதும் பையன்கள் எல்லோரும் கும்பல் கும்பலாகக் கூடிக்கொண்டிருந்தார்கள். வரப்போகும் கிரிக்கெட் பந்தயத்தைப்பற்றிப் பையன்கள் மிகவும் சுவாரஸ்யமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். 'மணி ஆகிவிட்டதே: ஏன் இப்படி நிற்கிறார்கள்?' என்பது எனக்குத் தெரியவில்லை. 'குடல் அறுந்து போக ஓடி

வந்ததுதான் மிச்சமா என்ன?' என்று நினைத்துக்கொண்டு, "ஏண்டா? காலேஜ் இல்லையா?" என்றேன் பையன்களிடம். "இந்தக் காலேஜின்மேல் இடி விழுந்தாலுங் கூட மூடமாட்டார்களேடா, பாவிகள்! இவ்வளவு பேர் வெளியில் நிக்கறம். நீ மட்டும் என்னமோ ஓடுகிறாயே; ரொம்ப நல்லவன் போல! வாடா இங்கே" என்று என் கையைப் பிடித்துத் தரதரவென்று இழுத்துக்கொண்டு போனான் ஸ்வாமி.

நேரே நோட்டீஸ் போர்டுக்கு முன்னால் கொண்டு போய் நிறுத்தினான். போர்டின்மேல் கொட்டை எழுத்துக்களைக் கத்தரித்து, "அடுத்த வாரம் பரிக்ஷை வைத்தால் ஒருவரும் வரக்கூடாது" என்று ஒட்டியிருந்தது.

"என்னடா இது அநியாயம்?" என்றேன்.

"ரொம்ப யோக்கியண்டா நீ, தெரியாதா எங்களுக்கு? இதெல்லாம் நீ செய்ய மாட்டே; ஆனால் வகுப்பில் ஏரோபிளேன் செய்து வாத்தியார்மேல் மாத்திரம் அடிப்பே! அப்போதெல்லாம் நாங்கள் உன்னைக் காட்டிக்கொடுத்தோமா? இப்போது நாங்கள் செய்வதை நீயும் செய்துதான் ஆகவேண்டும். இல்லாவிட்டால் நீ மட்டும் வேண்டுமானால் போய் வகுப்பில் உட்கார்ந்துகொண்டிரு. நாங்கள் வரப் போவதில்லை" என்று எல்லோரும் என்னை வந்து சூழ்ந்து கொண்டார்கள். என்ன செய்வது என்று எனக்குத் தெரியவில்லை.

"காரணத்தைச் சொல்லுங்களேண்டா பாவிகளா!" என்றேன்.

"காரணம் கேட்கிறானடா காரணம்; ஸ்போர்ட்டிங் ஸ்பிரிட்டே கிடையாதுடா நம்ம பசங்களுக்கு. இப்படியிருந்தால் ஒற்றுமை எங்கிருந்து வரடபோகிறது, இந்தியாவுக்கு? எல்லா விஷயத்திலும் இப்படித்தானே. அடுத்த வாரம் 'கிரிக்கெட் டீம்' வரப்போகிறது தெரியுமா உனக்கு? ஏதாவது சொப்பனம் கண்டுகொண்டிருக்கிறாயா நீ? கால் வைக்கக்கூடாது வகுப்பில்; ஸ்டிரைக்" என்று ஒரே சத்தம்.

காலேஜில் அன்று ஒரே ரகளை. பையன்கள் ஒருவராவது உள்ளே போகவில்லை. கறுப்புக் கொடிகளையும், கொட்டை எழுத்தில் 'ஸ்டிரைக்' என்று எழுதிய அட்டைகளையும் தூக்கிக்கொண்டு தெருத் தெருவாகச் சுற்றினோம். 'வீதிகளைச் சுற்றிப் போலிசார் கையில் அடிபட வேண்டாம். நல்ல வழியாக உள்ளே வருவதானால் வாருங்கள்; இல்லாவிட்டால் வீட்டுக்குப் போய்ச் சேருங்கள்' என்று உத்தரவிட்டார் பிரின்ஸிபால். வீட்டுக்கு எல்லாப் பையன்களும் கிளம்பிவிட்டார்கள்.

இன்னும் பீஸ் கட்டியாகவில்லை. அதற்கு இவனைக் கெஞ்சி அவனைக் கெஞ்சி 'டைம்' வாங்கிக்கொண்டிருக்கும் எனக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. நாம் மட்டும் வகுப்புக்குப் போய்விடலாம் என்று நினைத்தேன். நாளைக்கு ஒரு பையனும் என்னுடன் பேசவே மாட்டான். வாயைக் கிண்டி வயிற்றெரிச்சல் கொட்டிக் கொள்வான்கள். இதெல்லாம் தெரியும். ஆனால் எனக்கும் மற்றவர்களுக்கும் எவ்வளவு வித்தியாசம் என்று நினைத்துக்கொண்டே கிளம்பினேன். வகுப்புக்கு நான் போனபோது நானும் இன்னும் இரண்டு பேரும் மட்டுந்தான் இருந்தோம். வந்த வாத்தியார், "போடா, உங்க மூன்று பேருக்குப் பாடம் சொல்லிக்கொடுக்கிறார்கள்; வேலையத்துப்போய்! அவன்களோடு தொலையாமல் என் கழுத்தை அறுக்க உட்கார்ந்துகொண்டிருக்கேளே. பையன்கள் எல்லோரும் வராவிட்டால் அந்த மேதாவிதான் என்ன செய்துவிட முடியும்? எல்லோரையும் போகச் சொல்லிவிடுவானோ? தண்டம் போடப்போகிறான்! அவ்வளவுதானே! இருக்கிறவனைப் பொல்லாதவனாய் அடிக்க நீங்க மூணு பேர் கிளம்பினேளாக்கும்! இப்படித்தானே நம்ம இந்தியாவிலேயே, எங்கேயாவது புஸுக்குனு இரண்டுபேர் கிளம்பி, இருக்கிறவன் மென்னியைப் பிடிக்கிறான்?" இது ஒழிந்தால்தான் நம்ம ராஜ்யம் உருப்படப்போகிறது! இதிலேயே தெரியவில்லையா ஒற்றுமை?' என்று ஒரு பெரிய பிரசங்கமே செய்துவிட்டுப் போய்விட்டார்.

இதைக் கேட்கவா வகுப்புக்கு வர வேண்டும்? எங்களுக்கும் அவர் கூறியது உண்மை என்றே பட்டது. 'ஒரு

பையன்கூட வராவிட்டால் இவன் என்ன செய்துவிட முடியும்? காலேஜை மூடிவிட்டுப் போகட்டுமே' என்பது பிறகுதான் மனத்தில் உதித்தது. ஒருவரை ஒருவர் பார்க்கவே வெட்கமாக இருந்தது. பேசாமல் திருடனுக்குத் தேள் கொட்டியதுபோல் வெளியே வந்துவிட்டோம். கடன் இழவுக்கு வாத்தியார்கள் மாத்திரம் அங்கே உட்கார்ந்துகொண் டிருந்தார்களோ என்னவோ? 'எங்களைக் கூறுவது போல் இவர்களும் சேர்ந்து செய்தால்! உத்தியோக பயந்தான் இவர்களுக்கு' என்று ஒரு பக்கம் கோபம் வந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் என்னை நானே சமாதானம் செய்துகொண்டேன். அவர்கள் என்றால் இன்றைக்கெல்லாம் பதினைந்து இருபதுபேர் இருப்பார்கள். ஒரு சமயம் தள்ளிவிடவும் முடியும்! பையன்கள் என்றால் அப்படி முடியுமா?

உடனே வீட்டுக்கு வருவதற்கும் எனக்கு யோசனையாக இருந்தது. அப்பா கட்டாயம் கோபிப்பார். யோசனை செய்து பார்த்தேன். அப்படி வீட்டுக்குப் போய்த்தான் என்ன செய்வது? ஒரு நிமிஷம் பேசாமல் உட்கார முடியவில்லை. சினிமாப் பார்த்து எவ்வளவோ மாதங்கள் ஆகிவிட்டன. சிறிது நேரம் எல்லாவற்றையும் மறந்துவிட்டுச் சினிமா பார்த்துவிட்டுத்தான் போவது என்ற முடிவுக்கு வந்தேன். ஜஹாங்கீர் படம் பார்க்க வேண்டும் என்று வெகு நாட்களாக நினைத்துக்கொண் டிருந்தேன்.

மூன்று மணி ஆட்டத்துக்குப் போனேன். எல்லோரும் சிலாகித்துக்கொண்டபடி படம் நன்றாக இருந்தது. படம் பிடித்திருக்கும் விதமோ இடங்களோ ஜோடனையோ எல்லாம் முதல் தரம்! ஒரு படம் எடுப்பதென்றால் சாமான்யமாகவா இருக்கிறது? லக்ஷக்கணக்கில் போட்டால் ஒரு படம் நன்றாக எடுக்கலாம். நூர்ஜஹான் வேஷம் போட்டுக்கொண்டு நடித்தவள் நன்றாகத்தான் நடித்தாள். ஆனால் 'பெண் என்பது எவ்வளவு அழகுள்ள ஒரு வடிவாகத் தோன்றுகிறதோ அவ்வளவு வடிகட்டிய கல்மஷமும், கிராதகத்தனமும் அவ்வடிவத்துக்குள்ளே மறைந்திருக்கும்' என்ற பாடத்தை எனக்குக் கற்பிப்பது போல் இருந்தது. நடிப்பவர்களும் பணப் பேய்களா என்ற

சந்தேகம் பலமாக மனத்தில் எழுந்தது. சீமையில் லக்ஷக் கணக்கில் நடிகர்களுக்குக் கொடுப்பதுபோல் நம் நாட்டில் கொடுப்பவர் ஒருவரையும் காணவில்லை. ஓகோ என்றால் இருபதாயிரம் அல்லது முப்பதினாயிரம் கொடுக்கிறார்கள் ஒரு படத்துக்கு; அதுவும் வருஷக் கணக்கில் இவர்களை வாட்டி, வதக்கி! இதன் நடுவில் சிறிய அற்ப நக்ஷத்திரங் களைப்பற்றிக் கேட்கவேண்டுமா! இதற்காக மானம் வெட் கம் யாவிடத்தன்மை எல்லாவற்றையும் இழந்து விலங்கு களைப்போல் ஆடையின்றி நடிக்க வேண்டும்! இதைப் பார்க்க அல்லவா இவ்வளவு கூட்டம்! கோரம்! நடிப்பவர் களைவிடப் படம் எடுக்கும் பெரிய பிரமுகர்களுடைய பேராசையல்லவா இது? சமூகத்தின் அறிவை விருத்தி செய்வதற்கு மாறாக இன்னும் மங்கச்செய்து குழியில் தள்ளிவிடுகிறார்கள். பணம் என்றால் பிணமும் வாயைத் திறக்கும் என்பது பொய் என்று எப்படிச் சொல்ல முடியும்? கோடிக்கணக்காக ஐசுவரியத்தை வைத்துக் கொண்டு சமூகச் சீர்திருத்தம் செய்யக்கூடிய இவர்களா நடிப்பவர்களையும் மானமில்லாத விலங்குகள் ஆக்கி உடல், ஆவி எல்லாவற்றையும் விலைக்கு வாங்க வேண்டும்! இவர் களைப் பணப்பேய்கள் என்று சொல்லாமல் வேறு என்ன சொல்வது?

ஜனங்களுடைய ஆரவாரத்தையும் சந்தோஷத்தை யும் என்னால் பார்க்கவே முடியவில்லை என்று மேலே மேலே நான் யோசித்துக்கொண்டே போனபோது கடை சியில் எனக்கே சந்தேகம் வந்துவிட்டது.

'நிர்வாண தேசத்தில் கோவணம் கட்டியவன் பைத்தி யக்காரன் என்பதுபோல் இதையெல்லாம் சொன்னால் சொல்லுகிறவனைப் பைத்தியம் என்பார்களே தவிர, கேட் கப் போகிறவர் எவரும் இல்லை. அதுவும் அல்லாமல் இப் படியெல்லாம் தூஷித்துக்கொண் டிருந்தால் இந்த உலகத் தில்தான் எப்படிப் பிழைப்பது? லக்ஷாதிபதியா நான்?' என்று என் மனது எவ்வளவோ தூரம் ஓடியது. ஆட்டம் முடிந்து வீட்டுக்கு வந்தபோது விளக்கு வைத்து விட்டது. வாசலில் அத்திப்பேரும் ராமுவும் எதிரும் புதிரு

மாக உட்கார்ந்துகொண் டிருந்தார்கள். நான் உள்ளே நுழைந்ததும் ராமு என்னை முறைத்துப் பார்த்தான். அத்திம்பேருக்குக் கண்கள் உருளுமே ஒழிய உருளைக் கிழங்கு போன்ற அவர் முகத்திலிருந்து நாம் ஒன்றையும் தெரிந்துகொள்ள முடியாது. பண்ருட்டிச் செட்டியார் பொம்மை போல் சாய்ந்திருந்தார் நாற்காலியில்.

அறைக்கு வந்து, "அப்பா வந்துவிட்டாரா?" என்று வரதனைக் கேட்டேன்.

"இன்னும் இல்லே" என்றான் அவன்.

'ஏன் இவர்கள், 'விதை விழுங்கிய கோழி' போல் உட்கார்ந்துகொண் டிருக்கிறார்கள் பின்னே?' என்று யோசித்துக்கொண்டே உள்ளே போனேன்.

அத்தை ஏதோ பேசிக்கொண்டே இந்தப் புறமும் அந்தப் புறமும் போய்க்கொண் டிருந்தாள். தங்கம் பஸ வன்போல் முகத்தை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந் தாள். நான் ஒன்றும் கேட்கவில்லை. கை கால் அலம்பிக் கொள்ள வெந்நீர் உள்ளுக்குள் நுழைந்தேன்.

"என்னை வேணும்னு ஆயிரம் சொல்லுவேள் எல்லா ரும்; எல்லாரும் இந்த மாதிரியே வாயை மூடிண்டு இருப் பாளா? நான்தான் இருக்கேனே ஒரு அசடு!" என்று நான் வருவதைக்கூடப் பார்க்காமல் என்னையே இடித்துத் தள்ளி விடுபவள் போல் வெளிக்கிளம்பினாள் மன்னி. வந்தவன் எனக்கு ஒரு காபியா, டிபனா ஒரு கேள்வி முறை யைக் காணோம். 'சரி! தூபம் போட்டுவிட்டுப் போய் விட்டாளோன்னோ சித்தி! அதுக்குத்தான் வந்தாள்போல் இருக்கிறது' என்று நினைத்துக்கொண்டே நான் என் அறையில் சென்று உட்கார்ந்தேன்.

"அசடா? இருக்கிறவாளை அசடாக அடிப்பேள் எல்லாரும்" என்றாள் அத்தை.

"எல்லாம் தெரியாதா என்ன எனக்கு? நான்தான் சொன்னேனே; அப்பா தங்கத்தை அழைச்சுண்டு வரத் தான் போய் இருக்கார்னு; எதுக்கு அழைச்சுண்டு வந் தார்னு வேணும்னு உங்களுக்குத் தெரியாது" என்றாள் மன்னி.

"எல்லாம் உனக்குத்தான் தெரியும்! வேறு யாருக்கு என்ன தெரியும்? எல்லா அநுபவமும் உனக்குத்தானே? ஏன் மன்னி, இப்படியெல்லாம் பேசுகிறாய்?" என்றாள் பேசாமல் இருந்த தங்கம். "அதுக்குள்ளே உனக்குப் பொத்துண்டு வரதே, ஏன்? எதுக்கு எல்லாத்தையும் மறைச்சு வைக்கறே? நான் இங்கே நின்றேன், அங்கே நின்றேன். அவனோடே பேசினேன்னு இல்லாத்தையும் பொல்லாத்தையும் சொன்னது எனக்குத் தெரியாதுன்னு நெனைச்சுண்டு இருக்கயோ? என்னமோ என்னை அடக்க வறயே? போனால் போகிறது, போனால் போகிறது என்று நான் பேசாமே இருந்தா வரவர விட்டிலே நடக்கற கூத்தத் தாங்க முடியாதுபோலே இருக்கே! ரொம்ப அழகு!" என்றாள் மன்னி கோபத்துடன்.

இதைக் கேட்டவுடன் தங்கத்துக்குக் கோபம் தாங்க முடியவில்லை என்பது அவள் குரலிலேயே நன்றாகத் தெரிந்தது.

"கூத்து யார் அடிக்கறா இங்கே? எல்லாம் நீதான் அடிக்கறே. இரண்டு நாள் இருந்துவிட்டுப் போகப் போகிறவள் நான். அவர் வந்து தெவசம் என்று அழைத்துக்கொண்டு வந்தது உனக்கு அதுக்குள்ளே பொறுக்கல்லே. இல்லாத்தையும் பொல்லாத்தையும், ஏன் இப்படி உளறறே? நான் வேணும்னு நாளைக்கே புறப்பட்டுப் போய்விடுகிறேன். நீயும உன் குழந்தைகளுமே இருங்களேன் வீட்டிலே! போயும் வந்தும் யார் வரா இங்கே? நான் ஒருத்தி! இனிமே அதையும் நிறுத்திண்டுடறேன் பிடிக்காட்டா" என்றாள்.

"நான் ஒண்ணும் இல்லாத்தையும் பொல்லாத்தையும் சொல்ல உங்காத்துக்கு வரலே! தெரியுமா? தடியாட்டமா யாரோ சாமியாம்! பூதமாம்! அதையெல்லாம் கொண்டுவந்து வீட்டிலே வச்சுண்டு கூத்தடிக்கறது இவர் கண்ணில் படலே! நான் யாருக்கோ பதில் சொன்னேனாம்! அதனால் இவர் வம்சத்துக்கே அவமானம் வந்தூடுத்தாம். முழுகியே போயிடுத்தாம்! எவனோ ஒரு தடியன் காலையும் கையையும் பிடிக்கலாம் இவாள்ளாம்! நான் தூர நின்று கொண்டு எங்க அத்தானுக்குப் பதில் சொன்னது தப்

பாய்ப் போயிடுத்தாம்! எப்படி இருக்கு! என்ன இருக்கு எனக்கு இந்த ஆத்திலே? வெள்ளிப் பாத்திரமா; நகையா, நட்டா ஒரு துரும்பு கிடையாது குழந்தைகளுக்கு! என்னத்தைச் செஞ்சுவிடுகிறூர் இவர்? குழந்தைகளுக்கு இதுவரைக்கும் ஒரு சட்டை! அதுக்கு வழி உண்டா? எத்தனை வருஷமானுலும் அவா செய்யணும்! அம்மணிக்கும் எனக்கும் என்ன வித்தியாசம் இந்த வீட்டிலே? அவளுக்கு நடக்கிறதுதான் எனக்கும் நடக்கிறது. இங்கிலே அதிகாரம் தான் பறக்கிறது! எது செய்தாலுமா தப்பு? இவர் மனசு இருக்காப்பலேதான் எல்லாரையும் நெனைச்சுண்டு இருக்கார். நான்.........'' என்று மன்னி முடிக்கவில்லை. என்றால் அங்கே உட்கார முடியவில்லை. கோபத்துடன் எழுந்து வந்து, ''போரும் நிறுத்துங்கோ! ரொம்ப நன்ருக இருக்கிறது பேச்சு'' என்று எரிந்து விழுந்தேன். என்ன பேச்சு இதெல்லாம் வீட்டில்?

''பாரேண்டா!' இப்படி இவள் கண் கசங்க என்னத்துக்கு இருக்கணும், இங்கே? என்னமோ அப்பா வந்தாரேன்னு வந்தேன். குழந்தைகளை அனுப்ப எங்க மாமியார் மாமனுருக்கு இஷ்டமே இல்லே. நான்தான் புத்திகெட்டு வந்தேன். அம்மா இல்லே என்ருல் அப்புறம் அதென்ன பிறந்தாம்! 'கெட்ட மாட்டைத் தேடுவார் இல்லே, மேய்ச்சக் கூலி கொடுப்பார் இல்லே' ங்கருப்பலே அடக்கற கை ஒன்று இல்லேன்னு அவாவா வாயிலே வந்தபடி பேசிண்டு இருக்கா! எனக்கு வாண்டாண்டாப்பா இந்தப் பாடு! அவருக்கு வேலே ஆகட்டும், அப்புறம் நிதானமாக வந்துகொள்ளுகிறேன்'' என்று என்னிடம் குறைப்பட்டுக்கொண்டாள் தங்கம்.

''உம்....... உம்....... எல்லாம் சொல்லுவார். இருப்பதைச் சொன்னுல் கோவம் வராதா? உங்களுக்கெல்லாம் என்ன? மாமனுர், மாமியார் தலேயிலே தூக்கி வச்சுண்டு இருக்கா! நீங்க சொல்றபடிதானே அவா கேக்கணும்? வீடு இருக்கு, வாசல் இருக்கு, எல்லாம் இருக்கு! தைரியமாப் போய்ட்டு வறேன்னு சொல்றேள். எனக்கு என்ன இருக்கு? சத்திரமாட்டமா இங்கே வந்து யார் எப்போது போட்டாளோ, எதைப்

போட்டாளோ, வாயைத் திறக்காமே சாப்பிட்டு விட்டுச் சொல்லுவதையும் கேட்டுண்டு இருக்கும்படியா என் தலையிலே எழுதியிருக்கிறார் ஈசுவரன்! கொண்டு வந்து கொடுத்தாளே இடம் பார்த்து! பெத்த வயிற்றிலே பெரண்டையைத்தான் வச்சுக் கட்டிக்கணும்" என்று மன்னி சொன்னபோது என்னால் தாங்கவே முடியவில்லை. "எல்லாருக்கும் என்ன? ஒன்றும் புரியவில்லை போல் இருக்கு! வீட்டில் புருஷா இருக்கா, ஒரு பெரியவர் இருக்கார் என்று ஏதாவது பயம் துளி இருந்தால் இப்படியெல்லாம் பேசுவேளா? வரவர நானும் பார்க்கிறேன், தலைக்குத் தலை நாட்டாமையான்னு இருக்கிறது? ஏதாவது அப்பாவின் காதில் படப்போகிறது! வயசு காலத்தில் அவரைப் பார்த்துக்கொள்ள வேணும் என்பது இல்லாமல் பேர்ப் பேராய்க் கத்திக்கொண்டு இருக்கேளே! நிறுத்துங்கோ பேச்சை!" என்று பெரிசாகச் சத்தம் போட்டுவிட்டுத் திரும்பிக்கூடப் பார்க்காமல் உள்ளே போய்விட்டேன்.

அம்மாவைப்பற்றி அதிக வருத்தம் என் மனத்தில் தோன்றியது இதுதான் முதல் தடவை. 'ஐயோ! தாயில்லாக் குழந்தை' என்று யாராவது சொன்னாலோ அம்மாவைப்பற்றி யாராவது பேசும்போதோ சற்று மனம் கலங்குமே ஒழிய மற்றச் சமயத்தில் இதைப்பற்றி நான் சிந்தித்ததே இல்லை. இன்று இந்தச் சம்பவங்களையெல்லாம் பார்த்ததும் எனக்குத் துக்கந்தான் வந்தது. அருமை அம்மா இருந்தால் முதலில் யாராவது இந்த வீட்டில் நாட்டாண்மை செய்ய முடியுமா? எல்லோரும் ஒட்டாமல் இருப்பார்களா? ராமுவும் சொல்லுவார் பேச்சைக் கேட்டுக்கொண்டு அப்பாவுடைய தள்ளாமையைக் கூடப் பார்க்காமல் இப்படிப் பேசுவானா? அம்மா காட்டும் அன்பில் அப்பாவும் ராமுவும் என்னைக் குழந்தை என்று நினைக்காமல் இருந்துவிடுவார்களா? இந்தப் பெண் குழந்தைகள் வருவதுகூடப் பிடிக்காமல் இப்படி ஒதுங்குமா? அதுகள் வராவிட்டாலும் அம்மா போகாமலும் வராமலும் இருந்துவிடுவாளா? குஞ்சு இப்படித் தலை கால் தெரியாமல் மிதக்க முடியுமா? அத்தையைத்தான் யாராவது ஏதாவது சொல்ல

முடியுமா? நாட்டுப் பெண்ணின் அருமையும் குழந்தைக ளுடைய அருமையும் எப்படி இருக்கும்? இப்படியா பேசும் இதுகளெல்லாம்? சத்திரம்போல் வீடு இப்படியா இருக்கும்? இல்லே, அப்பாவின் சம்பாத்தியந்தான் இப் படிச் 'சமுத்திரத்தில் பெருங்காயம் கரைத்தது'போல் போகுமா? அவருக்குத்தான் இப்படிச் சுகம் இல்லாமல் போகுமா? அம்மா குழந்தைகளிடம் காட்டும் அன்பின் ஊற்று அவருடைய உள்ளத்தில் போய்ப் பாயாமல் இருந்துவிடுமா? நானும் அருமையின்றி இப்படி இருப் பேனு?—என்ற இவைகள் ஒவ்வொன்ருக என் மனத்தில் ஊற ஊறத் துக்கம் பொங்கியது. அம்மாவை 'அம்மா' என்று என்றைக்குக் கூப்பிட்டேனே குழந்தையில்; அப் போது என் மார்பு வெடிக்க, "அம்மா!" என்று கத்திக் கொண்டே மேஜையின்மேல் படுத்துக்கொண்டு அழுதேன். அப்படியே எவ்வளவு நேரம் அழுதேனே எனக்கே தெரியாது.

"டேய் சீமா, என்னடா பண்ணறே? சாப்பிடக் கூப்பிடருடா" என்று அப்பா கதவைத் திறந்ததுதான் எனக்குத் தெரியும். முகத்தை அவருக்குக் காட்டாமல் சவுக்கத்தால் மறைத்துக்கொண்டு வெளியே வந்தேன். "என்னடா கண்ணேப் பிசையறே? ஏதாவது கோட்டோ?" என்ருன் ராமு. பதில் ஒன்றும் சொல்லாமல் சாப்பிட்டு எழுந்து போய்விட்டேன்.

# 8

## இடியும் மின்னலும்

தூங்கி எழுந்ததும் சீக்கிரமாகவே காலேஜுக்குத் தொலைய வேண்டும் என்று நினைத்துக்கொண்டே எழுந்தேன். பாடம் ஒன்றும் இல்லை. வெளியில் சென்று ஒரு சுற்றுச் சுற்றிக் கொண்டு வருவதற்குள் மணி ஆகிவிட்டது. குளித்துவிட்டு, 'சாப்பிட்டோம்' என்று இலையில் உட்கார்ந்து பேர்பண்ணிவிட்டுச் சட்டையை எடுத்துப் போட்டுக்கொண்டேன்.

அதற்குள், "ஐயா கூப்பிடுறாங்க" என்றான் வரதன் வந்து.

"எதுக்கு?" என்றேன்.

"தெரியாதுங்க. தபால்காரன் கடிதாசு கொடுத்து விட்டுப் போனான். அதைப் பிரிச்சுப் பார்த்துவிட்டுக் கூப்பிடுறாங்க" என்றான் அவன்.

பக்கென்றது எனக்கு. யாரிடமிருந்து கடிதம் வந்திருக்கும்? பாபு, பட்டு யாராவது எழுதியிருப்பார்களோ என்று நினைத்துக்கொண்டே மெத்தைப்படி ஏறினேன். ஏனென்றால் அவர்களிடமிருந்துதான் கொஞ்ச நாளாக ஒரு தகவலும் இல்லை. திவசத்துக்கு வரச்சொல்லி அப்பா எழுதச் சொன்னார். அதற்குத்தான் பதில் வந்திருக்க வேண்டும் என்று நினைத்தேன்.

அப்பாவின் அறையில் நுழைவதற்குள், "என்னடா? உங்களுக்கு இதுதான் வேலைபோல் இருக்கிறது! நீங்கள்ளாம் படிக்கப் போறேளா காலேஜுக்கு? இல்லை இப்படிக் கூத்தடிக்கப் போறேளா?" என்றார் கடுமையாக. எனக்கும் இதெல்லாம் பிடிக்கும் என்றாலும் இவருக்குப் பயந்துகொண்டுதானே பேசாமல் இருந்தேன்?

"பசங்களெல்லாம் ஸ்ட்ரைக் செய்தார்கள். நான் ஒன்றும் செய்யவில்லையே, அப்பா!" என்றேன்.

"செய்யாமல் வந்தாயோ, பிழைச்சே. பிரின்ஸிபால் கடிதாசு எழுதியிருக்கான் பார்" என்று கடிதத்தை என்னிடம் கொடுத்தார்.

"இவன் ஒன்றிலும் சேரவில்லை. இனி ஒன்றிலும் சேருவதில்லை என்று தாங்கள் எழுதிக் கையொப்பம் செய்து அனுப்பினால்தான் நாங்கள் சேர்த்துக் கொள்ள முடியும். இதற்குமேல் நாங்கள் பொறுப்பாளி அல்ல" என்று எழுதியிருந்தார் பிரின்ஸிபால்.

"என்ன செய்யணும்?" என்றேன்.

"என்ன செய்யணுமா? இந்தக் காலத்துப் பிள்ளைகளே இப்படித்தான். பெரியவாள் படுகிற கஷ்டம் உங்களுக்கு என்ன தெரிகிறது? பணத்தையும் கொட்டிக் கொடுத்துவிட்டு நாங்கள்தான், 'இஞ்சி தின்ற குரங்கு' போல் விழிக்கவேண்டியிருக்கிறது! எவனோ வரானும் சிறையிலிருந்து வேலையற்றவன்கள்! நீங்க இருக்கும் வேலை வெட்டி எல்லாவற்றையும் விட்டுவிட்டு அங்கே போய் நில்லுங்கோ! கடைசியிலே அவன் கொள்ளை அடித்துக் கொண்டு போகிறான் எல்லாக் காசையும். ஸ்பிரிட்டாம் ஸ்பிரிட்! இந்த ஸ்பிரிட் நம்ம காரியங்களில் இருக்கிறது தானே? இருக்கும் பணத்தையெல்லாம் அவனுக்கா கொட்டணும்! இன்னும் எத்தனை பேர் இப்படிக் கஷ்டப் படுகிறார்களோ, யார் கண்டா? எல்லாம், 'குட்டி குலைத்து நாயின் தலையில் வைத்ததாம்' என்பது சரியாக இருக்கு. நானும் கையெழுத்துப் போட்டுத் தொலைக்கிறேன்; நீயும் போட்டுக்கொண்டு போய்த் தொலை. இனிமேல் இந்த மாதிரி வழிக்குப் போனாயானால் பார்த்துக்கொள்" என்று சொல்லிக்கொண்டே அப்பா கடிதத்தில் கையொப்பம் இட்டார். நானும் போட்டு எடுத்துக்கொண்டு கிளம்பும் சமயத்தில், 'பீஸ்' ஞாபகம் வந்தது. இப்போது அதை எப்படிக் கேட்பது?

'சொன்னால் குத்தம், சொறிந்தால் அரிப்பு' என்பது போல் இப்போது அதையும் எப்படிக் கேட்பது?

ஒன்றும் கேட்காமல் காலேஜுக்குப் போய்ச் சேர்ந்தேன். பையன்கள் சரியாக வந்திருக்க மாட்டார்கள்

என்று நினைத்துக்கொண்டு சென்றேன். ஆனால் ஒருவன் பாக்கி இல்லை. அவ்வளவு பேரும் வந்திருந்தார்கள். 'எங்கப்பா கோபித்துக் கொண்டாடா, எங்கப்பா கோபித்துக் கொண்டாடா' என்று பையன்களுக்குள் இதே பேச்சு. எல்லாருடைய அப்பாவும் இதையே தானே சொல்லியிருக்கப் போகிறார்கள்?

பையன்களுக்குப் பாடம் ஓடவில்லையே தவிர வழக்கப்படி எல்லாம் முறையாக நடந்தது. பையன்கள் மறுபடியும் என்மீது பாய்வார்கள்போல் இருந்தது. காலேஜ் முடிந்ததும் முடியாததுமாக வீட்டுக்குப் புறப்பட்டு விட்டேன்.

அப்பா என்னவோ வேதனையுடன் வாசலில் உட்கார்ந்துகொண்டிருந்தார். என்னைப் பார்த்ததும், "என்னடா? அப்பாவைப் பார்த்துக்கொள்ளணும் இனிமே" என்றார் அத்திம்பேர்.

நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை. 'ஏன் இப்படிச் சொல்லுகிறார்?' என்று நினைத்துக்கொண்டே உள்ளே போனேன்.

அத்தையும் அத்திம்பேரும் ருக்குவை அழைத்துக் கொண்டு அன்றே ஊருக்குக் கிளம்பிவிட்டார்கள். அத்தைக்கும் அத்திம்பேருக்கும் சாப்பாடே இறங்கவில்லை. அத்தைக்குக் கண்களில் ஜலம் துளும்பிக்கொண்டிருந்தது. வண்டி வந்து சாமான்களையெல்லாம் ஏற்றியாகிவிட்டது. எனக்கும் தாங்கவில்லை. "என்ன அத்தை, இதுக்கெல்லாமா பெரியவா கோவிச்சுக்குவா? யார் எதை வேணுமானாலும் உளறிக்கொண்டு இருக்கட்டுமே! அதற்காக நீ ஊருக்குப் போக வேணுமா?" என்று தடுத்துப் பார்த்தேன். "வாண்டாம்டாப்பா, வாண்டாம்! என்னாலே கடைசியிலே அவன் கஷ்டப்பட வேண்டி இருக்கு! நானும் என் பொண்ணும் சாப்பிடுவதையாவது நன்றாக மீத்துவைக்கட்டும் மகராஜிகள்! எப்படியாவது குழந்தைகள் ஆயுசோடே நன்றா இருக்கணும். இதுதான் நான் வேண்டறது. இந்த வயத்தே எங்கே வளத்தா என்ன? உன் உடம்பைப் பார்த்துக்கொள். அப்பாவையும்

பாத்துக்கோ. வேறே உனக்கு நான் என்ன சொல்லப் போறேன்?" என்று அத்தை கூறியபோது அத்தையின் தொண்டை தழுதழுத்தது. அப்பா ஒன்றுமே பேச வில்லை. "அடிக்கடி கடிதாசு போடு அத்தே; அநேகமா நாளும் நாளைக்கு ஊருக்குப் போய்விடுவேன்' என்று தங்கம் சொன்னபோது நானும் அப்பாவும் அவளைத் திரும்பிப் பார்த்தோம்.

"உம்...சரி கிளம்பு.." என்று அத்திம்பேர் வண்டியில் ஏறிக்கொண்டார்.

"நிறைஞ்ச வீட்டிலே கண்ணிலே ஜலம் விடப் படாதுப்பா. தங்கம், நான் போய்ட்டு வறேன்; அப்பாவை விட்டுடாதே!" என்று அத்தை கண்ணைத் துடைத்துக் கொண்டபடி இறங்கியபோது என்னாலும் தங்கத்தாலும் அங்கே நிற்கவே முடியவில்லை. ஒருவரையும் பார்க்காமல், "போய்ட்டு வறேன்" என்று பொதுவில் சொல்லிவிட்டு மலங்க மலங்க விழித்துக்கொண்டு ஓடிய ருக்குவைப் பார்த்ததும் நான் உள்ளே வந்துவிட்டேன். என்னையும் அறியாமல் அழுகை வந்துவிட்டது.

"என்னடீ! ஓடி வறே; இத்தனை நாள் சோறு போட்டாரே உனக்கு! தண்டச் சோறு! போய் நமஸ்காரம் செய்துட்டு வா, மாமாவுக்கு!" என்று ருக்குவை அதட்டினாள் அத்தை.

அவள் வந்து அப்பாவை நமஸ்காரம் செய்துவிட்டுப் போனதும் அப்பா குலுங்கக் குலுங்க அழுதுகொண்டிருந்தார். மன்னியின் கண்கள் மாத்திரம் எப்படிக் கண்ணுடிக்கண்களாக இருந்தனவோ எனக்கே தெரியவில்லை. அப்பாவைப் பார்த்த வரதனால்கூடப் பேசாமல் இருக்க முடியவில்லை! நான் வந்ததும், "நம்ப அம்மா இருக்கப் படாதுங்களா சாமி! பாழும் யமன்" என்று விசித்தான்.

படுத்துக்கொள்ளப் போனபோது, "நடராஜ ஐயர் இரண்டு மூன்று தடவை வந்துவிட்டுப் போனாருங்க சாமீ, உங்களைத் தேடிக்கிட்டு" என்று வரதன் கூறினான். எனக்கு இருந்த அலுப்பில், 'என்னைத் தேடிக்கொண்டு ஒருவருமே வரவேண்டாம்' என்று தோன்றியது.

இதுவரையிலும் இப்படி ஒன்றையும் தெரிந்து கொள்ளாமல் இருந்ததை நினைக்க எனக்கே பிடிக்கவில்லை. ஆனால் அது என்னுடைய பிசகு என்று எனக்குத் தோன்ற வில்லை. வீட்டுக்கு உறவினர் வருவதும் போவதும் இதைப்பற்றிப் பேச்சும் இருந்தால்தானே எதுவும் தெரியும்? இதுவரையிலும் மன்னியும் இப்படியெல்லாம் பேசியும் எனக்குத் தெரியாது. இந்த இரண்டு வருஷங்களாக அவள் இவ்விடம் இல்லாமல், அத்தி பூத்தது போல் வந்துவிட்டுப் போகும் விஷயம் இவ்வளவு மூடு மந்திரமாக இருக்கும் என்றும் படவில்லை. மன்னியை நான் வீணாகப் பழிக்க மாட்டேன். 'புழுவைக் கொட்டிக் குளவியாக்குவதுபோலும், அழுக்கற்ற கண்ணாடியின் மீது வர்ணம் தடவுவதுபோலும் நல்ல உள்ளத்தைப் பொறாமை என்ற வர்ணத்தால் எப்படி மாற்றிவிட்டார்கள்!' என்று நினைத்தபோது அவளுடைய பெற்றோரின்பேரில் எனக்குத் தாங்க முடியாத ஆத்திரம் வந்தது. ஒரு குடும்பம் சற்று உட்கார்ந்துவிட்டால் இப்படியா வாயில் வந்தபடி பேசவேண்டும்?

எவ்வளவோ வேதனை செய்தது. ஆனால் வேதனைப் பட்டு என்ன பயன்? 'இதற்கு மேல் என்ன வழி? ஏதாவது செய்ய முடியுமா? அதுவும் என்னால் ஏதாவது ஒரு கடுகளவு செய்ய முடியுமா?' என்பதை என் உள்ளம் ஆராய ஆரம்பித்தது. வழி எங்கிருந்து பிறக்கப் போகிறது? இன்று சம்பளம் கட்டுவதற்குக் கடைசி நாள். 'அப்பா இருக்கும் நிலைமையில் அவரைப்போய் எப்படிக் கேட்பது? கடன் வாங்கிக் கட்டினாலும் கடைசியில் எங்கிருந்து கொடுப்பது? நடராஜன் வந்திருந்தானுமே? அவனையாவது கேட்டு வாங்கிக் கொள்ளலாமா?' என்று எவ்வளவோ யோசித்தும் ஒன்றும் தோன்றவில்லை.

தங்கத்தினிடம் கட்டாயம் இருக்கும். ஆனால் எதற்கெடுத்தாலும் அவளையேயா தொந்தரவு செய்து கொண்டிருப்பது என்று நினைத்தபோது அதுவும் பிடிக்கவில்லை. அப்பாவைக் கேட்போம் என்றாலும் அவர் மட்டும் எங்கிருந்து கொண்டுவரப் போகிறார் இப்போது? கட்டாயம் அவனைத்தான் கேட்கப்போகிறார்.

'அடித்தாலும் புடைத்தாலும் என்னுடையான்' என்பதுபோல் வேறு வழி இல்லை. 'அவளும் குழந்தை; பிறந்தகம் என்று ஒரு அருமை உண்டா? எல்லாம் தானே செய்துகொள்ள வேண்டும்; எங்களுக்கும் செய்ய வேண்டும்! அன்புடன் ஒரு மஞ்சள் குங்குமம் கொடுக்க வீட்டில் யார் இருக்கிறார்கள்? பாவம், தாயில்லாக் குழந்தை!' என்று எனக்கு அங்கலாய்ப்பாக இருந்ததே ஒழிய என்னை நான் நினைத்துப் பார்க்கவில்லை.

அப்பாவுக்கு மாதம் இருநூற்றைம்பது ரூபாய் வந்துகொண்டிருந்தது; அத்தை கணக்கு எழுதியபோது நானே பார்த்திருக்கிறேன். வீட்டுச் செலவு, வாடகை, பால், ஆள் சம்பளம், இன்னும் சில்லறைகள் எல்லாம் போக ஐம்பது ரூபாய் மிஞ்சும்; மிச்சத்தில் மாதம் முப்பது ரூபாய் சித்திக்கும், இருபது ரூபாய் மன்னிக்கும் அனுப்பச் சொல்லி அப்பா ராமுவிடம் கொடுப்பார். சித்திக்கு அவன் கொடுத்துவிட்டு வந்து விடுவான். இந்த விவரம் எல்லாம் எனக்கு நன்றாகத் தெரியவும் தெரியாது. 'ஏதோ கொடுக்க வேண்டுமாக்கும், கொடுத்து ஒழிக்கட்டும்' என்று நினைத்தேன். ஆனால் அன்று சித்தி கூறியதிலிருந்து எனக்கும் ஆத்திரம் அடங்கவில்லை. மாதம் பிறந்தால் பத்துத் தேதிக்குள் மனிதன் கையில் ஒரு தம்பிடி இல்லாமல் எல்லாவற்றையும் கொடுத்துவிட்டு ஆலாய்ப் பறக்கிறான்! வாங்கிக் கொள்வதையும் வாங்கிக்கொண்டா இவ்வளவு பேச்சு! கொடுக்காமல் இருந்தாலும் இதைவிட என்ன செய்து விடுவார்கள்? இன்னும் இரண்டு வசவு சேர்த்து வையப் போகிறான்! இவ்வளவுதானே! இருந்தாலும் இவ்வளவு பொல்லாத்தனம் வேண்டாம். பெற்றதுகளையும் லாட்டரியில் விட்டுவிட்டு வாரிக்கொடுப்பதற்குப் பயனா இது?' என்று இப்படியெல்லாம் சிந்தித்தபோது, 'இவர்களுக்கெல்லாம் கொடுத்துத்தான் என்ன பலன்? திரும்பிப் பார்க்காமல் இருந்தால் நானாவது கஷ்டப்படாமல் இருக்கலாம்! துணி இல்லை, மணி இல்லை; காலேஜ் சம்பளத்துக்குக் கூடவா இல்லாமல்போய்விட்டது, எனக்குப் பாத்தியம்! இனிமேல் அப்பாவிடம் நானும் பயப்படப்போவதில்லை; கேட்கிறேன்; என்ன சொல்லி



விடுகிருர் பார்ப்போம்' என்ற துணிச்சல் வந்துவிட்டது. 'பொழுது விடியட்டும்; தைரியம் கேட்டுவிடுகிறது. ஒன்று அவளுக்காவது கொடுத்துத் தீர்க்கட்டும்; இல்லை எனக்காவது வேண்டியதைச் செய்யட்டும்' என்று கோபத்துடன் படுத்துக்கொண்டேன்.

பொழுது விடிவதற்குள், "குழந்தை மணிக்கு அதிக ஜுரம் அடிக்கறது. டாக்டரை அழைத்துக்கொண்டு வர வேண்டும்" என்று மன்னி ராமுவிடம் சொல்லிக்கொண்டிருந்தாள்.

"நேற்று இரவு தூங்கும்வரையில் ஒன்றுமில்லையே; நன்ருய்த்தானே இருந்தான்? பனியில் விளையாடினுனுக்கும்" என்று மன்னியிடம் சொல்லிக்கொண்டே மணியைப் பார்க்கச் சென்றேன் நான்.

"திடும் திடும்னு எல்லாம் நமக்குத்தானே வரும்? ஊரிலே நாலுபேர் வயிறு எரிஞ்சா அந்தப் பீடை யாரை வந்து படுத்தும்? பாத்தியமுள்ளவாளைன்னு பிடுங்கி எடுக்கும்? குழந்தைகள் ஒரு நாளைக்கு உடம்பு ஒண்ணுமில்லாமே இருந்தான்னு?" என்ருள் மன்னி, நான் பாதி வழி போவதற்குள்.

நான் ஒன்றும் வாய் கொடுக்கவில்லை. மணியைப் போய்ப் பார்த்துவிட்டு டாக்டரை அழைத்து வந்தேன். "ஒன்றும் இல்லை. பனியோன்னே? குழந்தைகளுக்கு அப்படித்தான் வரும். 'ப்ளூ'" என்று சொல்லி மருந்து எழுதிக் கொடுத்துவிட்டுப் போனுர். ராமு ஏதோ பேசிக்கொண்டிருந்தான். நான் ஒன்றையும் காதில் வாங்காமல் மெத்தைக்குச் சென்றேன்.

அப்பா ஏதோ எழுதிக்கொண்டிருந்தார். என்னைக் கண்டவுடன், "என்னடா?" என்ருர்.

நானும் தயங்கவில்லை. தயங்கித் தயங்கிப் பயந்து பயந்துதான் என்ன பலனைக் கண்டுவிட்டேன்? இதற்குக்கூடப் பாத்தியம் இல்லாவிட்டால் இங்கே இருந்துதான் என்ன பிரயோஜனம்? அத்தை சொன்னதுபோல்

தண்டச்சோறு என்று ஆத்திரம் பொங்கிக்கொண்டிருந்தது.

"ஒன்றும் இல்லே; இன்னிக்கித்தான் காலேஜ் சம்பளம் கட்டக் கடைசி நாள்" என்றேன்.

"என்ன பண்ணினே இவ்வளவு நாள்? தூங்கினையோ?" என்றார் அப்பா கோபத்துடன்.

"தூங்கல்லே ஒண்ணும் நான்; வீடுதான் இவ்வளவு லக்ஷணமாக இருக்கே! எப்படி வந்து கேக்கறது? ஏதாவது பேசுகிறப்பலேயா இருக்கு?" என்றேன் நானும் கடுகடுப்புடன்.

"எது எப்படி இருந்தா உனக்கு என்னடா வந்தது? இன்னிக்குத்தான் கடைசி நாள் என்று ஒன்பது மணிக்கு வந்து என் எதிரில் நிக்கறயே கூர்ச்சமாட்டமா! காலேஜுக்குப் போறவன், படிக்கிறவன்னு இப்படியா இருப்பே! மாசக் கடைசி! என் கையிலே என்ன இருக்கும்னு நெனச்சுண்டு இருக்கே! நேத்திக்காவது சொல்லித் தொலைச்சயா? இப்போ நெனேச்சுண்டு எங்கே போறது?" என்றார். நேற்றுக் கேட்கும்படியா இருந்தது வீடு!

"மாசக்கடைசி ஆச்சேன்னுதான் சொல்ல வாய் வரல்லே. இரண்டு மூன்று நாளாச் சொல்லணும்னு தான் நெனச்சுண்டு இருந்தேன். அதுக்குள்ளேதான் வீடு ரகளைப்படுகிறதே? உன்னைத் தொந்தரவு படுத்தப் படாதுன்னுதான் பேசாமே இருந்தேன். நீ சொன்னா நடராஜனை வேணும்னுக் கேட்டு வாங்கிக் கட்டிவிடறேன்" என்றேன்.

"நடராஜனை வேணும்னுக் கேட்டுக்கோ! எவனை வேணும்னுக் கேட்டுக்கோ! இந்த ராமுவாலே ஒரு காசு ஒத்தாசை கிடையாது! என்னிடம் இருக்கறதையும் வாங்கிண்டு போய்டுவன் வேணும்னு! எல்லாத்துக்கும் நான் ஒருத்தன்தானடா? நீங்கள்ளாம் ஒண்ணும் உதவ மாட்டேள்டா! இந்தா, இதுதான் என்னிடம் இருக்கிற ஆஸ்தி! வரவர எனக்கும் எல்லாத்தையும் விட்டுவிட்டு எங்கேயாவது ஓடிப் போய்ட்டாத் தேவலை

போலே இருக்கு! எங்கே போறது? ஒரு இடந்தான் இருக்கு! நான் ஒருத்தன் கண்ணை மூடிட்டேன்னு தெரியும் உங்களுக்கு!'' என்று சொல்லிக்கொண்டே அவருடைய பணத் தோல்பையை எடுத்துக் கீழே எறிந்தார்.

அதில் இருந்த முக்கால் ரூபாயோ அரை ரூபாய்ச் சில்லறையோ அறை முழுவதும் இறைந்தது.

“போப்பா! காலேஜூம் வாண்டாம், மண்ணாங்கட்டியும் வாண்டாம். நானும் இன்னிக்கே எங்கேயாவது ஒழிஞ்சு போறேன்'' என்று இரைந்துவிட்டு நானும் கீழே இறங்கி வந்துவிட்டேன்.

அறையில் நுழையும்போது, “டேய் சீமா'' என்று ராமு கூப்பிட்டான்.

“என்ன?'' என்று நானும் இருந்த இடத்திலிருந்தே கேட்டேன்.

“என்ன கூப்பாடு வேண்டிக்கிடக்கு?'' என்று நான் போய் உட்கார்ந்ததும் ராமுவே வந்தான்.

“வரவர இந்த வீட்டிலேயே இருக்க முடியவில்லை! எங்கேயாவது போய்விடலாம்போலே இருக்கு! ஒரு மனுஷன் எத்தனை சம்பாதிச்சாலும் போரல்லே! மாசக் கடைசியிலே கையில் ஒரு தம்பிடி கிடையாது. எங்கே போய் நிக்கிறது, பிச்சைக்குப் போது விடிஞ்சா? போது போதாய் அவர் வேறே பிராணனை எடுக்கிறார் பணத்தைக் கொண்டா, காசைக் கொண்டான்னு! இவர் பட்ட கடனுக்கெல்லாம் நானா பாத்தியம்! சிவ சிவான்னு வாயை மூடிண்டு உட்கார்ந்திருந்தா இவள் வேறு வந்தாட்டா; உங்க மன்னி, பிடுங்க! என்னிடம் ஒரு தம்பிடி கிடையாது! மருந்து வேணும் இப்போ மணிக்கு; போய் அப்பாவைக் கேட்டு வாங்கிண்டு வந்து தொலை'' என்று என்னிடம் மருந்துச் சீட்டைக் கொடுத்தான்.

என் தலை அப்படியே ஒரு தடவை கிர் என்று சுழன்று விட்டது.

“என்னடா இது? நான் இந்த வீட்டில் இருக்கணும்னு நெனச்சுண்டு இருக்கேளா? இல்லை, எங்கேயாவது போய்ட

றும்னு நெனச்சுண்டு இருக்கேளா? ஒண்ணும் புரிய வில்லையே நேக்கு'' என்று கத்திவிட்டேன்.

"தேவலேடா! மூளைக்கறத்துக்குள்ளே இவ்வளவு கோவம் வரதே நோக்கு! எங்களுக்கு எப்படி இருக்கும் அப்பா? என்ன உனக்கு இன்னிக்கி? அவாள்ளாம் போய்ட்டாளேன்னு இருக்கற கோவத்தை எங்கமேலே காட்டற யாக்கும்! ரொம்ப அழகுதான்!'' என்று சொல்லிக் கொண்டே ராமு போய்விட்டான்.

எனக்கு இருந்த ஆத்திரத்தில் மருந்துச் சீட்டை அப்படியே கிழித்து எறியப் போனேன். அதற்குள், "இந்தாடா, ஏன் இதுக்குச் சண்டை போடறேள் எல்லாருமாக? மருந்தை வாங்கிண்டு வா முதல்லே'' என்று இரண்டு ரூபாய் நோட்டு ஒன்றை என் முன் வைத்தாள் தங்கம்.

இந்த வீட்டுத் தொல்லைக்கெல்லாம் அவளா பாத்தியம்? பொல்லாப்பையும் வாங்கிக் கட்டிக்கொண்டு? அவள் தலையில் இப்படியா எழுதியிருக்க வேண்டும்? எல்லாம் நம்மைப் பிடித்த சனி!

# ೧

## ‘சாதனு’

அப்பா சொல்லிக்கொண் டிருந்ததுபோல் இருந் தால் இன்னும் என் படிப்பு ஒரு வருஷம் இருக்கும். அதற்கு முன் நின்றுவிட்டதைப்பற்றி நான் அதிக வருத்தப்படவில்லை.

‘படிப்பும் வேண்டாம், மண்ணுங்கட்டியும் வேண்டாம். சம்பாதித்து அப்பாவின் கையில் கொண்டு வந்து கொடுக்க வேண்டும். பேர்ப் பேராகப் பேசிக் கொண்டிருந்ததை ஒரு வழி செய்து நிறுத்த வேண்டும்.’ இந்தத் தீர்மானத்துக்குத்தான் வந்தேன்.

அப்பாவிடம் ஏன் இப்படிப் பேசிவிட்டோம் என்று மிகவும் வருத்தமாக இருந்தது. மறுபடியும் அவர் முகத் தில் எப்படி விழிப்பது என்று வெட்கம் ஒரு பக்கம் என்னை வாட்டியது. உள்ளே விட்டு வெளிக்கிளம்பாமல் உட்கார்ந்திருந்தேன்.

இரண்டு கைகளையும் தட்டினுல்தானே ஓசை கேட் கும்? மன்னி மாத்திரம் ஏதோ பேசிக்கொண்டிருந்தாளே ஒழியத் தங்கம் அப்படியே உறங்கி உட்கார்ந்துகொண் டிருந்தாள். மழை பேய்ந்து ஓய்ந்தது போல் இருந்தது வீடு. சிறிது நேரம் கழித்து, “ஏண்டா இப்படிப் பேயடித்தவன் போல் உக்காந்து இருக்கே? அப்பா அப்பவே பிடிச்சுக் கூப்படருரே, காது கேக்கலையா னோக்கு?” என்ருள் தங்கம் வந்து.

“அவர் கூப்பிடுவதுகூடவா என் காதில் விழவில்லை?” என்று நினைத்துக்கொண்டு மெத்தைக்குப் போனேன்.

“இந்தாடா, பணத்தைக் கொண்டுபோய்க் கட்டி விட்டு வா” என்று நோட்டுகளை நீட்டினுர்.

"வாண்டாம்பா; எனக்கும் படிக்கணும்னு தோணலே. ஏதாவது வேலே ஒண்ணு பாத்துண்டால் போறது" என்று சொல்லிவிட்டுப் பேசாமல் வந்து விட்டேன்.

நடராஜனைப் பார்த்துவிட்டு வரலாம் என்று அவன் வீட்டுக்குப் போனேன்.

என்னைப் பார்த்ததும், "என்னடா? உன்னைப் பேட்டி காண்பதுகூட ரொம்பக் கஷ்டம்போல் இருக்கே? மூணு நாலு தடவை வந்தேனே? எங்கே, காலேஜ் இல்லே?" என்ருன்.

பார்த்ததும் இவன் அதைத்தான் கேட்பான் என்று தெரிந்திருந்தாலும் அவன் கேட்டதும் என்ன பதில் சொல்லுவது என்பது தடுமாறிவிட்டது.

"ம்..." என்று சற்று இழுப்பதற்குள், "மட்டமோ?" என்ருன் மறுபடியும்.

"ஒரே மட்டந்தான் இனிமேல்" என்றேன்.

"ஏன் அப்படிச் சொல்லறே? உன்னைப் பார்த்தால் என்னமோபோல் இருக்கே; என்ன சமாசாரம்?" என்ருன்.

'அடியைப் பிடிடா பாரத பட்டா' என்று இதைப் பற்றி ஒரு தடவை பேச்சு நடந்து முடிந்தது.

"போடா, படிப்பை நிறுத்தாதேடா பயித்தியக் காரா!" என்ருன் நடராஜன் மறுபடியும்.

"என்னடா? விடிய விடிய ராமாயணம் கேட்டுச் சீதைக்கு ராமன் சித்தப்பா என்பதுபோல்தான் இருக்கு நீ பேசுவது. இவ்வளவு நாழியா ஒருத்தன் சொல்றேனும்! உறைக்கலேயா இன்னும் மூளையில்?" என்றேன்.

"நன்ருய் உறைச்சுதடா! இதுக்காகவா நீ கவலேப்பட வேண்டும்? நான்தான் சொல்றேனே, நீபாட்டில் படி; ஒன்றுக்கும் கவலேப்பட வேண்டாம். நான் பார்த்துக் கொள்ளுகிறேன்."

"ரொம்ப அழகுதான்! என்னத்தை நீ பார்த்துக் கொள்ளுகிறது? உன்னிடந்தான் வேலைக்குப் பஞ்சம் இல்லையே; ஒரு வேலை போட்டுக் கொடு; போதும். அதுக்குத்தான் நான் வந்தேன். வீண் பேச்சுப் பேசுவதில் என்னடா பயன்? உனக்கும் காரியம் கெடும், எனக்கும் காரியம் கெடும்" என்றேன்.

"அதெல்லாம் இருக்கட்டும். நான் உன்னை எதற்காகப் பார்க்க வந்தேன் தெரியுமா?" என்றான் நடராஜன். எனக்கும் அதுதான் புரியவில்லை. "நான் என்ன உனக்கு லட்சியம்? அதுதான் விழிக்கிறேன்" என்றேன் சிரித்துக் கொண்டே.

"சீ! அப்படி எல்லாம் பேசாதேடா! எல்லாம் விளையாட்டுத்தான் உனக்கு. நான் அன்று உன்னிடம் ஒரு விஷயம் பேச வேண்டும் என்று சொல்லவில்லையா? மறந்துவிட்டாயா அதற்குள்?"

"மறந்து ஒன்றும் போய்விட மாட்டேன், உன்னைப் போல. அப்புறம் வர ஒழியவில்லை. என்ன அது; இப்பத்தான் சொல்லித் தொலையேன்; ஒழிந்து வந்திருக்கிறேனே?"

"இந்தா, முன்னாலேயே சுபம் பலுக்கிக்கொண்டே போவதுதானே உனக்கு வழக்கம்? நான் ஒன்று சொல்லுகிறேன். செய்கிறாயா சொல்லு."

"என்ன, கையில் அடித்துக் கொடுக்கணும் என்கிறாயா? சொல்லேன்; செய்ய முடிஞ்சாச் செய்யறேன்" என்று நான் சொன்னவுடன் நடராஜன் சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தான்.

எழுந்து எதற்காக உள்ளே சென்றானோ; இரண்டு மூன்று நிமிஷங்களுக்குள் வந்து உட்கார்ந்துகொண்டு, "இதோ பார் சீமா, இதையெல்லாம் உன்னிடம் கேட்கிறேன் என்று நினைத்துக்கொள்ளாதே. நாம் நெருங்கிப் பழகுவதனால் கேட்கலாம் என்று கேட்கிறேன். என் தமக்கை அவளுடைய பெண்ணை உனக்குத்தான் கொடுக்க வேண்டும் என்கிறாள். ஆறு மாதங்களாக என்னைத் தொந்தரவு செய்கிறாள். நான்தான் உன்னைக் கேட்க யோசனை செய்துகொண்டு தள்ளிக்கொண்டே வரு

கிறேன். உன் ஜாதகந்தான் என்னிடம் இருக்கிறதே. பொருத்தமும் பார்க்கச் சொல்லிவிட்டேன். எல்லாருக்கும் ரொம்ப திருப்தி. என்ன சொல்றே நீ?" என்முன்.

நான் ஏதோ நினைத்துக்கொண்டு வந்தால் இவனும் கல்யாணத்தைப்பற்றிப் பேசுகிருனே என்று எரிச்சல் வந்தது.

"கல்யாணமும் ஆச்சு, எல்லாம் ஆச்சு; ஒரு வழி சொல்லுடா இப்போ. எதாவது ஒரு வேலை போட்டுக் கொடுக்கப் போகிருயா இல்லையா? அதைச் சொல்லு முன்னுல்?" என்றேன்.

"வேலைக்கு என்னடா பஞ்சம் இப்போது? எங்காத்து மாப்பிள்ளை ஆகிவிட்டாயானுல் எதுக்குடா உனக்கு இப்போது வேலை? உனக்கு எது பிரியமோ அது, மேலே படியேன்" என்முன் அவன் பரிகாசமாக.

"ஆனுல் உன் இஷ்டப்படி செய்யாவிட்டால் வேலை கொடுக்க மாட்டேன் என்று சொல்லு; அப்படித்தானே?"

"போடா! எதாவது பேத்திக்கொண்டு இருப்பது தான் உனக்கு வேலை. இதைப்பற்றி என்ன கவலைஇப்போ? நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லு. இஷ்டம் உண்டா இல்லையா உனக்கு?"

"ஏண்டா, இப்படி எதை எடுத்தாலும் உனக்குவிளை யாட்டாகவே இருக்கிறது? கேட்டால் என்ன? உனக்குப் பதில் சொல்லிவிட்டுத்தான் மறு காரியம் பார்க்க வேண்டும் என்பாய்போல் இருக்கிறதே? அப்பா ஒருவர் இருக்கிருர் என்பதையே நீ மறந்துவிட்டாய்போல் இருக்கிறதே. எதற்காக என்னுடன் இப்படியெல்லாம் விளையாடுகிருய் என்பதுதான் எனக்குப் புரியவில்லை. வந்ததற்கு ஏதாவது வழி சொல்லப் போகிருயா இல்லையா?"

"வழி என்ன? இப்போதே வேணுமானுலும் போட்டு விடுகிறேன் வேலை; சரிதானே? அப்புறம்?"

"அப்புறம் என்ன? விழுப்புரந்தான். நான் சொல்லுவ தெல்லாம் உனக்கு அப்படித்தான் இருக்கிறது. உன்னேடு

உட்கார்ந்திருந்தால் இந்த வம்புதான்; நான் போய்விட்டு வருகிறேன்'' என்று கிளம்பினேன்.

''இந்தாடா சீமா, இதெல்லாமாடா எனக்கு விளையாட்டு? உன்னைக் கேட்கலாம் என்றுதானே கேட்கி றேன்? அவளை - குழந்தையை - பார்க்க வேண்டும் என்று ஆம் நீ சங்கோசப்பட வேண்டாம். உண்மையாகக் கேட்கிறேன். சொல்லுடா!'' என்று நடராஜன் என் இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு கெஞ்சுவது போல் கேட்டான்.

''போடா! பைத்தியக்காரா! என்னை வந்து கெஞ்சு கிறாயே? எந்த விதத்தில் நான் உனக்கு ஈடு என்று ஏதா வது யோசித்துப் பார்த்தாயா, கொஞ்சமாவது? சிரிக்கப் போகிறார்கள் யாராவது கேட்டால்!'' என்று சொல்லிக் கொண்டே நான் புறப்பட்டபோது, ''அப்படியானால் நான் அப்பாவை வந்து பார்க்கட்டுமா?'' என்றான் அவன்.

''குசாலாய்'' என்று சொல்லிவிட்டு நான் வந்து விட்டேன். வீட்டுக்கு வரும் வழியில் வெகு நாட்களாக நான் சந்திக்காத ஒரு நண்பரைச் சந்தித்தேன். அவர் என்னை விடப் பத்து வயது பெரியவராக இருந்தாலும் பள்ளிக்கூடம் போகும் நாட்களிலிருந்து எனக்கும் அவருக் கும் பழக்கம் உண்டு. அடிக்கடி பள்ளிக்கூடத்துக்கு வருவார். அதோடு கொஞ்ச நாட்கள் உபாத்தியாயராக வும் இருந்தார். நான் காலேஜில் சேர்ந்த பிறகுதான் அவரைச் சந்திக்கவில்லை. என்னைக் கண்டதும், ''என்னப்பா, எப்படி இருக்கே? படித்துக்கொண் டிருக் கிறாயா? அப்பா எல்லாரும் சௌக்கியந்தானே?'' என்றார்.

''எல்லாரும் சௌக்கியந்தான்'' என்று நிறுத்திக் கொண்டு, ''எங்கே, உங்களைக் கண்ணிலேயே காணோமே?'' என்றேன்.

''இரண்டு வருஷங்களாக நான் இந்த ஊரிலேயே இல்லை. அதிருக்கட்டும், நீ என்ன செய்துகொண்டு இருக் கிறாய் என்றால் ஒன்றும் பதிலைக் காணோமே? படிச்சுண்டு தானே இருக்கே?'' என்றார் அவர் மேலும். அதைப்பற்றி ஒன்றும் வேண்டாம் என்றால் அவர் விடமாட்டார்போல்

இருந்தது. "படிப்பை ஒரு வழியாக நிறுத்திவிட்டு வேலை தான் பார்த்துக்கொண் டிருக்கிறேன். நடராஜனைப் பார்த்துவிட்டுப் போகிறேன்" என்றேன்.

"யார், நம்ம நடராஜனு? உன்னுடன் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படித்தானே, அவன்தானே? எப்படி இருக்கிறன் இப்போ?" என்ருர் அவர்.

"அவனுக்கென்ன? வேண்டிய பணம் கொள்ளையாகக் கிடக்கிறது. தொழிற்சாலைகள் எவ்வளவோ வைத்திருக்கிருன். கவலை என்ன?" என்றேன்.

"அப்படியானுல் நமக்கும் கொஞ்சம் ஒத்தாசை செய்வான் என்று சொல்லு" என்று அவர் ஆவலுடன் கேட்டார்.

"நீங்கள் இப்போது என்ன செய்துகொண் டிருக்கிறீர்கள்?" என்று நான் கேட்டேன்.

"வாயேன், நம்ம வீடு இதோ இருக்கிறது. போய் உட்கார்ந்துகொண்டு விவரமாகப் பேசுவோம். எனக்கும் உன்னைப்போல் ஒரு நல்ல ஆள் வேண்டும். நீயுந்தான் படிப்பை முடித்துவிட்டேன் என்கிருய்" என்று வீட்டுப் பக்கமாகத் திரும்பினுர் அந்த நண்பர்.

எனக்கு அப்போது போகச் சம்மதமில்லை. அதுவும் அல்லாமல் நேரமும் அதிகம் ஆகிவிட்டது. வீட்டில் எனக்காக எல்லோரும் காத்துக்கொண் டிருப்பார்கள் என்ற நினைவு வந்தது. "இல்லை ஸார், மன்னித்துக்கொள்ளுங்கள். இப்போது நேரம் ஆகிவிட்டது. கட்டாயம் நாளைக்கு வருகிறேன். உங்கள் வீட்டு விலாசம்?" என்றேன்.

"உன்னைச் சந்தித்தது எனக்கு மிகவும் திருப்தியாகப் போய்விட்டது. உன்னைப் பார்க்க வேண்டும் என்பதுதான். எங்கே இருக்கிருயோ என்று சந்தேகமாக இருந்தது. நாளைக்கு மறந்துவிடக்கூடாது. எவ்வளவு மணிக்கு உன்னை எதிர்பார்க்கிறது?" என்ருர் அவர்.

"மாலை சுமார் ஐந்துக்கு மேல் வருகிறேன்" என்று சொல்லிவிட்டு வீட்டுக்கு வந்தேன்.

வெகு நேரம் ஆகிவிடவில்லை. நான் அவசர அவசரமாக வந்தேனே ஒழிய அப்பா அப்போதுதான் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்.

''பட்டு இன்னும் நாலு நாளில் வருகிறேன் என்று எழுதியிருக்காடா'' என்றார் என்னைக் கண்டதும்.

''ஏன் இவ்வளவு நாளாக எழுதலையாம்? இன்னிக்கி வந்துதா கடிதாசு?'' என்று நான் கேட்பதற்குள் அப்பா பக்கத்தில் இருந்த கடிதத்தை என்னிடம் தள்ளினார். கடிதத்தைப் படித்துக்கொண்டிருந்தபோது, ''நல்ல வேளையாக நானும் போகாமல் இருந்தேன், கடிதாசு வரத்துக்குள்ளே. அவளையும் பார்த்தாப்பலே இருக்கும்'' என்றாள் தங்கம்.

எங்கள் எல்லோருக்கும் இது கொஞ்சம் சந்தோஷத்தையே அளித்தது என்றாலும், ''எல்லோரும் சமயம் பார்த்துத்தானே வருவார்கள்? அவர்களுக்கும் நன்றாகத் தெரியும்'' என்று சொன்னாள் மன்னி, உள்ளுக்குள் இருந்தபடியே. 'சரி, இதற்குமேல் நாம் ஒன்றும் பேசவேண்டாம்' என்று நான் போய்விட்டேன். காலேஜ் இருந்தாலும் ஏதாவது படிப்பு இருக்கும். எல்லாவற்றையுந்தான் மூட்டை கட்டி வைத்தாய்விட்டதா? வேறு புத்தகம் வாசிப்பதற்கும் ஓடவில்லை.

தங்கமும் நானும் பேசிக்கொண்டிருந்தோம். வேலைக்காக நடராஜனைப் பார்த்த விஷயங்களை எல்லாம் அவளிடம் சொல்லிக்கொண்டிருந்தேன். ஆனால் கல்யாண விஷயமாக அவன் எடுத்த பிரஸ்தாபத்தைச் சொல்ல மட்டும் எனக்குப் பிடிக்கவில்லை.

''அதுதான் தேவலை. ஏதாவது ஒரு நல்ல வேலையாகப் பிடித்துக்கொண்டாயானால் நல்லது; அவனும் விட்டுவிடுவானா உன்னை? வந்ததை விடாமல் முதலில் பூந்துகொண்டுவிடு. அப்புறம் பாத்துக்கலாம். பட்டுவும் வருகிறாள். என்ன சொல்லுகிறாள் பார்க்கலாம்'' என்றாள்.

''இங்கேயே உட்கார்ந்துகொண்டு இருக்க வேண்டும் என்று எந்தச் சாஸ்திரத்தில் எழுதியிருக்கிறது? அவள் தான் அங்கே ஏதாவது வேலை அத்திம்பேரைப் பண்ணித்

தரச் சொல்லுகிறுளா கேட்போமே?'' என்றேன் நான். இந்தச் சாக்கிலாவது கொஞ்ச நாள் எங்கேயாவது போய் இருக்க வேண்டும் என்று எனக்கும் ஆசையாக இருந்தது.

''அவருந்தான் பார்த்துக் கொடுக்கலாம். எல்லாம் அப்பா எழுதினுல் உடனே செய்வார். இவர் மாட்டாரே; அதைச் சொல்லு. அவர் வேறு என்ன என்னமோன்று சொல்லிக்கொண் டிருக்கிறுர்?'' என்றுள் தங்கம்.

அவள் கூறுவது எனக்குப் புதிதாக இருந்தது. ''என்ன சொன்ஞர்? என்னிடம் ஒன்றுமே பிரஸ்தாபம் கூடச் செய்யவில்லையே'' என்றேன்.

''எங்கே ஓடிப்போகிறது? என்ன அவசரம் என்று இருப்பார். அவர் சொல்லுவதும் ஒரு வழிதான்டா. எல்லாருந்தான் வேலை வேலை என்று அலைந்தால் எங்கே கிடைக்குப்? எவனையாவது இழுத்துப்போட்டு ஒரு வியா பாரம் ஏதாவது செய்தால் ஒருவனிடம் போய்த் தொங் கவும் வேண்டாம்; இந்தக் காலத்திலோ நல்ல மதிப்பு வியாபாரத்துக்கு. ஒவ்வொருவனும் கொள்ளை அடிக் கிறுன் பார்'' என்றுள் தங்கம்.

இதைக் கேட்டதும் எனக்குச் சப்பென்று போய் விட்டது. வேறு என்னவோ என்று ஆவலாக இருந்தேன். 'வியாபாரமும் இதுவும் யார் செய்வது? எங்கே கொட்டிக் கிடக்கிறது காசு? விடு. என்னௌல வேப்பிலையாகப் பறக் கும் அழுது தெரியாதா?' என்று நினைத்துக்கொண்டேன்.

''போமடீ. வியாபாரமாம்! வியாபாரம்! என்ஞு காசு கொட்டிக் கிடக்குப் பாரு நம்மிடம்? வியாபாரம் செய்கிறதாம்? எதை வைத்துக்கொண்டுடீ செய்கிறது? யார் ஓடி வருவான் பணம் போட? அவரும் சொல்லுகிறுர் என்றுல் நீயும் பேசறயே! அதைச் சொல்லு'' என்று எழுந்துபோய்விட்டேன். இப்படி எதையாவது ஒன்றைக் கிளப்பிவிடப் போகிறுரே என்று அப்போதே திகில் உண்டாகிவிட்டது.

மாலையில் வெளியில் செல்வதற்கு முன் அப்பா வரத னிடம் சொல்லி என்னைக் கூப்பிட்டு அனுப்பினுர். ஒவ்

வொரு தடவை அவர் கூப்பிடும்போதும் இப்படித் திகில் படும்படியாகவேயா இருக்க வேண்டும்? இப்போதுதான் எனக்கும் அவருக்கும் நெருங்கிய பழக்கம் உண்டாக ஆரம்பித்திருக்கிற தென்றால் சாதாரணமான பேச்சே கிடையாதா? நினைத்துப் பார்த்தால் எனக்கே வருத்தமாக இருந்தது. கவலைப்பட்டுக்கொண்டே மெத்தைக்குப் போனேன். தங்கம் ஏதோ சொன்னாளே, அதைப்பற்றிப் பேச்சு எடுக்கப் போகிறாரோ என்றே நினைத்தேன்.

முப்பது ரூபாய் நோட்டுகளை என்னிடம் கொடுத்து விட்டு, ''இதை உங்க சித்தியிடம் கொடுத்துவிட்டு அந்தக் குஞ்சுவை நான் உடனே வரச் சொன்னேன் என்று சொல்லிவிட்டு வா; ரொம்பக்கோபித்துக்கொள்ளுகிறேன் என்று சொல்லு'' என்றார். இதைக் கேட்டதும் எனக்கும், 'அப்பாடா, வேறு ஒன்றும் இல்லையே' என்று சந்தோஷமாக இருந்தது. என்னதான் நடக்கிறது; வேடிக்கை பார்த்துவிட்டு வருவோமே என்று நினைத்துக்கொண்டாலும், 'இந்தக் கண்ணராவியை எல்லாம் எதற்குப் பார்ப்பது' என்று ஒரு பக்கம் பிடிக்கவில்லை. புறப்பட்டுப் போனேன். மாலை நேரம் ஆகிவிட்டதால் சித்தப்பாவும் வீட்டில் இருந்தார். சித்தப்பா என்றால் எல்லோருக்கும் சித்தப்பா எங்களுக்கும் சித்தப்பா என்று சொல்ல முடியாது. ஏனென்றால் சித்தப்பா அப்படி அலாதிப் பேர்வழி.

நல்ல உயரமும் பருமனுமாகச் சுமார் நிறமாக இருப்பார். அவர் வீட்டில் இருந்தார் என்றாலே எல்லோரும் உள்ளே நுழையச் சங்கோசப்படுவார்கள். 'யாரது?' என்று கேட்கும் தோரணையிலேயே எல்லோரும் கதி கலங்கிவிட வேண்டும். ஏதாவது பதில் சொல்வதற்குள், 'என்னது?' என்று ஒரு அதட்டல் போடுவார். கடைசியில் வந்த காரியத்தை மறந்துவிட்டுப் போய்விட வேண்டியது தான்.

தெரிந்தவர்களாக இருந்தால் இவ்வளவு சங்கடம் இல்லை. இருந்தாலும் ஒன்றும் பேசாமல் 'உம்' என்று பார்க்கும் அந்தக் கீழ்ப்பார்வையிலேயே நமக்கும் அவருடன் சாதாரணமாகப் பேசத் தோன்றாது. அவர்

'உம்' என்று உட்கார்ந்திருந்தால் அதற்குமேல் நாமும் உம்மணாமூஞ்சி ஆகிவிடுவோம். அப்படி ஒரு வார்த்தை இரண்டு வார்த்தை பேசினாலுங்கூட நமக்கே ஏன் பேசினோம் என்று வெறுப்பாகப் போய்விடும். அப்படி வெடுக்கென்று பேசிவிடுவார்.

நான் உள்ளே நுழையும்போது டிபன் சாப்பிட்டுக் கொண்டு வாசலுக்கு நேரே முற்றத்தில் உட்கார்ந்திருந்தார். எதிரில் போய் நின்றாலுங்கூட ஒரு வார்த்தை சொல்லாமல் இருந்தது ஒன்றும் அதிசயம் இல்லை என்றாலும், 'வந்தவர்களைக்கூட வா என்று கூப்பிடாமல் இப்படி ஒரு பிரகிருதியா!' என்று எனக்கு ஒரு பக்கம் கோபந்தான் வந்தது. வாசற்படி தாண்டி வந்தால், "வா" என்று கூப்பிடாமல் இருந்தால் வந்தவர்களுக்கு எப்படி இருக்கும் என்று இவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்கவேண்டும் என்று தோன்றியது. ஆனால் இப்படிப்பட்டவர்கள் மற்ற இடங்களுக்குப் போகவும் மாட்டார்கள், மற்றவர் வந்தாலும் கவனிக்க மாட்டார்கள். 'எப்படி வேண்டுமானாலும் போகட்டும், நமக்கு என்ன?' என்று சித்தியைத் தேடிக்கொண்டு போனேன். அவள் சமைத்துக்கொண்டிருந்தாள். அவளும் நம்மைப் போல்தானே இருப்பாள். கலகலவென்று பேசுபவர்களை ஓயச் சொன்னால் போதும் போல் இருக்கும்.

என்னைக் காண்பதற்குள், "வா, உள்ளே வா, சித்தப்பாவைப் பார்த்தாயா? காபி சாப்பிடுகிறாயா கொஞ்சம்?" என்று கேள்விக்கு மேல் கேள்வி அடுக்கினாள். இரண்டு பேருக்கும் இருந்த வித்தியாசத்தைப் பார்த்து எனக்கே ஆச்சரியமாக இருந்தது.

"காபி எல்லாம் ஆய்விட்டது. அப்பா அனுப்பினார்" என்று ரூபாயை அவளிடம் நீட்டினேன். 'எதையாவது வைத்துக்கொண்டு சத்தம் போடுவாளோ?' என்று மனத்துக்குள் கொஞ்சம் பயம்தான். அவள் நான் நினைத்தபடி அதையெல்லாம் நினைத்துக்கொண்டிருந்ததாகவே தோன்றவில்லை.

"முன்னாலே ஒக்காந்து இருக்காரே; வான்னு கூப்பிட்டாரா? இல்லையா?" என்றாள்.

இல்லை என்று சொல்ல எனக்குப் பிடிக்கவில்லை. பேசாமல் சிரித்துக்கொண்டேன்.

"இப்படித்தான் பார்த்துக்கொள். எது எப்படிப் போகட்டும், பூலோகமே முழுகிப் போகட்டும்; இந்த இடத்தை விட்டு நகரமாட்டார். எல்லாத்துக்கும் நான் தான் முட்டிக்கணும்" என்று சொல்லிக்கொண்டே ஒரு லோட்டாவில் காபியை எடுத்து வந்து என் முன் வைத்துவிட்டு, "அதிசயமா வந்திருக்கான் சீமா, அவனைப் பார்க்கவே இல்லையாமே நீங்க?" என்றாள் சித்தப்பாவிடம் சென்று. "ஆமாம். அதுக்கு என்ன செய்யணுங்கறே? நீதான் இருக்கயே எல்லாத்தையும் சேர்த்து வைத்துப் பேச! அப்புறம் நான் வேறே பேசணுமா?" என்றார் அவர்.

அப்போதுகூட, 'என்ன, எது?' என்று ஒரு வார்த்தை கேட்க வேண்டும் என்று தோன்றாதா ஒரு மனிதனுக்கு என்று எனக்கும் ஆச்சரியம் தாங்க முடியவில்லை.

"நான் ஆயிரம் பேசுகிறேன். நீங்க ஒரு வார்த்தை பேசினாப்பலே ஆகுமா வந்தவனுக்கு?" என்றாள். சித்தி மறுபடியும்.

"என்னைத்தான் தெரியுமே, யார் வரச் சொல்றா இங்கே?" என்று பதில் கொடுத்தார் அவர்.

"ரொம்ப அழகா இருக்கு பேசறது! சமத்து வழியறது! நித்தியம் யாரோ தேடிண்டுன்னு வரா உங்களை? வாசற்படி ஏறுவதற்கேதான் எல்லாரும் பயப்படுகிறார்களே!" என்று சித்தி முடிப்பதற்குள், "உங்க அத்திம்பேரைப் போல் யார் வந்தாலும் கோலாட்டம் போட வேண்டும். என்கிறாயாக்கும்!" என்று சத்தம் போட்டுக்கொண்டே அவர் எழுந்து போனபோது முற்றத்தில் படுத்துக் கொண்டிருந்த பழகிய பூனைகூட மியாவ் என்று கத்த மறந்து நின்றதுதான் எனக்கு மிகவும் வேடிக்கையாக இருந்தது.

"அதுக்குக்கூடச் சித்தப்பாவைக்! கண்டா பயமா சித்தி?" என்றேன் சிரித்துக்கொண்டே.

"பாரேன் நீதான்? என்னமோ சொல்லுவா ளோன்னோ? அதுபோல்தான். அத்திம்பேரைக் கண் டால் ஈ காக்கைக்குக்கூடப் பயம் இல்லே. இவரைக் கண்டால் படையே கலங்குகிறது. பூனைக்குப் போய் அதிசயப்படுகிறாயே நீ? மூலைக்கு மூலை குழந்தைகளைப் போய்ப் பாரு. ஒரு மனுஷா வர வேண்டாம், ஒரு மனுஷா போக வேண்டாம்" என்று சித்தி கூறியதும், 'இப்படியும் மனிதர்கள் இருப்பார்களாக்கும்!' என்று எனக்கும் ஆச் சரியமாக இருந்தது.

"சரி, நான் போயிட்டு வறேன் சித்தி" என்றேன்.

"எங்கே? ஆத்துக்கா? நல்ல வேளையாக வந்திருக்கயே இன்னிக்கி; குஞ்சுவாத்தில் அமக்களப்படுகிறதைப் போய்ப் பார்த்துவிட்டு வாயேன்" என்றாள் சித்தி.

"முக்கியமாய் அப்பா அதுக்குத்தான் சித்தி அனுப் பினார். எனக்குப் போக என்னமோபோல் இருக்கிறது. நீயும் வருகிறாயா கூட?" என்றேன்.

"இப்போ வந்தால் வள்ளுனு விழுவார். சித்தப்பா. நீ முதலில் போ. உன் பின்னாலேயே நானும் வருகிறேன்" என்றாள் அவள். சித்தப்பாவின் உத்தரவைப் பெற்றுக் கொண்டு குஞ்சுவின் வீட்டை அடைந்தேன்.

"என்னமோ சித்தி சொல்லுகிறாளே என்றால் அங்கே இருந்த தடபுடலைப் பார்த்து நானே பிரமித்து விட்டேன். வீடு நிறையப் பிராமணாள். ஓ என்று ஏதோ ஜபம்; கலசங்களும் ஹோமமும் கால் வைக்க இடம் இல்லே. முகம் தெரியாத யார் யாரோ வீட்டில் அங் கும் இங்கும் போய்க்கொண் டிருந்தார்கள். குஞ்சுவைக் கண்ணிலேயே காணவில்லே. யாரோ ஒரு பெரிய அம்மா நாற்காலியில் சாய்ந்துகொண் டிருந்தார். அவளைக் கேட்டேன். ஒருவருக்குமேல் ஒருவர் அஞ்சல் வைத்துக் குஞ்சு வந்தாள். அவளைப் பார்த்ததும் எனக்குத் தூக்கி வாரிப்போட்டது.

"வா வா, அதிசயமாக இருக்கே? பெரியவா வந்திருக்கா, வந்து நமஸ்காரம் செய்" என்று மெத்தைக்கு என்னை அழைத்துக்கொண்டு போனாள் குஞ்சு. அவ்விடம் இருக்கும் கோலத்தைப் பார்த்ததும் எனக்கு உடனே வெளியில் வந்துவிட வேண்டும்போல் இருந்ததே ஒழிய அப்பா சொல்லி அனுப்பியதைச் சொல்ல வேண்டுமென்று கூட மறந்துவிடும்போல் இருந்தது.

சித்தி கூறியதுபோல் யாரோ ஒரு பெரிய பிராமணன் உட்கார்ந்துகொண் டிருந்தான். அவனைச் சுற்றிலும் பெண்களுடைய ஒரு பெரிய கூட்டம். அவரவர்கள் நகையோ, நட்டோ, பவுன்களோ எது முடியுமோ சக் திக்குமேல் அவர் சமூகத்தில் அர்ப்பணம் செய்துகொண் டிருந்தார்கள். காஷாயத்துக்குக் காஷாயமும் இல்லை; சாதாரணமாக நம்மைப் போலவும் இல்லை. அந்தப் பிரா மணன், ஆளுக்கு இவ்வளவு 'பொன் வேண்டும், இருந்தால் தான் விக்கிரகம் செய்யலாம், ரக்ஷை செய்யலாம், தகடு அடித்து ஜபத்தில் வைக்கலாம்' என்று ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். பார்த்தவுடனேயே ஒரு தடியை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று தோன்றியதே ஒழிய, "பெரியவன்; ஒரு ஸந்நிதி" என்று என் மனத்துக் குப்படவும் இல்லை; நமஸ்காரம் செய்யவும் பிடிக்கவில்லை.

"என்ன அக்கா இதெல்லாம்? அப்பா உன்னைப் பார்க்கணுமாம்; அவசியமாக வரவேண்டும் என்று சொல்லிவிட்டு வரச் சொன்னார். உன் உடம்பு ஏன் இப்படிப் போய்விட்டது?" என்றேன்.

"என்னடா? இந்த உலகத்தில் அப்பாவாவது அம்மா வாவது! எல்லாம் அஞ்ஞானந்தான். இந்த ஊன் உடலை வைத்துக்கொண்டு என்ன செய்யப் போகிறோம்? இந்தச் சந்நிதியில் இருந்தால் உலகமே மறந்து போய்விடும். எது நினைக்கிறோமோ அது உடனே கிடைக்காவிட்டால் பிறகு சொல்லு. நீயே இருந்து பாரேன் பத்து நாளைக்கு" என்றாள் குஞ்சு. நான் கேட்ட கேள்விக்கு ஒன்றும் பதிலைக் காணவில்லை. இதெல்லாம் யாருக்கு வேண்டும்?

"பட்டு வருகிறாளாம் இன்னும் நாலைந்து நாளில்" என்றேன்.

குஞ்சு பேசுவதைப் பார்த்தால் அவளுக்கு இந்த உலகத்தில் பிரச்னை இருப்பதாகவே தோன்றவில்லை. 'நம்ம வீட்டு விஷயங்களா? யார் இருக்கிறார்கள்; வரப் போகிறார்கள்?' என்ற கவலையும் இருப்பதாகத் தெரியவில்லை.

"அத்திம்பேர் எங்கே? குழந்தைகள் எல்லாம் எங்கே?" என்றேன். நான்பாட்டில் எதையோ கேட்டுக் கொண்டிருந்தேனே ஒழிய நான் வந்தது அவளுக்கு ஒரு திருப்தியையும் அளிக்கவில்லை. சீக்கிரமாக என்னை அனுப்பும் வழியைப் பார்க்கிறாள் என்பதும் நன்றாக விளங்கியது. இல்லாவிட்டால இவ்வளவு நாளாகக் குழந்தையும் குட்டியுமாக அழகாகக் குடித்தனம் செய்த வள் இப்படியா நம்மையே மறந்துவிடுவாள்? பேசாமல் மடமட வென்று கீழே இறங்கி வந்தேன். சித்தி கீழேயே நின்றுகொண் டிருந்தாள். "பார்த்தாயா எல்லாத்தை யும்?" என்றாள் மெள்ள.

அதற்குள் அத்திம்பேருக்கு வேண்டிய ஒரு நண்பன் உள்ளேயிருந்து வந்தான். என்னைக் கண்டதும் அவன் ஒன்றுமே பேசவில்லை. பிடித்து இழுத்துக்கொண்டு தெருவுக்கு வந்துவிட்டான். வந்தவன் அவனுக்கே தாங்க முடியவில்லை. ஒரு பெரிய ராமாயணத்தைச் சொல்லி முடித்துவிட்டான்.

"இந்தா சீமா, நீ காத்துக்கொண்டு இருந்தா ஒண்ணும் பிரயோஜனம் இல்லை. அத்திம்பேர் குழந்தைகளை யும் வைத்துக்கொண்டு உள்ளே ஜபம் செய்கிறார். அமக் களப்படுகிறது; தெரிந்ததா? அவனுக்கும் சரியான வழியில் தான் பிடித்திருக்கிறது. ஊரெல்லாம் இப்படி அமளி துமளிப் படுகிறது. உங்களுக்கு ஒரு இழவும் தெரிய வில்லையே, பாவம்! அவன் சாமியும் இல்லை; பூகமும் இல்லை. இருப்பவர்களைப் பயித்தியமாக அடித்துச் சுருட் டிக்கொண்டு போக வந்திருக்கிறான். அதில் போய் இதுகள் மாட்டிக்கொண்டு யார் எது சொன்னாலும் கேக்க மாட் டேங்கறதுகள். ஊரைக் கூட்டிக்கொண்டு விடு வாசல் எல்லாத்துக்கும் மோசம் வந்துவிடும்போல் இருக்கிறது.

யாராவது நான்கு பேர் சேர்ந்துகொண்டு அவனை நன்றாக உதைத்து ஊரை விட்டு எங்கேயாவது கண்காணாமல் துரத்தினால்தான் உருப்படும். இதைத் தவிர வேறு வழி இல்லை. இல்லை, அவா மனுஷாளுக்காவது எழுதிப் போட்டு யாரையாவது வரவழைக்க வேண்டியதுதான். பாவம், பள்ளிக்கூடம் போகும் குழந்தைகளைப் பிடித்துக் கட்டிப் போட்டு மந்திரமாம், ஹோமமாம், ஜபமாமே! அதுவும் பத்து நிமிஷம் பதினைந்து நிமிஷம் இல்லை. மணிக்கணக்கில்தான் நடக்கிறது. இன்னும் கொஞ்ச நாள் போனால் இதுகள் பயித்தியம் பிடித்துப் பாயைச் சுறண்டும். அந்தத் தடியனோ கண்ணிலேயே அகப் படப் போவதில்லை. நன்றாக இப்போதே உதைத்து அனுப்ப வேண்டியதுதான். என்ன சொல்லறே நீ? எல்லாவற் றையும் பார்க்கிறாயே? வீடு வாசல் என்று ஒரு லக்ஷணம் ஏதாவது இருக்கா?'' என்றான்.

உண்மையாக அவன் கூறுவதுபோல் அக்கிரம மாகத்தான் இருந்தது. சித்தியை வீட்டுக்கு அனுப்பி விட்டேன்.

''வந்து நீயே அப்பாவிடம் சொல்லு, எனக்கு ஒன்றுமே ஓடவில்லை'' என்று அவனையும் அழைத்துக் கொண்டு வந்து சேர்ந்தேன்.

அப்பாவுக்கு எல்லாம் கொஞ்சம் தெரியும் என்றாலும் கதையை அவன் சொல்லச் சொல்லக் கோபம் தாங்கவே முடியவில்லை.

''என்னவானாலும் சரி, இவனை ஒழித்துவிட வேண்டும். நான் போய்ப் பார்த்தால் ஏதாவது பலிக்குமா?'' என்றார்.

''அதெல்லாம் ஒன்றும் பலிக்காதுன்னா. எல்லாத்தை யுமே மயக்கிவிட்டான் அந்தக் கடன்காரன். இனிமே லாவது, அதுகள் திரும்புவதாவது. நாம் ஏதாவது சொல்லப்போனால் பிடித்து வெளியிலேயே தள்ளிவிடு கிறான் உங்க மாப்பிள்ளை. அவனுக்கு மனுஷாள் லக்ஷ்யம் இருக்கிறது என்று நினைத்துக்கொண் டிருக்கிறீர்களா நீங்கள்?'' என்றான் அந்த நண்பன்.

அப்பாவுக்குத் துக்கம் ஒரு பக்கமும் கோபம் ஒரு பக்கமும் தொண்டையை அடைத்தன.

"என்ன செய்ய வேண்டும் என்கிறாய் நீ? சொல்லு. எந்த வழியானாலும் ஒன்று பார்த்துவிட வேண்டியது தான்" என்றார். "ஆனால் நான் பார்த்துக்கொள்ளு கிறேன் அதை. ஒரு இருபத்தைந்து ரூபாய் இருந்தால் கொடுங்கள். நாலு ஆட்களை வைத்துக்கொண்டு எல்லாரையும் வழியில் மடக்கி நொறுக்கி எங்கேயாவது கொண்டுபோய் விட்டுவிடுகிறேன். சரி தானே?" என்றான் அந்த நண்பன்.

அப்பா சிறிது நேரம் பொறுத்துப் பார்த்துவிட்டு, "தப்புத் தண்டா ஒன்றும் வராமல்மட்டும் பார்த்துக் கொள். ரூபாயைப்பற்றிக் கவலையில்லை. இருபத்தைந் தில்லை, ஐம்பது ரூபாயானாலும் சரி; எப்படியாவது அவனைத் தொலைத்துத்தான் ஆகவேண்டும். உடனே செய்துவிடு" என்று சொல்லிக்கொண்டே ரூபாய்களை எண்ணி அவன் கையில் கொடுத்தார்.

"நீங்க ஒன்றும் கவலைப்பட வேண்டாம். எல்லாம் நான் பார்த்துக்கொள்ளுகிறேன். முதலிலிருந்து எல்லா வற்றையும் பார்த்துக்கொண்டு இருக்கிறேனே இல்லையோ. இதற்கு வழி கண்டுபிடிப்பது ஒன்றும் பிரமாதமில்லை. இவ்வளவு நாள் நானே செய்திருப்பேன். உங்களுக்குத் தெரியாதா? பெரியவாள் நீங்களே பேசாமல் இருக்கிறீர்களே? நாம் என்ன செய்ய முடியும்?" என்று யோசித்துக் கொண்டு பேசாமல் இருந்துவிட்டேன். நீங்கள் இருக்கும் போது எனக்கும் ஒரு தைரியம் இல்லையா? எல்லாம் இன்னும் ஒரு வாரத்தில் முடித்துவிடுகிறேன்; பாருங்கோ. நடுவில் வந்து பார்க்கிறேன் உங்களை; என்ன?" என்று சொல்லிவிட்டு அவன் புறப்பட்டான்.

"இதெல்லாம் ஒன்றும் வாயால் பேசவே கூடாது. எல்லாத்தையும் காரியத்தில்தான் காட்ட வேண்டும். பார்க்கலாம் உன் சாமர்த்தியத்தையும்; போய்விட்டுவா" என்றார் அப்பா. தங்கமும் நானும் ராமுவிடம் இதைப்பற்றி வெகு நேரம்வரையில் பேசிக்கொண்டிருந்தோம்.

# 10

## ராமநாதன்

'சொன்னால் தெரியாதவர்கள் ஒரு வழிக்கும் வர மாட்டார்கள். இதெல்லாமா பலிக்கப் போகிறது? பணத்தை எதற்காகத் தூக்கிக் கொடுத்தார்; திடீரென்று?' என்றுதான் எனக்குப் பட்டது.

இரவு வெகு நேரம் வரையில் பனியில் நின்றுவிட்டு வந்தது தொண்டையெல்லாம் கரகரவென்று இருந்தது. டாக்டரைப் பார்த்துக்கொண்டு வரலாம் என்று போனேன். மருந்தைத் தடவிக்கொண்டு வந்தபோது வீட்டு வாசலில் நடராஜனுடைய வண்டி நின்றுகொண் டிருந்தது. அதைப் பார்த்ததும் உள்ளே போகப் பிடிக்கவில்லை. 'வந்துவிட்டானா இவன் பிராணனை வாங்க?' என்று நினைத்துக்கொண்டு வெளியே விட்டுவிட்டேன் சவாரி.

'மாலையில் சந்திக்கிறேன்' என்று சொல்லியிருந்த நண்பருடைய பெயர் ராமநாதன். அவரைப் பார்த்துவிட்டு வரலாம். எப்போது போனால் என்ன? இல்லாவிட்டால் இப்படிச் சுற்றிவிட்டு வருவோமே என்று நினைத்துக் கொண்டு சென்றேன். நான் ஒன்று நினைத்தால் அது எப்படி இருக்கும்? சரியாகவே முடிந்தது. அவர் வீட்டில் இல்லை. இரண்டு மணிக்குச் சாப்பிடத்தான் வருவார் என்று ஒரு பையன் சொன்னான். வாசலில் எவ்வளவு நேரம் காத்துக்கொண்டு நிற்க முடியும்? குளிக்கக் கூட இல்லை. வேறு எங்கே செல்வது? வீட்டுக்குத்தான் வரவேண்டியிருந்தது மறுபடியும்..

சுமார் ஒரு மணிநேரம் சுற்றிவிட்டு வந்தேன் என்றாலும் நடராஜன் அப்போதுதான் கிளம்பிக்கொண்டிருந்தான். அவனை அனுப்பிக் கொடுக்க அப்பா வாசல் வரையில் வந்திருந்தார். "நான் போய்விட்டு வருகிறேன். பெரியவாள் கொஞ்சம் பார்த்துக் கவனிச்சுக்கோங்கோ" என்றான் நடராஜன் அப்பாவைப் பார்த்து.

அப்பாவும் அவனும் பேசிக்கொண்டதிலிருந்து இரு வரும் ஏதோ ஒரு முடிவுக்கு வந்துவிட்டார்கள்போல் தோன்றியது. நான் அவனிடம் ஒன்றும் பேசவில்லை.

“என்ன ஸார்? ரொம்பப் பெரியவா. மறுபடியும் நாளைக்கு வந்து பார்க்கிறேன்” என்று என்னிடம் கூறி விட்டு வண்டியில் ஏறிக்கொண்டான்.

அப்பா உடனே என்னை ஒன்றும் கேட்கவில்லை; இதைப்பற்றிய பேச்சே எழவில்லை.

சாப்பாடானதும் கேட்பார் என்று எதிர்பார்த்தேன். ஆனால் அதுவும் நடக்கவில்லை. சாப்பாட்டை முடித்துக் கொண்டு பேசாமல் மெத்தைக்குப் போய்விட்டார்..

அன்று அத்தையிடமிருந்து கடிதம் வந்தது. “எல் லாரும் க்ஷேமம். குழந்தை ருக்குவுக்குத்தான் இருப்பா கவே இல்லை. உங்கள் எல்லோரையும் நினைத்துக் கொண்டே இருக்கிறாள். ‘இந்த ஊர்ப் பள்ளிக்கூடத்தில் சேர்த்துவிடலாம்’ என்று அத்திம்பேர் சொல்லுகிறார்” என்று வருத்தத்துடன் எழுதியிருந்தாள்.

“அத்தைக்குத்தான் எப்படி இருப்புக்கொள்ளும் முதலில்? ஒரு நாளில் எப்படியெல்லாம் நடந்துவிட்டது, பார்த்தாயா?” என்று எனக்கு வருத்தமாக இருந்தது.

“பாவம்! அங்கே போயும் நம்ம கவலை விடவில்லை பாரேன் அவளுக்கு. வளர்த்துவிட்டால் இதுதாண்டா கஷ்டம்” என்றாள் தங்கம் கடிதத்தைப் படித்துவிட்டு.

சொல்லத் தெரியாத ஒரு வேதனை என்னைச் சூழ்ந்து கொண்டிருந்தது. அதற்குள், “இங்கே வா சீமா; உன் னுடன் கொஞ்சம் பேசணும்” என்று அழைத்தாள் தங்கம். “வா, இப்படி வாசலுக்குப் போவோம்” என்று என்னை அழைத்துக்கொண்டு வாசலுக்கு வந்தாள்.

“காலம்பர நடராஜன் வந்திருந்தானே, எதுக்கூன்னு தெரியுமோன்னோ உனக்கு? ஏன் அவனைக் கண்டதும் வெளியில் போய்விட்டாயாம்?” என்றாள் உட்கார்ந்து கொண்டே.

"எல்லாம் தெரியும். வேலை ஏதாவது பார்த்துப் போட்டுக்கொடு என்ருல் இதையெல்லாம் யார் கேட்டது இவனை? எனக்கு ஒன்றும பிடிக்கவில்லை. போய்விட்டேன்" என்றேன்.

"ஏன் பிடிக்கல்லே? தானே போட்டுத் தருகிருன். கேட்க வேண்டுமா அவனை? இந்த மாதிரி வேறு சம்பந்தம் நமக்குக் கிடைக்கப் போகிறது என்று நினைத்துக்கொண்டிருக்கயாடா நீ? ஏன் பிடிக்கல்லை? அதைச் சொல்லு."

"ஏன் பிடிக்கல்லை என்கிருயே? நமக்கும் அவனுக்கும் எந்த விதத்தில சேர்த்தி; அதைச் சொல்லு முன்னுல்? அவன் கொடுக்கிறேன் என்ருல் நாம் உடனே செய்து கொண்டு விடுகிறதா?"

இப்படி இதைப்பற்றி எனக்கும் அவளுக்கும் எவ்வளவோ பேச்சு நடந்தது. கடைசியில், "அப்பா என்ன சொல்லுகிருர்? ராமுவையும் கேட்டாய் விட்டதா?" என்றேன்.

"எல்லோரையும் கேட்டாய்விட்டது. நல்ல சம்பந்தம் என்ருல் யாருக்குத்தான் விட மனம் வரும்? எல்லோருக்கும் சம்மதந்தான். நீதான் எதையோ நினைத்துக் கொண்டு பேசிக்கொண்டிருக்கிருய். பெண்ணைப் பார்த்ததில்லையா நீ? அதை வேணுமானுல் சொல்லட்டுமா நடராஜனிடம்?" என்ருள் தங்கம்.

"நான் தான் பார்த்துக்கொண்டே இருக்கேனே, இவ்வளவு வருஷமாக; புதுசாக இப்போது வேறே பார்க்கணுமா?" என்றேன்.

"ஆனுல் பிடிக்கவில்லை என்கிருயா? என்ருள் அவள்."

"பிடிக்கவில்லை என்று எப்படிச் சொல்லிவிடுவது? பெண்ணுக்கு எதில் குறை? அதெல்லாம் ஒன்றும் இல்லை" என்றேன்.

அதுவும் ஒன்றும் சந்தேகம். வேண்டாம். மறுபடியும் பார்த்துவிட்டாலும் போகிறது பெண்ணை. இதில் எவ்வளவு விஷயங்கள் இருக்கின்றன, நீயே யோசித்துப் பார். நலல சம்பந்தம்; மனுஷாளோ திவ்வியமானவர்கள். ராணிபோல் நம்மாத்துக்கும் ஒரு

பெண் வந்தால் என்ன குறைச்சல்? அவள் கால் வைத்த முகூர்த்தம் நம்ம தரித்திரங்கள் எல்லாம் விடிந்து விடப் படாதா? உன்னைப்பற்றி அப்பாவுக்கு என்ன கவலை, சொல்லு. அவர்பாட்டில் இருக்கலாம், ராமுவுக்கும் எவ்வளவோ விதங்களில் ஒத்தாசை செய்யலாம். உன்னை யும் நடராஜன் ஒரு வேலையில் இழுத்துப் போட்டு நல்ல சம்பளம் கொடுத்தால் எல்லாக் கஷ்டங்களும் விடியு மோன்னோ? இந்த மனுஷாள் வாயிலெல்லாம் மாட்டிக் கொண்டு திண்டாடாமல் ஒரு வழியாக எல்லாவற்றை யும் ஒழித்துவிட்டுச் சிவா, ராமா என்று நம்ம காரியத் தைப் பார்த்துக்கொள்ளலாம். இரண்டு காசு கொடுக்க முடியவில்லை என்றுதானே எல்லோருக்கும் இவ்வளவு இளப்பமாய் இருக்கு! உனக்கு ஒரு நல்ல பெண்ணும் வேட்டகமும் கிடைப்பதோடு அப்பாவுக்கும் குடும்பத் துக்கும் எவ்வளவு ஒத்தாசையாக இருக்கும்; நீயே யோசித்துப் பார்'' என்று தங்கம் சொன்னதும் என்ன சொல்லுவது என்றே எனக்குப் புரியவில்லை. 'எல்லாக் கவலையையும் ஒழிக்கும்படி ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால் அதை அவ்வளவு அலட்சியமாக இழந்துவிடுவதா?' என் றும் கேள்வி பலமாக என் மனத்தில் எழுந்தது. ஒன்றும் பதில் சொல்ல முடியவில்லை.

"என்ன சொல்றே? யோசிக்கறுப்பலே இருக்கே கொஞ்சம்?'' என்றாள் தங்கம்.

"அப்பா என்ன சொல்லுகிறார் பார்ப்பமே?'' என் றேன்.

"அவர்தான் சொல்லிவிட்டாரே. அவருக்கு ஒரு ஆக்ஷேபமும் இல்லை. நீதான் எல்லாம் யோசித்து ஒரு முடிவுக்கு வர வேண்டும்; யோசனை பண்ணிச் சொல்லு; நான் போறேன்'' என்று எழுந்து சென்றாள் அவள்.

'யோசனை செய்து மட்டும் என்ன சொல்லிவிடப் போகிறேன்? இந்த ஒரு கல்யாணத்தில் இவ்வளவு ஒத் தாசை உண்மையில் இருக்கும் என்றால் அதை நிறுத்த வேண்டும் என்ற எண்ணம் எனக்கு மட்டும் எப்படி உண்டாகும்? வயது காலத்தில் மனத்தில் இருக்கும் கவலை

கள் நீங்கித் தொல்லைகள் ஒழிந்தால் அதைவிட நான் அப்பாவுக்குச் செய்யப் போகும் ஒத்தாசைதான் என்ன இருக்கிறது? இதைவிடச் சந்தோஷம் என்ன இருக்கிறது?' என்று எண்ணிக்கொண்டே கண் அயர்ந்து விட்டேன்.

பால் போன்ற களங்கமற்ற ருக்குவின் வடிவம் வந்து என்னுடன் வேடிக்கையாக விளையாடிவிட்டு, "என்னை மறந்துவிட்டாயா?" என்றது. நான் விழித்துக் கொண்டபோது, "இல்லை ருக்கு, நீ இல்லாமல் வீடே நன்றாக இல்லை" என்று சொல்லிக்கொண் டிருந்ததைப் பார்த்து எனக்கே வெட்கமாக இருந்தது.

'சீ! என்ன பேய் மனம்!' என்று எழுந்தேன். அப்பா வந்தால் மேலும் தொந்தரவு அதிகம். ஓசைப்படாமல் காபியை வாங்கிச் சாப்பிட்டுவிட்டு வெளியே கிளம்பி விட்டேன்.

நேரே ராமநாதன் வீட்டை அடைந்தேன். அவரும் அப்போதுதான் எழுந்து வந்து நாற்காலியில் உட்கார்ந் திருந்தார் போல் தோன்றியது.

"வா வா, காலையிலேயே வந்தாயாமே? நீ மாலையில் தான் வருவாய் என்று வெளியில் போனேன். என்ன விசேஷம்?" என்றார் என்னைக் கண்டதும்.

அவர் காண்பித்த நாற்காலியில் உட்கார்ந்துகொண் டேன் நானும்.

அவர் வீடு பெரியதாக இருந்தாலும் வெகு நாட் களுக்கு முன் கட்டிய பழைய கட்டிடம் போல் தோன்றி யது. வீட்டில் எங்கும் உயர்தரமான பெரிய விளக்கு களும், நிலைக் கண்ணாடிகளும், மரச் சாமான்களும் நிறைந்திருந்தன, தோட்டமும் துரவும் நன்றாக இருந்தன. பள்ளிக்கூட வாத்தியாரான இவருக்கு இவ்வளவு சொத்தும் சுதந்தரமும் எப்படி வந்தன என்று எனக்குக் கொஞ்சம் ஆச்சரியமாகவே இருந்தது. ஒரு சமயம் வாடகை வீடுதானோ என்ற சந்தேகங்கூட உண் டாயிற்று. உடனே கேட்டால் நன்றாக இருக்குமா? வழி உண்டே.

"நீங்க இப்போ என்ன பண்ணிக்கொண்டு இருக்காப்பலேயோ?" என்றேன்.

"என்ன செய்வது? வரவரப் பள்ளிக்கூடம் என்றாலே ஒரு வெறுப்பு வந்துவிட்டது. வருஷம் முந்நூற்று அறுபது நாளும் ஒரே அழுகையாக அழுதுகொண்டு என்ன பிழைப்பு? விட்டு விட்டுப் பேசாமல்தான் இருக்கிறேன். போதுதான் போகணுமோ இல்லையோ? இப்படி எதையாவது செய்துகொள்கிறேன். இதோ பார், இந்தப் படம் நன்றாக இருக்கிறதா?" என்று கேட்டுக்கொண்டே ஒரு படத்தை எடுத்து என் முன் நீட்டினாள்.

ஓவியம் பெரியதாக நல்ல சட்டம் போட்டுக் கண்ணாடி போட்டிருந்தது. கையால் வரைந்து வர்ணம் தீட்டியதுபோல் தோன்றியது. "யார் வரைந்தது? நீங்களா?" என்றேன். ஏனென்றால் பள்ளிக்கூடத்தில் இருந்தபோது இவர் நன்றாகச் சித்திரம் வரைவார்; ஓவியத்தில் கெட்டிக்காரர் என்று தெரியும்.

"ஆம், எப்படி இருக்கிறது?" என்றார் அவர் மறுபடியும்.

இந்த வேலையை மட்டும் விடாமல் வைத்துக்கொண்டிருக்கிறீர்களா இன்னும்?" என்றேன்.

"இது மட்டுமா? இங்கே வா காண்பிக்கிறேன்" என்று என்னை உள்ளே அழைத்துச் சென்றார். உள்ளைத் திறந்தவுடனேயே, ஜம்மென்று ஊதுவத்தி மணமும் பூ மணத்தோடு வீசியது.

அறை மற்றவைகளைப்போல் இல்லாமல் சிறியதாக இருந்தாலும் வெகு அழகாக ஜோடிக்கப்பட்டிருந்தது. பளபளவென்று தரை சலவைக் கல்லால் இழைக்கப்பட்டிருந்தது போல் சுவர்களும் பளபளப்பாக இருந்தன. நான்கு பக்கங்களிலும் சித்திரக் காட்சி போல் பெரிய பெரிய படங்கள் மாட்டியிருந்தன. இவ்வளவு அழகிய சாமான்களை வாங்கிச் சேர்ப்பதில் அவருக்கு இவ்வளவு பிரமை இருந்தது என்பது அந்த அறையில் நுழைந்தவுடனேயே நன்றாக விளங்கியது. நல்ல ஓவியங்களைத்

தவிர அபூர்வமான விக்கிரகங்களும் கற்சிலைகளும் சலவைக்கல் சிலைகளும் மூலைக்கு மூலை நிறுத்தி வைத்திருந்தன. நான் ஒவ்வொன்ருகப் பார்த்துக்கொண்டே வந்தேன்.

"என்ன? எப்படி இருக்கு, எல்லாம்?" என்ருர் அவர் சிரித்துக்கொண்டே.

"சரியாகக் காட்சி சாலை போல் இருக்கிறது. இவ்வளவு அபூர்வமான சாமான்களையெல்லாம் எங்கிருந்து வாங்கிச் சேர்த்தீர்கள்?" என்று கேட்டுக்கொண்டே ஒரு கல்சிலையைக் காட்டி, "இதை யார் செய்தது? நீங்கள் தானே?" என்று பரிகாசமாகக் கேட்டேன்.

"அதுவா? எல்லாம் நம்ம ஊரிலே பரிகாசந்தான். அதைக் கவனித்துப் பார்த்தாயா நீ? பார்த்தால்தான் அதன் நுட்பமும் அழகும் தெரியும்" என்று சொல்லிக்கொண்டே என்னை அதற்கு அருகில் அழைத்துச் சென்ருர்.

அது புத்ததேவரின் அருமையான சிலை. முகத்தில் நிலவியிருந்த சாந்தம் அவருடைய அஹிம்சா தர்மத்தை நன்கு எடுத்துக்காட்டியது. படர்ந்த ஆலமரத்தின் அடியில் அவர் உட்கார்ந்து யோகநிலையில் இருந்தார். அவருக்கு இரு புறமும் அசுர கணங்கள் தங்களுடைய விஷமங்களையெல்லாம் விட்டு மெய்ம்மறந்து புத்ததேவருடைய அன்பில் கட்டுப்பட்டவைபோல் கையைக் கூப்பிக்கொண்டு நின்றுகொண்டிருந்தன. அவை எப்பேர்ப்பட்ட கணங்கள் என்பதை வெளிப்படையாகக் காண்பிக்க அவர்களுடைய தோள்களில் ஐந்து தலை நாகங்கள் படம் விரித்து விஷத்தைக் கக்குவதுபோல் செதுக்கப்பட்டிருந்தது. நாகங்களின் வாயிலிருந்து வடியும் விஷமும் ஆலமரத்தின் விழுதுகளுடைய ஒவ்வோர் இழையும் கல்லில் எவ்வளவு அபூர்வமாகச் செதுக்கப்பட்டிருந்தன என்பதைப் பார்த்தபோது அதைச் சிருஷ்டி செய்த கலைஞன் யார் என்பதை அறிய ஆவல் உண்டாகாமல் இருக்கவே இருக்காது.

“இதைச் செய்தவன் யார்? இந்த ஊரிலா இருக்கிறான்?” என்று அவரைக் கேட்டேன்.

“அப்படிக் கேள். இந்த நம்ம ஊரிலேயேதான் இருக்கிறான். இவனைப்பற்றி யாருக்காவது தெரியுமா? நம்ம ஜனங்களுக்குத் தெரிந்தது இவ்வளவுதான். கலையின் அருமையை அறிவார்களா முன்னால்? இதைக் கொண்டு போய்க் காண்பி, இப்போது. ஐந்து ரூபாய்க்குக் கேட்பார்கள். ‘கல்தானே? அது போதாதா!’ என்பார்கள். நான் என்ன விலை கொடுத்தேன் தெரியுமா? ஆயிரம் ரூபாய்! சரியாக ஆயிரம்! நம்பினால் நம்பு. இல்லாவிட்டால் விடு” என்று அவர் கூறியபோது அவருடைய போக்கே அலாதியாக இருக்கிறதே என்பதுடன், ‘இப்படியெல்லாம் பணம் கொடுத்து எப்படி வாங்குகிறார் இவர்? இதைப்போல் இந்தப் பத்துப் பொம்மைகளையும் வைத்துக்கொண்டால்?’ என்று எண்ணியபோது இவரைப்பற்றிய கவலை இன்னும் அதிகரித்தது. ஏனென்றால் இவருடைய தந்தையையும் குடும்பத்தையும் நன்றாகப் பார்த்திருக்கிறேன். ஏழெட்டு வருஷங்களாக இவர் இந்த ஊரில் இல்லை; அவ்வளவுதான்.

“ஏதாவது வியாபாரம் செய்கிறீர்களா?” என்றேன். ஏனென்றால் வேலையை விட்டு விட்டேன் என்பதைத் தான் முன்னாலேயே சொல்லிவிட்டாரே.

“வியாபாரத்தையும் காணம்; மண்ணாங்கட்டியையும் காணம்! இந்தக் கலை என்பதைப்பற்றி உன் அபிப்பிராயம் என்ன? பிடிக்குமா இதெல்லாம்?” என்றார் அவர்.

“பிடிக்காமல் என்ன? ஆனால் உங்களைப்போல் பணத்தைப் போட்டு இப்படிச் சாமான்கள் வாங்க முடியுமா எங்களால்? பார்த்தால் ஆசையாகத் தான் இருக்கிறது” என்றேன்.

அதைக் கேட்டதுமே அவருக்குச் சந்தோஷமாகப் போய்விட்டது. “போகிறது; அதையாவது சொல்லுகிறாயே! எல்லாரும் என்ன என்ன கேட்கிறார்கள் தெரியுமா? ‘இவ்வளவு பணத்தைப் போட்டுப் பைத்தியம்போல் இதையெல்லாம் வாங்கி வைத்துக்கொண்டு கூத்தாடுவ

தில் உங்களுக்கு என்ன திருப்தி ஐயா? மனுஷனைக் கண்டால் உமக்குப் பிடிக்கல்லே. இதை எல்லாம் வச்சுண்டு கூத்தாடறேளே? இந்தக் காசை உபயோகமாக ஏதாவது செலவு செய்தாலும் உண்டு. ஏன் ஐயா இப்படி விகளு அடிக்கிறீர்கள் அநியாயமாக?' என்று பரிகாசம் செய்வீருர்கள் அப்பா!''

ஒரு வீட்டுக்குப் போனால் சாதாரணமாக வீட்டு விஷயங்களைப்பற்றியோ, மனிதர்களைப்பற்றியோ, வேறு ஏதாவது விஷயங்களைப்பற்றியோ பேசுவார்கள். குழந்தை குட்டிகளைக் கூப்பிட்டுக் காட்டிப் பெருமை அடித்துக்கொள்வார்கள். இதையெல்லாம் விட்டுவிட்டுக் கலையைப்பற்றியும் கலைஞனைப்பற்றியும் பேசும் ஆசாமியாக இவர் ஒருவரைத்தான் நான் முதல் முதல் சந்தித்தேன். இதற்காகவா என்னை இங்கே வரச் சொன்னார்? எல்லாம் நன்றாக இருக்கிறது என்று சிறிது நேரம் பார்க்கலாமே ஒழிய இதைப்பற்றியே அவர் பேசிக்கொண்டிருப்பதை என்னாலும் கேட்க முடியவில்லை.

''ஆமாம். எதோ விஷயமாகத்தானே வரச் சொன்னேன்? அதை விட்டுவிட்டு என்னவோ பேசிக்கொண்டே போகிறோமே. பிறகு உங்களுக்கும் வேறு வேலை இருக்காதா?'' என்றேன். ஜாடையாகத் தெரிந்துகொள்ளட்டும் என்பதுதான் மனத்தில். நான் சொன்னதும் அவரும் அந்த அறையைப் பூட்டிவிட்டு வெளியே வந்தார். மறுபடியும் முதலில் உட்கார்ந்திருந்த இடத்துக்கு வந்து என்னையும் உட்காரச் சொல்லிவிட்டுக் காபியும் பலகாரமும் கொண்டுவரச் சொன்னார். உட்கார்ந்து சாப்பிட்டோம். பங்களாவும் சாமான்களும் எவ்வளவு உயர்ந்தனவாக இருந்தனவோ பலகாரங்களும் அப்படியே இருந்தன. வீட்டில் வேலையாட்களும் ஏராளமாக இருந்தனர். 'இவருக்கு ஏது இப்படிப் பணம்?' என்பது என் மூளையில் வேலை செய்துகொண்டிருந்ததே ஒழிய, பேச்சில் மனம் செல்லவில்லை. சாப்பிட்டு முடிந்ததும், ''போய்விட்டு வரட்டுமா?'' என்றேன்.

"போய்விட்டு வருவதா? நாம் இன்னும் ஒன்றுமே பேசவில்லையே? உனக்கு ஏதாவது வேலை இருக்கிறதா அவசரமாக?" என்றார் அவர்.

"அவசரம் ஒன்றும் இல்லை. இருந்தாலும் வந்து வெகு நேரம் ஆகிவிட்டதல்லவா? புறப்படலாம் என்று பார்க்கிறேன்" என்றேன்.

"ஒன்றும் வேலை இல்லை என்கிறாய். என்ன அவசரம் இப்போ? நானும் வெளியில் போகப் போகிறேன். வா, பேசிக்கொண்டே போவோம்" என்று வண்டியைக் கொண்டுவரச் சொல்லிவிட்டு உடையை மாற்றிக்கொண்டு வந்தார்.

அவருடன் புறப்பட்டபோது எனக்கு அலுப்பாக இருந்ததே ஒழிய இரண்டு மூன்று இடங்களைப் போய்ப் பார்த்தவுடன் ஒரு விதமான திருப்தி ஏற்பட்டது. ஏனெனில் அவர் அழைத்துக்கொண்டு போகாவிட்டால் அங்கெல்லாம் யார் போகப் போகிறார்கள்? முதலில் இந்த இடங்கள் எப்படித் தெரியப் போகின்றன?

வண்டி போய்க்கொண்டே இருந்தபோது, நம் சமூகத்தைப்பற்றியும் நாகரிகங்களைப்பற்றியும் சொல்லி மிகவும் வருத்தப்பட்டுக்கொண்டார் ராமநாதன். "மற்ற நாடுகளில் இப்படியெல்லாம் வேலைத் திறம் இருந்தால் அவனுக்கு ஒரு கோவில் கட்டிவிடுவார்கள் தெரியுமா? நம் நாட்டு ஜனங்கள்தான் பணத்தை இருக்கிக் கட்டி மூட்டையாக வைத்துக்கொண்டு உட்கார்ந்து இருப்பவர்கள். வியாபாரமோ, கலையோ எல்லாவற்றையும் பள்ளத்தில் தள்ளி மூடிவிடுவார்கள். அவர்களுக்கு வேண்டியது பணம் ஒன்றுதான். இருக்கும் அந்தப் பணத்தை உபயோகமான முறையில் செலவு செய்து அதனால் பத்து ஜனங்கள் பிழைக்கும்படிமட்டும் செய்துவிட மாட்டார்கள். இப்படிப் பணத்தை வைத்துக்கொண்டு கடைசியில் தலையிலா கட்டிக்கொண்டு போகப் போகிறார்கள்? பணத்தைக் கொண்டுபோய் உடைப்பில் போடு" என்று மிகவும் கோபத்தோடு பேசினார்.

"இவர் மட்டும் பணத்தை வைத்துக்கொண்டு என்ன செய்கிறார்?" என்று நினைத்துக்கொள்ளாமல் நான் எப்படி இருக்க முடியும்?

வண்டி ஒரு சிறிய வீட்டின் முன் சென்று நின்றது. நாங்கள் இருவரும் இறங்கி உள்ளே சென்றோம். வீடு இருட்டாகச் சிறியதாக இருந்தது. அதற்குப் பின்புறம் ஒரு கொட்டகை போட்டிருந்தது; அங்கே சென்றோம். அவ்விடத்தில் பெரிய பெரிய கற்பாறைகள் கிடந்தன. ஐந்து ஆறு ஆட்கள் சிற்றுளியால் வேலை செய்துகொண்டிருந்தார்கள். ஓர் ஓரத்தில் கொஞ்சம் வயதான மனிதர் ஒருவர் உட்கார்ந்துகொண்டு வேலை செய்துகொண்டிருந்தார். அவருக்கு எதிரில் இருந்த சிறிய நடராஜரின் சிலையை எடுத்து ராமநாதையர் எனக்குக் காண்பித்தார்.

கல் என்றாலும் அதில் செதுக்கப் பெற்றிருந்த உருவம் நம்மைப் பார்த்துப் பேசுவது போல் அவ்வளவு தெளிவாக இருந்தது. ஒரு கை அகலம் உள்ள துண்டில் இவ்வளவு அழகாக நடராஜ உருவம் செதுக்கி இருப்பது மிகவும் பாராட்டும்படி இருந்தது. அதைப் பார்த்துக்கொண்டே, "அந்தப் புத்த தேவருடைய சிலையையும் இவர்தான் செய்தாரோ?" என்றேன்.

"வேறு யாரால் இந்த மாதிரி வேலை செய்ய முடியும் என்கிறாய்? நம்மவர்கள் ஒரு ரூபாய்க்குத் தருகிறாயா? ஐந்து ரூபாய்க்குத் தருகிறாயா என்று கேட்கிறார்கள். வெள்ளைக்காரனைப் பார். அவனுக்குத்தான் இதனுடைய அருமை எல்லாம் தெரிகிறது. கை கூசாமல் ரூபாயை எடுத்துக் கொடுத்துவிட்டுத் தன் வீட்டில் அழகுக்காக வைக்கிறான்" என்றார்.

"ஸார், உங்களுக்கு எந்த மாதிரி வேண்டும்? யார் உருவம் வேண்டும்? சொல்லி விடுங்க, அப்படியே பண்ணித்தாரேனுங்க. இந்தக் கை எவ்வளவு வேலை செய்து இருக்குதுங்க தெரியுமா? பாருங்க கையை! தேஞ்சு போயிட்டுதுங்களே தவிர உலகத்திலே மதிப்பவர் ஒருவரையும் காணமுங்க" என்று வருத்தப்பட்டுக்கொண்டான்,

அந்தக் கிழவன். அவனுடைய கைவிரல் ஒவ்வொன்றும் தேய்ச்சல் ஊசிபோல் தேய்ந்து கிடந்தது.

இன்னும் இருந்த மற்றச் சிலைகளையும் பார்த்துவிட்டு அங்கிருந்து கிளம்பினோம்.

"போய்விட்டு வருகிறேன் பெரியவரே" என்று ராமநாதையர் கூறியபோது அவன் எழுந்திருக்க முடியாமல் தத்தளிப்பது போல் இருந்தது.

"நீங்கள் எழுந்திருப்பானேன்? ஒன்றும் சிரமப் படுத்திக்கொள்ளாதீர்கள்" என்றேன். நான் அவருக்குப் புது மனிதனாக இருப்பதனால் மரியாதை காட்டுகிறார் என்று நினைத்தேன்.

"தெய்வம் மனிதனுக்கு ஒன்றைக் கொடுத்தால் ஒன்றைக் கொடுப்பதில்லையே? பணம் இருந்தால் ஞானம் இல்லை; ஞானமும் கலையும் இருந்தால் பணம் இல்லை. இவருக்கு இவ்வளவு திறமை வாய்ந்த கைகளைக் கொடுத்தவர் கால்களைக் கொடுக்காமல் வைத்துவிட்டார்" என்று வருத்தத்துடன் சொன்னார் ராமநாதன்.

"ஐயோ பாவம்! ஏன் சொன்னோம்?" என்று ஆகிவிட்டது. என் வருத்தத்தையும் அவருக்குக் காண்பித்துவிட்டுக் கிளம்பினேன்.

அதற்கு மேல் இரண்டு இடங்களுக்குச் சென்றோம். "பொம்மைகள் செய்யும் ஒரு நண்பரிடம் அழைத்துக் கொண்டு போய் எல்லாவற்றையும் காண்பித்தார். ஓவியர் ஒருவர் அவர் நண்பராம். அவரிடமும் அழைத்துக் கொண்டு போய்க் காண்பித்தார். அங்கே கண்ட ஒரு காட்சி என் மனத்தில் அப்படியே படிந்துவிட்டது. நாங்கள் போய் உட்கார்ந்ததும் ஓவியர் ஆசார உபசாரங்கள் செய்துவிட்டுப் பழம் எடுத்து வந்து வைக்கச் சொன்னார். ஒரு தட்டில் நான்கு வாழைப் பழங்களை எடுத்து வந்து வைத்துவிட்டுச் சென்ற ஓர் உருவத்தின் வடிவழகு மின்னல்போல் மின்னி மறைந்தது. வறுமையால் வாடி இளைத்த அவள் வேறு யாராக இருக்க முடியும்? ஓவியருடைய சம்சாரமாகத்தான் இருக்க வேண்டும் என்று தீர்மானம் செய்துகொண்டேன். இவ்வளவு அழகிய உருவங்களை எதி

ரில் எப்போதும் வைத்துக்கொண்டுதான் இவர்கள் கண்ணுக்கு எட்டாத கற்பனையைச் செய்து வர்ணம் தீட்டுகிறார்களா? என்னும் கேள்வி என் மனத்தில் உதித்தது. 'உலகத்திலேயே எதிரில் இருப்பது ஒருவருக்கும் கண்ணில் படாது. எங்கேயாவது கண்ணுக்கு எட்டாமல் இருப்பதைத்தான் நினைத்து ஏங்குவார்கள் போல் இருக்கிறது' என்று நினைத்துக்கொண்டேன். அவர் வரைந்திருந்த ஓவியம் ஒவ்வொன்றும் அவ்வளவு உயர்ந்ததாக இருந்தாலும், அழகுடன் உணர்ச்சியுள்ள நான் கண்ட அந்த உருவத்தை அவர் கவனித்திருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. வரும்போது என்னால் ராமநாதனைக் கேட்காமல் இருக்க முடியவில்லை.

"ஏன் ஸார்? இவ்வளவு அழகிய படங்கள் எழுதியிருக்கிறீரே? அந்த அம்மாள் அவர் மனைவிதானே? அவளை ஒரு படங்கூட எழுதவில்லையே" என்றேன்.

"தெரியாதா உனக்கு? எங்கேயோ ஆகாசத்தைப் பார்த்துக் கோட்டை கட்டுவதுதான் மனித சுபாவமே தவிரப் பக்கத்தில் இருப்பதை மனிதன் பார்க்கமாட்டான். கைப்பிடித்தவள் எவ்வளவு ரூபவதியாக இருந்தாலும் புருஷனுடைய கற்பனை வேறு எங்கேயோதான் சஞ்சரித்துக்கொண்டிருக்கும் என்று நான் எண்ணியதையேதான் அவரும் சொன்னார். வண்டி வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தபோது அவருடைய சொந்த விஷயங்கள் சிலவற்றைப்பற்றிப் பேச ஆரம்பித்தார்.

"பார்த்தாயா நம் நாட்டு வறுமையை எல்லாம்? எந்தக் கலையும் இப்படிக் கேள்வி முறை இல்லாமல்தான் அடியோடு ஒழிந்துவிடுகிறது. நாம் பார்த்துவிட்டு வந்தோமே, இந்த மூன்று நான்கு விஷயங்களையும் சேர்த்து ஓர் இடத்தில் வைத்து அவர்கள் குடும்பம் எப்போதும் கஷ்டப்படாமல் இருக்கும்படி ஒரு வழி செய்ய வேண்டும் என்பதுதான் என்னுடைய முதல் ஆசை" என்றார். "அதற்கென்ன? வேண்டிய வழி செய்யலாமே நீங்கள்" என்றேன்.

"அதைத்தானே இப்போது சொல்ல வந்தேன். முடிந்தால் என் இஷ்டப்படி என்றைக்கோ செய்திருப்பேனே!

அதுதான் இல்லை. இந்த ஊரில் ஒரு பெரிய ஓட்டல் ஆரம்பிக்கலாம் என்று பார்க்கிறேன். மானேஜராக உன்னைத்தான் போடலாம் என்று உத்தேசம். என்ன சொல்லுகிறாய்?'' என்றார் அவர்.

இதைக் கேட்டதும் எனக்கு வேடிக்கையாக இருந்தது. "ஹோட்டலா? எதையோ பேசிவிட்டு எங்கேயோ பாய் கிறீர்களே? ரொம்ப நன்றாகத்தான் இருக்கிறது'' என்றேன்.

"அப்படியா? அதை ஏன் கேட்கிறாய் போ. என் பாடு அப்படி இருக்கிறது. நம்ம பழைய சிமாவாயிற்றே என்று சொல்லுகிறேன் கேள்'' என்றார்.

"உனக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லையே? அதைத் தான் முதலில் சொல்ல வேண்டும். செய்துகொள்ளும் போது பார்த்து ஜாக்கிரதையாகச் செய்துகொள். தெரிந் ததா? எவ்வளவு ஏழையாக இருந்தாலும் அதனால் பாதகம் இல்லை. இந்த நல்ல சம்பந்தம், பணம் என்று பார்க்கிறோம் பார், அப்போதுதான் வரும் வல்லடி எல்லாம்! பணம் வருகிறதே, ஹாய்யாக உட்கார்ந்துகொண் டிருக்கலாம் என்றுமட்டும் நினைத்துக்கொண்டு விடாதே. அதைப் போன்ற அசட்டுத்தனம் வேறு இல்லவே இல்லை. என்ன வோ, நம்ம சிமாவாயிற்றே, நாளைக்குக் கலயாணம் ஆக வேணுமே என்று சொல்லுகிறேன். கோபித்துக்கொண்டு விடாதே அப்பா. உனக்கும் இதே லாட்டரி வந்துவிடப் போகிறதே என்று சொல்லுகிறேன் பிறகு ஒரு பைசாக் கூடத் தொடுவதற்கு யோக்கியதை இல்லை; பிணைப் பிடுங் கல் தான். இந்த இடிவெல்லாம் வேண்டாம் இருப்பதைப் போட்டு ஏதாவது ஒன்றை ஆரம்பித்துத் தொலைத்து விடுவோம் என்ற உத்தேசம். ரெயிலடிக்கு எதிரில் ஒரு பெரிய கட்டிடமாகக் கட்டி ஏற்பாடாக ஆரம்பித்து விட்டால் எனக்கும் இந்தக் கவலையும் தொல்லையும் ஒழியும். ஒபாத் தொல்லை! பிறகு எதை வேண்டுமானாலும் இஷ்டப்படி செய்துகொண்டு போகட்டும். நான் ஒன் றிலும் தலையிடப் போவதில்லை. என்ன சொல்லுகிறாய்? வருகிறாயா?'' என்றார்.




எப்படி இவர் இவ்வள[illegible] தார் என்று அதிசயப்பட்டுக்[illegible] ஐயாவின் சமாசாரம் இது என்று நான் [illegible]க்கவே இல்லை.

"அப்பாவுடன் கலந்து பேசிவிட்டுச் சொல்லு கிறேன்" என்றேன்.

"அப்படியானால் ரொம்ப சரி. இந்த வண்டியிலேயே போய் இறங்கிக்கொண்டு விடலாம். நீ வந்தாயானால் எனக்குக் கவலை இல்லாமல் இருக்கும்" என்றார் அவர்.

நான் புறப்பட்டபோது குழந்தைகள் நாலைந்து பேர் வெளியிலிருந்து வந்தார்கள்.

"எல்லாம் நம்ம குழந்தைகளாக்கும்?" என்றார்.

"எங்கே எந்தப் பள்ளிக்கூடத்தில் போட்டிருக் கயள்?" என்றேன், பையன் ஒருவனை முதுகில் தட்டிக் கொண்டே.

"ஆமாமாம்! குழந்தைகளா? எல்லாம் சின்னப் பிசா சுகள்!" என்று ராமநாதன் கூறியபோது எனக்கே சிரிப்புத் தாங்க முடியவில்லை. கடகடவென்று சிரித்துவிட்டேன்.

"உம்...எல்லாம் உனக்குச் சிரிப்பாகத்தான் இருக்கும்" என்றார் அவர்.

# 11

## முடிவு

காலையில் அத்திம்பேர், பட்டு, குழந்தைகள் எல்லோரும் வந்து இறங்கினார்கள். சாமான்களைப் பார்த்தால் அதிக நாள் தங்கப்போவதாகத் தோன்றவில்லை. படுக்கைகளும் இரண்டே இரண்டு பெட்டிகளும் மட்டுமே இருந்தன. எப்போதும் ஒரு வண்டி சாமான்கள் இருக்கும். குழந்தைகள் எல்லோரையும் பார்த்து வருஷக்கணக்காக ஆய்விட்டதால் பெரியவர்களாக வளர்ந்திருந்தார்கள். அப்பா ஒவ்வொருவராகப் பார்த்து விசாரித்துக்கொண்டிருந்தார்.

"என்ன சீமா? ஏதாவது சாப்பாடு கீப்பாடு உண்டா? ஒரு வாரம் லீவில் வந்திருக்கிறேன். அதற்குள் எதுவானும் முடிக்கணும்" என்று கேட்டுக்கொண்டே உள்ளே வந்தார் அத்திம்பேர்.

தங்கத்துக்குப் பேச்சில் அதிகப் பிரியமே ஒழிய காரியம் அவ்வளவாக அவள் கண்ணில் படாது. இந்த விஷயங்களிலெல்லாம் கண்ணும் கருத்துமாக இருப்பவள் நம்மாத்தில் பட்டுதான். பேச்சுப்பாட்டில் இருக்கும். அதற்குள் எவ்வளவோ விஷயங்களைக் கவனித்து விடுவாள்.

"என்ன? வீடு வெறிச்சுனு இருக்கே? ஒருத்தரும் இல்லை போல் தோணுகிறதே? வரத்துக்குள்ளே ஓடி-வருவாளே ருக்கு; ஊருக்குப் போயிருக்காளா என்ன?" என்று கேட்டுக்கொண்டே குழந்தை, மணி இவர்களிடம் பிஸ்கோத்துப் பொட்டலங்களை எடுத்துக் கொடுத்தாள். தாழ்வாரத்து வாசல்படிக்கு வந்தபோதுதான் மன்னி, "வாங்கோ அக்கா? எல்லோரும் வந்திருக்காளோன்னோ குழந்தைகள்?" என்றாள். குழந்தைகள் எல்லோரும் மன்னியைச் சூழ்ந்துகொண்டார்கள்.

"எல்லாரும் சௌக்கியந்தான். ஒரு வாரம் லீவ் கிடைத்தது. உங்கள் எல்லோரையும் பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தோம்" என்று அவளுக்குப் பதில் சொல்லிக்கொண்டே வெங்கீர் உள்ளுக்குள் நுழைவதற்குள், "ஏண்டி தங்கம், மீனாக்ஷி எங்கே போய்ட்டா?" என்றாள் தங்கத்தைப் பார்த்து.

நான் வீட்டிலேயே இருக்கிறேன். இது தெரியவில்லையே. எங்கே போயிருப்பாள்? உள்ளே சமையலுக்கு ஆள் இல்லையா என்ன?" என்று நினைத்துக்கொண்டு உள்ளே போய்ப் பார்த்தேன்.

ஒரு சிறிய பெண் வாண்டு போல் இங்கும் அங்கும் பாய்ந்துகொண் டிருந்தது.

"மீனாக்ஷி எங்கே மன்னி?" என்றேன்.

"நான்தான் அன்னிக்கே சொன்னேனே. நமக்குச் சமயம் என்பதுக்குள் அவளுக்கும் சமயம் வந்துவிடுகிறது. இதைக் கொண்டுவந்து விட்டுவிட்டுப் போய்விட்டாள்! என்ன குறைச்சல் எனக்கு" என்றாள் மன்னி.

அதற்குத்தான் அப்படிச் சொன்னாளா மன்னி இரண்டு நாள் முந்தி? பட்டு வருவது இவளுக்குப் பிடிக்கவில்லை; சொல்லுகிறாளாக்கும் என்று நினைத்துக்கொண் டேன் அப்போது.

"எப்போது வருவாளாம்?" என்றேன் மறுபடியும்.

"யார் கண்டது? என்னிடம் சொல்லிவிட்டுப் போறாளா? என்னை ஒரு மனுஷி என்று நினைத்துக் கொண் டிருக்காள் அவள்? எதையோ அப்பாவிடம் சொல்லி விட்டுப் போய்விட்டாள். இப்படியெல்லாம் இடம் கொடுப்பதனால்தானே அவளும் இப்படிச் செய்கிறாள்?" என்றாள் மன்னி, கடுகடுப்புடன். 'இருப்பது போதா தென்று இரண்டு பேர் வரும்போதும் இப்படியா எதை யாவது செய்ய வேண்டும்?' என்று எண்ணிக்கொண்டு அப்பாவைப் போய்க் கேட்டேன். "ஒரு ஆள் கொண்டா, போய் எப்படியாவது" என்றார் அவர்.

எங்கே சென்று யாரைக் கூட்டிக்கொண்டு வரு வது என்று எனக்குத் தெரியவில்லை. முந்திப் பிந்தி நான் இதைச் செய்ததும் இல்லை. வேறு வழியும் தோன்ற வில்லை. அடிக்கடி நம்ம வீட்டுக்கு வரும் ஒரு பாட்டி யிடம் சென்று கேட்டேன். நல்ல வேளையாக அவளும் ஓர் ஆளை அனுப்பிவைத்தாள். "இப்போது இவன்தான் வேலை இல்லாமல் இருக்கிறான். சாதாரணமாகச் செய் வான். இந்தக் காலத்தில் வேலைக்காரர்கள் எங்கே டாப்பா கிடைக்கிறார்கள்? எதையோ தட்டுக்கு முட்டுக்குப் பார்த்துக்கொண்டு போக வேண்டியதுதான். சொன் னதைச் செய்யும்; கொஞ்சம் அசடு. எப்படியாவது அவா இருக்கிற வரைக்கும் தள்ளச் சொல்லு. பட்டுவை வந்து மத்தியான்னமாப் பார்க்கறேன்னு சொல்லு" என்றாள். 'இதாவது கிடைத்ததே இப்போது' என்று இருந்தது நான் இருந்த இருப்பு.

"ரொம்ப சந்தோஷம் பாட்டி; போயிட்டு வரேன்" என்று சொல்லிவிட்டு அவனையும் அழைத்துக்கொண்டு கிளம்பினேன். அந்தப் பையனுக்கு அதிக வயது இல்லா விட்டாலும் உயரமும் பருமனுமாக மிகவும் தாட்டியாக இருந்தான். பாட்டி சொன்னதுபோல் முகத்தில் சுறு சுறுப்போ களையோ ஒன்றும் இல்லை. அசடு வழிந்துகொண் டிருந்தது.

நடந்து வந்துகொண் டிருந்தபோதே, "உங்களுக்கு வாசுதேவனைத் தெரியுமா ஸார்?, பெரிய வக்கீலாயிற்றே" என்று கேட்டான் அவன் என்னை.

"தெரியும். அவருக்கென்ன?" என்றேன் நான்.

"நான் அவர் வீட்டில்தான் இருந்தேன் என்று சொல்ல வந்தேன்."

"எவ்வளவு ரூபாய் சம்பளம் கொடுத்துக்கொண் டிருந்தார்கள்?"

"இருபத்தைந்து ரூபாய்."

"அப்படியானால் ஏன் விட்டுவிட்டு வந்தாய்? உனக்கு அந்தப் பணம் போதவில்லையா?"

"போதாமல் இல்லை ஸார். அவர்கள் வீட்டில் ஓர் ஆளாவது நிற்க மாட்டான். நீங்களே பாருங்களேன். இந்த ஒரு வருஷத்தில் ஐந்து ஆறு ஆட்கள் மாறிவிட்டார்கள். பெரிய பேர் இருந்துவிட்டால் மாத்திரம் போதுமா?"

"அப்படி என்ன காரணம்? அதைத்தான் சொல்லேன்" என்றேன் நான்.

"அவர் வீட்டில் ஒரு அம்மா இருக்கிறாளே, தெரியுமா ஸார் உங்களுக்கு? ஐயருக்கு மைத்துனியாம். அவளுடைய அதிகாரந்தான் அங்கே பெரிசு. ஒரு நிமிஷம் உட்கார்ந்தால்கூட அந்த அம்மாளுக்குக் கண்ணை உறுத்தும். ஓயாப் பாடு, ஒழியாப் பாடு. ராத்திரிப் பதினொரு மணி ஆகும் ஸார், எல்லாரும் சாப்பிடுவதற்கு! இவ்வளவு அழகில் எல்லாச் சாமான்களையும் வைத்துப் பூட்டிக் கொண்டு போய்விட்டால் ஆட்கள் எப்படித்தான் வேலை செய்வது, சொல்லுங்கள்? இப்படி வயத்தைக் கட்டி வாயைக் கட்டி என்ன வேலை? வெளியில் வந்தால் சம்பளமா கிடைக்காது? அம்மா வாயைத் திறப்பதில்லை. ஐயர் இவளுக்கு எதற்கு இவ்வளவு அதிகாரம் கொடுத்திருக்கிறார் என்று நீங்களே சொல்லுங்கள்? வீடு விடாக இதைப்பற்றி வம்பு வளர்க்கிறார்கள்" என்று அவன் மேலும் பேசிக்கொண்டு போவதற்குள் எனக்கு அசிங்கம் பிடித்துவிட்டது. 'ஒவ்வொரு வீட்டு விஷயமும் இந்த ஆட்களின் மூலந்தானே இவ்வளவு பரவுகிறது? இதுதான் வேலை போல் இருக்கிறது இவர்களுக்கு' என்று நினைத்துக்கொண்டேன்.

"அதெல்லாம் எப்படிப் போனால் எனக்கென்ன ஆக வேண்டியது? வீண் வம்பு வளர்க்காமல் வீட்டில் வேலை செய்ய வேண்டும்; தெரியுமா? வாயைக் கையைக் காட்டக் கூடாது. இஷ்டம் இல்லாவிட்டால் இப்போதே திரும்பிவிடு" என்றேன். அகப்படுவதை விட்டுவிட அவனுக்கும் மனம் இல்லையோ என்னவோ, பேசாமல் வந்து சேர்ந்தான்.

அப்பா பார்த்துப் பேசி உள்ளே அனுப்பினார்.

"என்னத்திற்காகவடா இப்படி ஒரு அசடை அழைச்சுண்டு வந்திருக்கே? பார்த்தாலே பீமசேனன்போல் பயமாக இருக்கிறதே" என்றாள் பட்டு.

"வழியில் போவதையெல்லாம் கொண்டு வந்து விட்டால் வீட்டில் பெருச்சாளியை விட்டது போல்று ஆகும்? எப்படியோ எல்லாருமாகச் செய்துகொண்டு போகிறோம்" என்றாள் மன்னி.

எதை வேண்டுமானாலும் செய்துவிட்டுப் போகட்டும்; ஒரு வாரத்துக்குத்தானே? அதற்குள் அவளே வந்துவிட மாட்டாளா ஒரு சமயம்? பேசாமல் இருங்கோ; எல்லாரும் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டு இந்தண்டை வந்து விடுங்கோ" என்றேன். நான்தான் என்ன செய்ய முடியும்? பேசாமல் போய்விட்டேன்.

எல்லோரும் சேர்ந்து கூடத்தில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோம். "உள்ளே உள்ளே போய்ச் சுற்றாதே. அங்கேதான் இரண்டு இருக்கே; பண்ணட்டும். உட்கார்ந்துக்கோ" என்றாள் பட்டு மன்னியை. வெகுநேரம் வரையில் வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருந்தோம்.

மன்னி கூறியதுபோல் அந்த வேளைச் சாப்பாட்டை வாயில் வைக்கவே முடியவில்லை. அப்பா எப்படிப் பொறுத்துக்கொண்டு சாப்பிட்டாரோ எனக்கே அதிசயமாக இருந்தது.

சாப்பாடு முடிந்த சிறிது நேரத்துக்கெல்லாம், "வெளியில் போகலாம்; வருகிறாயா என்னுடன்?" என்றார் அத்திம்பேர்.

"எங்கே போகப் போகிறீர்கள்?" என்றேன்.

"நான் எங்கே போகிறேனோ அங்கே வாயேன். இங்கே உட்கார்ந்துகொண்டுதான் என்ன செய்யப் போகிறாய்; எழுந்து வா" என்றார்.

யாரிடமிருந்தோ அவருக்கு வண்டி வந்திருந்தது.

"ஏண்டா படிப்பை நிறுத்திவிட்டாய்?" என்றார் அத்திம்பேர்.

"என்ன செய்வது அத்திம்பேரே? அப்பாவைத் தொந்தரவு செய்யப் பிடிக்கவில்லை. அவருக்கு எவ்வளவோ தொல்லை?" என்றேன்.

"எழுதினால் நான் பணம் அனுப்பமாட்டேனா? அசட்டுப் பிள்ளையடா நீ. வீணாகக் கெடுத்துக்கொள்கிறாயே? என்ன செய்யப் போகிறாயாம் மேலே?" என்றார் அவர்.

"நீங்கள்தான் இருக்கிறீர்களே; கவலை என்ன எனக்கு? ஒரு வழி பண்ணித்தர மாட்டேளா?" என்றேன், என்ன சொல்லுகிறார் பார்க்கலாம் என்று நினைத்துக்கொண்டு.

"அப்படியா அது? என்னை நம்பிக்கொண்டா படிப்பை நிறுத்தினாய்? அதற்கு முன் ஒரு வார்த்தை என்னைக் கேட்டாயா? இப்போது வந்து என்னிடம் சொல்லுகிறாயே? ஏ என்றால் பீ என்கத் தெரியாது. உனக்கு யார் வேலை பார்த்துக்கொடுக்கிறதுடா இப்போ? நல்ல வேலை செய்தாய்!" என்று பரிகாசமாகச் சிரித்தார் அவர்.

"முடியாட்டாப் போங்கோளேன். உங்களை நம்பிக் கொண்டுதான் நான் பிறந்தேனா?" என்று நானும் வேடிக்கையாகச் சொன்னேன். இப்படியே விளையாட்டாக நாங்கள் பேசிக்கொண்டு போனபோது வண்டி ஒரு பெரிய பங்களாவில் நுழைந்தது.

"நாகராஜன் வீட்டில் நுழைகிறானே? இங்கேயா போகச் சொன்னேள் வண்டிக்காரனிடம்?" என்றேன் நான். எதற்கு அவ்விடம் போகிறார் என்று தெரியவில்லை.

"அவனுடைய வண்டிதானே இது? தெரியாதா உனக்கு?" என்று கேட்டார் அவர்.

"சந்தேகமாகத் தோன்றியது" என்று சொல்லி நிறுத்திக்கொண்டேன். ஏனென்றால் வண்டிக்காரன் அவனுடைய ஆள். அவன் எதிரில் பேசலாமா?

நாகராஜன் ஊரில் பிரசித்தமானவன். நாட்டிய சிரோமணி ஒருத்தியை மணந்துகொண்டு ஏராளமான

பணம் சம்பாதித்துக் குவித்துக்கொண் டிருந்தான். அவ னிடம் இவருக்கு என்ன வேலை என்பதுதான் எனக்குப் புரியவில்லை.

"உங்களுக்கு இவரை முன்னாலேயே பழக்கமா அத்திம்பேரே?" என்றேன், வண்டியிலிருந்து இறங்கு வதற்கு முன்.

"இங்கே பழக்கமில்லை. டில்லிக்கு அடிக்கடி வந்தி ருக்கிறாரே இல்லே போ? அங்கே பழக்கம். 'வந்தால் கட் டாயம் வீட்டுக்கு வர வேண்டும்' என்று மிகவும் கேட்டுக் கொண்டார்" என்றார் அவர்.

வண்டியிலிருந்து இறங்குவதற்கு முன்பே நாக ராஜன் ஓடி வந்து உபசாரம் செய்து அழைத்துக் கொண்டு போனார். பணக்காரன், அதுவும் நாட்டியம் இவைகளில் சம்பந்தப்பட்டவர்களைப் பற்றிக் கேட்க வேண்டுமா? வீடு ஒரே தடபுடலாக இருந்தது.

அவர் மனைவியும் வந்து உட்கார்ந்துகொண்டு வெகு நேரம் வரையில் பேசிக்கொண் டிருந்தாள். அத்திம்பேர் என்னை அவர்களுக்கு அறிமுகப்படுத்தினார்.

"நீங்கள் டில்லிக்கு வந்து எங்களுடைய சபையில் நாட்டியம் ஆட வேண்டும். ஊர் ஜனங்கள் எல்லோரும் மிகவும் ஆவலுள்ளவர்களாக இருக்கிறார்கள்" என்று அத்திம்பேர் அவர்களைக் கேட்டுக்கொண்டார்.

அவ்விடத்திலிருந்து விடை பெற்றுக்கொண்டு ஜிஎம் பியதும் வீட்டுக்குப் போகப்போகிறார் என்று நான் நினைத்துக்கொண் டிருந்தேனா ஒழிய அத்திம்பேர் வண்டியை வேறு பக்கம் ஓடச் சொன்னார்.

"இன்னும் எங்கே அத்திம்பேரே? வீட்டுக்குத் தானே?" என்றேன்.

"தானே தெரியும். பார்த்துக்கொண்டிரேன்!" என்று அவர் சொல்லிக்கொண் டிருந்தபோதே வண்டி குதிரைப்பந்தயம் நடக்கும் இடத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது.

"குதிரைப் பந்தயத்துக்கா? ரொம்ப நன்றாக இருக்கிறதே அத்திம்பேர்" என்றேன். குதிரைப் பந்தயம் என்ற உடனேயே எனக்கு உடம்பு பதறிவிட்டது.

"ஏன் அவ்வளவு பயப்படுகிறாய்? நீ போகும் வழக்கம் இல்லையா? இன்றைக்கு என்னுடன் வந்து வேடிக்கை பார்" என்று என்னையும் பிடித்து இழுத்துக்கொண்டு உள்ளே சென்றார்.

குதிரைப் பந்தயத்தைப்பற்றி எவ்வளவோ கேள்விப்பட்டிருக்கிறேன்; எல்லாம் தெரியும். என்றாலும் நாம் இந்த இடத்துக்கெல்லாம் போவது என்பது எனக்குச் சரியாகப் படவில்லை. எனக்குத்தான் கட்டுமா? அல்லது சம்சாரியான அவருக்குத்தான் கட்டுமா? இரண்டும் எனக்கு விளங்கவில்லை. கூட்டம் கூட்டமாக ஜனங்களும் ஆரவாரமும் இருந்தாலும் என் மனம் இதிலெல்லாம் செல்லவில்லை. 'ஏன் இவருடன் வந்தோம்? வராவிட்டால் இப்படி ஆகாதே' என்ற வருத்தம் மேலும் மேலும் உண்டாயிற்று. கத்தை கத்தையாக ரூபாய் நோட்டுகளை அத்திம்பேர் எடுத்து வீசியபோது என் மனம் எங்கெல்லாமோ சஞ்சரித்துக்கொண்டிருந்தது.

வீட்டுக்கு வந்ததும் ஒன்றும் பிடிக்கவில்லை. உலகம் எவ்வளவு விதமாக இருக்கிறது என்பதை நினைக்க நினைக்க மிகவும் அதிசயமாக இருந்தது. பட்டுவுக்கு இதெல்லாம் தெரியாமலா இருக்கும்? தெரிந்தால் இப்படிப் பார்த்துக்கொண்டு பொறுத்துக்கொண்டிருப்பாளா?' என்ற சந்தேகம் என்னைப் போட்டு வாட்டியது. 'அப்பாவரையில் இதெல்லாம் எட்டாமல் இருக்க வேண்டுமே; ஈசுவரா!' என்று வேண்டிக்கொண்டேன்.

பட்டுவாலும் அத்திம்பேராலும் ஒரு கணம் பேசாமல் இருக்க முடியாது. வேடிக்கையும் சிரிப்புமாகப் பொழுது போவதே தெரியவில்லை.

"நடந்ததையே கொட்டிக் கொட்டி அளந்துகொண்டிருக்கக் கூடாது. சந்தோஷமாக இருக்க வேண்டும்" என்பது பட்டுவுக்கு. எல்லோரையும் சினிமாவுக்கு

அழைத்துக்கொண்டு போவதும் வெளியில் அழைத்துக் கொண்டு போவதுமாக அமர்க்களப் படுத்திக் கொண்டிருந்தாள். கத்தை கத்தையாக நோட்டு களை எடுத்து விசியபோது எனக்குத்தான் மிகவும் கஷ்ட மாக இருந்தது. "எதற்காக அக்கா இதெல்லாம்?" என்று கேட்டுக்கொண்டே இருந்தேன். 'சம்சாரி! இப் படி இருந்தால் அவளுக்குக் கஷ்ட வேண்டாமா?' என்று ஒரு பக்கத்தில் கவலையாகவே இருந்தது.

எல்லோரும் விளையாட்டாகப் பேசிக்கொண் டிருந்த போது, "எல்லாம் ரொம்ப சரி, நீ ஊருக்குப் போவதற் குள் தாம்பூலம் மாற்றிவிடலாம் என்கிறுன் நடராஜன். நீதான் ஒரு முடிவு செய்ய வேண்டும் பட்டு" என்றுர் அப்பா.

'பட்டு இந்த விஷயத்தைப்பற்றி என்னிடம் பேசுவாள்' என்று எதிர்பார்த்துக்கொண் டிருந்தேன். என் அன்றுமே கேட்கவில்லை என்பது எனக்குத் தெரிய வில்லை. வந்து இறங்கியதும் எல்லாவற்றையும் கட்டா யம் அப்பா கூறி இருப்பார். என்ன காரணத்தினுல் அவள் இதைப்பற்றி ஒன்றும் பேசவில்லை என்பது அதி சயமாகவே தோன்றியது.

"நானும் தங்கமும் இதைப்பற்றித்தான் நேத்திக்கு ரொம்ப நாழி பேசிகொண் டிருந்தோம். அவள் என் னமோ பண்ணலாம் என்கிறுள். எனக்கு அவ்வளவு......" என்று பட்டு முடிப்பதற்குள் அப்பாவுக்குப் பொறுக்க வில்லை.

"சம்மதம் இல்லை என்கிருயா?" என்றுர்.

"என் இஷ்டத்தைச் சொல் என்றுல் நான் சொல் லத்தானே வேணும்? இந்தச் சம்பந்தமே வேண்டாம் என்றுதான் நான் சொல்வேன். நானும் எல் லாம் பார்த்துவிட்டுத்தான் சொல்லுகிறேன். ஆனல் கடைசியில் கல்யாணம் செய்துகொள்ளுகிறவன் இஷ் டம். நானும் நீயும் என்ன சொல்லக் கிடக்கு? அவனைக் கேளேன்!" என்றுள் பட்டு.

"அவனை என்ன கேட்கிறது? நாம் சொன்னால் 'சரி' என்று தலையாட்டிவிட்டுப் போகப் போகிருன். நீதான் கேளேன்" என்று அப்பா சிரித்தார்.

"என்னடா, சீமா? என்ன சொல்றே நீ? நடராஜனும் நீயுந்தான் பழகியவர்கள். அதைப்பற்றிச் சொல்ல வேண்டாம். பெண்ணைப் பார்த்துப் பிடித்திருக்கா இல்லையா?" என்ருள் பட்டு என்னைப் பார்த்து.

"இவ்வளவு பேர் குளறும்போது நான் இன்னும் என்ன குளற முடியும்? எல்லாரும் சொன்னால் நான் மாட்டேன் என்கப் போகிறேனு? ஏதோ நீதான் பெரியவளாக இருக்கே. இரண்டில் ஒன்றைத் தீர்மான மாக முடியேன்" என்றேன்.

தங்கத்துக்கு அதற்குள் என்ன அவசரமோ தெரிய வில்லை. "பேசாமல் முடித்துவிடு அக்கா; எல்லாம் பொருத்தமாக இருக்கும்போது யோசனை என்ன வந்திருக்கு?" என்று அவசரப்பட்டாள்.

"உனக்கு என்னடீ தெரியும் தங்கம்? நீ இன்னும் சின்னக் குழந்தை. அதில் எவ்வளவோ விஷயங்கள் இருக்கின்றன. இன்றைக்கு நாம் சரியென்று செய்துவிட்டால் கடைசிவரையில் எல்லாவற்றுக்கும் நாம்பளா பாத்தியப்படப் போகிருேம்? பேசாமல் ருக்குவைப்ருபண்ணிக்கிறதுதான் நமக்குச் சரி. எவ்வளவோ யோசித்துத்தான் சொல்றேன். வாண்டாம் அப்பா, இந்தச் சம்பந்தம்" என்ருள் பட்டு.

அப்பாவின் முகமும் தங்கத்தின் முகமும் சப்பென்று போய்விட்டன. "ஒரே தீர்மானமாக இப்படிச் சொல்லு கிருயே? அவனுக்கு நல்ல இடத்திலிருந்து பெண் வந்து நாம் பார்க்க வேண்டாமா? இது, அது" என்று அப்பா எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். பட்டு எந்த விஷயத்தை மனத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிருள் என்பது எனக்கும் புரியவில்லை. கடைசியில் கல்யாணம் நின்றுவிட்டது. தங்கத்துக்கும் அப்பாவுக்குந்தான் இதில் மிகவும் வருத்தம். முதலில் எனக்குக் கொஞ்சம் ஆசை இருந்தாலும் ராமநாதனைப் பார்த்

தது முதல் என் மனமும் மிகவும் குழம்பிக்கொண்டுதான் இருந்தது. பட்டு இந்த விஷயத்தில் என்னைக் காப்பாற்றி ஞளே என்று கொஞ்சம் சந்தோஷமாகவே இருந்தது.

"என்ன? கடைசியில் சாப்பாடு இல்லே. அந்தப் பெண் வேண்டாம் என்று சொல்லிவிட்டாயாமே துரை?" என்று அத்திம்பேர் கேலி செய்தார்.

"அவன் பார்த்து வைத்திருந்த பெண்ணை நீ வந்து வேண்டாம் என்று சொல்லிவிட்டாயாமே. பெரிய உபகார சிந்தாமணிதான்! பார் அவன் அழுவதை" என்று பட்டுவையும் கேலி செய்தார்.

கடைசியில் பட்டுவோடு நானும் ஊருக்குப் புறப்படுவது என்று நிச்சயமாகிவிட்டது.

அப்பாவுக்கு ஒன்றுமே பிடிக்கவில்லே. உம் என்று என்னவோபோல் உட்கார்ந்திருந்தார். பட்டுவுக்கு என்னவோபோல் ஆகிவிட்டது.

"இப்படி உட்கார்ந்திருக்கயே? அப்படி உனக்கு முடிக்கணும் என்று இருந்தால் முடிச்சுப்புடேன். நான் ஒன்றும் சொல்லவில்லே" என்ருள் அவரிடம்.

"இல்லே, அவனை அங்கே அழைச்சிண்டு போகிறேன் என்கிறேளே? அதைப்பற்றித்தான் யோசனை செய்கிறேன்" என்ருர் அப்பா.

"நீங்க ஒன்றும் கவலைப்படாதேங்கோன்னு; அவனை நான் பார்த்துக்கொள்ளுகிறேன். எவ்வளவோ பேருக்குச் செய்தாய்விட்டது. இதுதானு கவலே?" என்று சொல்லிக்கொண்டே சிரித்தார் அத்திம்பேர்.

எல்லாம் ஒரு முடிவுக்கு வந்து எனக்கும் வெளியூர் போகலாம் என்ற ஆசை இருந்தாலும் அப்பாவை நினைத்த போது கொஞ்சம் கவலையாகவே இருந்தது. அத்தை கூட இல்லே: யார் அவரை அவ்வளவு அக்கறையுடன் பார்த்துக் கொள்ளப்போகிருர்கள்?" என்ற கவலே பிடித்துக்கொண்டு விட்டது.

"அக்கா, அத்தைக்கு ஒரு கடிதாசு எழுதிப் போட்டு விட்டுப் புறப்படலாம். கட்டாயம் வந்துவிடுவாள் என்றேன்."

"போடா பைத்தியம்! இருப்பது போதாது. இன்னும் விலைக்கு வாங்கிக் கட்டிக்கச் சொல்லுகிறாயாக்கும்? புடுங்கல் இல்லாமே இருக்காளே அது உனக்குப் பொறுக்கலே. எல்லாம் ஆயிரம் ஊருக்கு மன்னி பார்த்துக் கொள்வாள்" என்று இதே மாதிரி எவ்வளவோ சொல்லி மன்னியையும் தாஜா செய்து வைத்தாள். சமயந்துக்குத் தகுந்தாப்போல் போகிறவள் பட்டுதான். வேண்டிய சாமான்களை வாங்கிப் பக்ஷணங்கள் செய்து குழந்தைகளுக்கு வைத்துவிட்டுத் தன் கையிலும் எடுத்துக் கொண்டாள்.

குழந்தைகளுக்கு எது இல்லையோ பார்த்துக் கண்டாறோ முண்டாறோ எல்லாம் வாங்கிப் போட்டாள். புறப்படுவதற்குள் மீனாக்ஷியும் வந்து சேர்ந்தாள்.

"மீனாக்ஷி! நீ இல்லாமல் இந்த வீடு என்ன சிரமப் பட்டது தெரியுமா? ஒருவராவது வயிறு நிறையச் சாப்பிட வில்லை. ஏதோ ஒரு பையனும், இரண்டு நாளைக்கு வந்து கூத்தடித்துவிட்டுப் போய்விட்டது. ஆயிரம் இருந்தாலும் நீ பழகினவளோன்னோ? எல்லாம் நீ செய்தால் தான் சரியாக இருக்கு. நீயும் இருந்து வீட்டில் மன்னியும் இருந்துவிட்டால் அப்பாவைப்பற்றிக் கவலைப்பட என்ன இருக்கு? எல்லாம் பாத்துக்கோ. உனக்கு ஒண்ணும் சொல்ல வேண்டாம்" என்று அவளையும் தட்டிக்கொடுத்தாள். கேட்க வேண்டுமா? உடனே மீனாக்ஷிக்கு · உச்சி குளிர்ந்துவிட்டது. ரெயிலுக்குத் தயிர் சாதம், சாம்பார் சாதம், ரொட்டி, புளிக்காய்ச்சல் எல்லாம் ஏக தடபுடலாகச் செய்துவிட்டாள்.

ரெயிலுக்குப் புறப்படும்போதுதான் எங்கள் எல்லோருக்கும் அப்பாவைப் பார்த்து என்னவோபோல் இருந்தது.

"ராமு, அப்பாவைப் பாத்துக்கோ. அடிக்கடி எழுது" என்றாள் பட்டு.

"ஆகட்டுமம்மா, நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே" என்றான் ராமு. இதை அவன் கூறியதே எனக்கு ஒரு பெரிய பலமாக இருந்தது.

"கடைசியில் இந்தப் பொண் குஞ்சுவைப்பற்றித்தான் ஒன்றும் தெரியவில்லே. எங்கேயோ ஊருக்குப் புறப் பட்டுப் போயிருந்துகளாமே? போய் அலேந்ததுதான் மிச்சம். எல்லாத்தையும் பாத்துக்கோ" என்று சொல்லி விட்டு வண்டி ஏறிஞள் அக்கா.

# 12

## கடையாணி

புறப்படுவதற்கு முன் நடராஜனையோ, ராமநாதனை யோ பார்க்கவில்லை.

"இப்படி ஒன்றும் சொல்லாமல் வந்துவிட்டோமே அக்கா! ஏதாவது நினைத்துக்கொள்ள மாட்டார்கள்?" என்றேன்.

"ஏண்டா இப்படிப் பைத்தியமாய் இருக்கே? அப்பா சொல்லிக்கொள்ள மாட்டாரா? இதுகூடவா உனக்குக் கவலை?" என்று அக்கா கூறியபோது, 'பைத்தியம்போல் இதைப் போய் ஏன் கேட்டோம்' என்று வெட்கமாக இருந்தது.

"ஆமாம், அப்பா ஏதோ வியாபாரம் ஆரம்பிக்கப் போவதாகச் சொன்னாரே, ஏதாவது ரொக்கம் வைத்திருக் கிறாரா?" என்றார் அத்திம்பேர்.

"அவருக்கும் எனக்கும் அவ்வளவு சமத்து இருந்து விட்டால் ஏன் இப்படி இருக்கோம்? இருப்பதையும் வாரி விட்டு விட்டு வாங்கியும் கட்டிக்கொள்ளும் ஜன்மங்கள்!" என்றாள் அக்கா.

இதைக் கேட்டதும் அத்திம்பேருடைய முகம் மாறியது. என்னை நிமிர்ந்து பார்த்துவிட்டு, "சமர்த்தாய்ச் சேர்த்துச் சேர்த்து வைத்தவர்கள் எல்லாம் என்ன கோட்டை கட்டிவிட்டார்கள்? எல்லாம் பிரமைதான்" என்றார்.

"ஆமாம்! இல்லாவிட்டால் இப்படித்தான். ஆகா சத்தைப் பாத்துண்டு நிப்பரா! நாளைக்குக் காரியா காரியம் வரப்போகச்சேன்னு தெரியப் போகிறது எல்லாம்! ஏண்டா சிமா, அவன் வந்தானோடா குஞ்சு

வாத்திலிருந்து? போதுக்குனு ரூபாயைத் தூக்கிக் குடுத் தூட்டு நிக்கருரே இவர்?" என்ருள் அக்கா.

"தெரியாதா உங்கப்பாவின் வேலே? அடித்துத் துரத்த வேண்டுமென்று அவ்வளவு அக்கறையுள்ளவன் இவ்வளவு நாள் பேசாமலா பார்த்துக்கொண்டிருப்பான்? என்றைக்கோ ஓசைப்படாமல் செய்திருக்கலாமே. யோசனை இல்லாமல் எடுத்துக் கொடுத்திருக்கிருர் இவர். இனிமேல் அவன் நம் கண்ணில் அகப்படப் போகிருனு? நயாதான். அதைப்பற்றிச் சந்தேகம் வேறுமா?" என்று சிரித்தார் அத்திம்பேர். வீட்டில் ஒரு விஷயத் தையும் வாய்விட்டுப் பேச முடியவில்லை. குஞ்சுவின் விஷயம், அத்தை, சித்தி இவர்களைப்பற்றிச் சிறிது நேரம் எல்லாம் பேசினேம்.

"ஏன்? சித்தியை வேணுமானுல் இங்கேயே கொண்டு வந்து வைத்துக்கொண்டுவிடுகிறதுதானே? பிறகு இப்படி யெல்லாம் பேசமாட்டாள். அதுக்குத்தான் அடிபோடு கிருளோ என்னமோ?" என்ருர் அத்திம்பேர் எல்லா வற்றையும் கேட்டுவிட்டு.

"குசாலாய் வந்து இருக்கட்டுமே. யார் வேண்டாம் என்றது? முதலில் சித்தப்பா வந்து எல்லாரோடும் இருந்துவிடுவாரா? அந்த முசுட்டுத்தனத்துக்கு, சித்தி எங்கேயும் கால் எடுத்து வைக்க முடியாது" என்ருள் அக்கா.

"அதெல்லாம் சரி, ராமு என்னடா இன்னும் இப் படி இருக்கான்?" என்ருர் அத்திம்பேர்.

"இப்படி இருக்கான் என்ருல்? எப்படி இருக்கான்? நீங்கள் கேட்பது புரியவில்லையே" என்றேன்.

"அவன் பேசுவதைக் கேட்டால் வேடிக்கையாத் தாண்டா இருக்கு. பிரமாதமாகப் பேசருன். இந்த ஊரிலா? என்னைப்போல் யார் இருக்கிருர்கள்? இந்த மூன்று மாதங்களுக்குள் அவ்வளவு வரும்படி வந்திருக் கிறது. இன்னும் அது வரணும், இது வரணும் என்று பெருமை தாங்கவில்லை. எல்லாவற்றையும் முடித்துவிட்டுக் கடைசியில், 'எவ்வளவு வந்தால்

என்ன அத்திம்பேரே? எல்லாம் சரியாகத்தான் இருக்கு. பாருங்கோ, இப்ப கையில் ஒரு தம்பிடி இல்லே' என்று நம்ம பையில் கையைப் போடுகிருனே? எத்தனை நாளைக்குத்தான் இப்படி இருக்கப் போகிருன் இவன்? ஏதாவது வரும்படி வருகிறதா இல்லையா? எல்லாம் மூட்டை தானு?'' என்ருர் அவர். இதைக் கேட்டதும் பட்டு சிரித்துவிட்டாள்.

''இவ்வளவு நாள் பழகியும் இன்னும் அவனைத் தெரிந்துகொள்ளவில்லையா நீங்கள்? அந்தச் சாமர்த்தியத்துக்கு நீங்கள் எல்லாம் திருடப் போக வேண்டியதுதான். இதுவரையில் அவன் வாங்கிக்கொண்டதும் செய்து கொண்டதும் கணக்கு வழக்கு உண்டா? வரும்படி வருகிறது என்று பெருமையாகச் சொல்லிக்கொண்டுவிட்டான். ஏதாவது பத்து ரூபாய் கொடு என்று நீங்கள் கேட்டுவிட்டால்? ஐந்து ரூபாய் வெறுமானல் அப்புறம் உங்களைக் கேட்க முடியுமா?'' என்று சொல்லிக்கொண்டே இன்னும் சிரித்தாள்.

எனக்கு, சிரிப்பதா? பேசாமல் இருப்பதா? என்று சந்தேகமாகப் போய்விட்டது. ஏதோ சொல்ல வாயெடுத்தேன். அதற்குள், ''உன் தம்பி சமாச்சாரம் உனக்குத்தானே தெரியும். நான் கண்டேனு அதையெல்லாம்? கடைசியில் என் பையிலிருந்த இருபத்தைந்து ரூபாய் போச்சு. அவ்வளவுதான் எனக்குத் தெரியும்''. என்ருர் அத்திம்பேர்.

''என்னிக்கிக் கொடுத்தேள்? நேத்திக்கா?'' என்ருள் அக்கா மிகவும் ஆவலுடன்.

''எல்லாம் நேத்திக்கித்தான். இல்லாவிட்டால் விடுகிருனு அவன்? கக்கூஸுக்குப் போனுல்கூடத் 'தொணதொணவென்று வந்துகொண்டே இருக்கிருனே பின்னுல்'' என்ருர் அவர்.

''இப்போன்னு எனக்கு எல்லாம் புரிகிறது! என்ன நடந்தது தெரியுமா நேத்திக்கி?'' என்று வியப்போடு அக்கா கேட்டபோது என்ன சொல்லிவிட்ப் போகிருளோ என்று எனக்குக் கொஞ்சம் பயமாக இருந்தது. ஒழுங்

காக நடந்துகொண்டால் ஏன் இப்படியெல்லாம் சொல்லப் போகிறார்கள்? இந்த ராமுவுக்குக் கொஞ்சங்கூட யோசனையே இல்லை. மதிப்பைத் தானாகக் கெடுத்துக் கொள்கிறான்.

“நேத்திக்கி என்ன நடந்தது என்கிறேள்? அந்தக் குழந்தை சபி இருக்கோ இல்லையோ? அதுக்கு இன்னும் நகையா நட்டா ஒன்னும் பண்ணிப் போடல்லே. அப்பா பண்ணிப் போடுறான்னு பார்க்க அவாளும் குழந்தையை ஒரு துரும்பு பண்ணிப் போடாமே அனுப்பியிருக்கா. அவர்களுடைய நெஞ்சு அழுத்தம்னா அழுத்தம்? அப்பாவுக்குந்தான் ஒன்னுமே கண்ணில் படற தில்லையா? அவரும் பார்க்கலைப்போல் இருக்கு. ராஜம் இதையெல்லாம்பற்றி என்னிடம் ஒரு ராமாயணம் படித்துக் கொட்டினாள். நம்மாத்துச் சமாசாரந்தான் தெரியுமே உங்களுக்கு? நம்பாத்துக்கு முதல் பேத்தி; ஒரு தங்கக் காசு அடிச்சுப் போடாவிட்டால் யார்தான் என்ன சொல்ல மாட்டா? அவள் பாட்டில் அடுக்கறா” என்று சொல்லிக்கொண்டு வரும்போது, “இந்தப் பழங் கதை எல்லாம் எதுக்கு அக்கா? கேட்டுக் காது கொப்பளித்துப் போய்விட்டதே? நடந்த சமாசாரத்தைச் சொல்லு. ராமுவைப் பத்தின்னு ஆரம்பிச்சே” என்றேன். இப்போது இல்லாவிட்டால் மறைவில் சொல்ல மாட்டாளா என்றாலும் இதெல்லாம் அத்திம்பேரிடம் எதற்கு? அவசியம் தெரிந்தாக வேண்டிய விஷயமா? என்று கொஞ்சமும் பிடிக்கவில்லை.

“பிழை இல்லாமல் சொல்லுவார்களாடா யாராவது? பொம்மனாட்டிகளுக்கு இதுதானே வேலை? கொஞ்சம் ஏதாவது அகப்பட்டால் அதைக் காது மூக்கு எல்லாம் வைத்து எவ்வளவு அழகாக்கிவிடுவார்கள் தெரியுமா? அதுவும் உங்கக்காவுக்கா கேட்க வேண்டும்? உங்க ஆத்திலேயே இப்படித்தான் எதையாவது கொட்டிக் கொட்டி அளப்பது வழக்கமாகி விட்டது. பெரிய குடும்பம் என்றால் எல்லா விதமுந்தான் இருக்கும்” என்றார் அத்திம்பேர்.

அக்காவுக்குக் கோபம் வந்துவிட்டது.

"ஏதோ ஒன்று சொல்ல வந்தால் இப்படி எதற்கு வழக்கத்தையும் வீட்டையும் பிடித்து இழுக்கறேள்? இந்த வீட்டைப்பத்திச் சொன்னுலே உங்களுக்குப் பிடிக்கறதில்லே. அதுதானே நானும் ஒன்றும் சொல்லுவதில்லை என்று வைத்திருக்கேன்? ஏதோ நீங்கதான் ஆரம்பிச்சேள். 'மொட்டைத் தாதனைத் திருப்பதியில் கண்டயோ'ங்கருப்பலே எப்படிச் சொல்லறதாம், ஒன்றும் இல்லாமே? வாண்டாமே! நானும் ஒன்றும் சொல்லலே. அவ்வளவுதானே?" என்று கோபித்துக் கொண்டாள்.

அத்திம்பேருக்கும் என்ன நடந்தது என்று தெரிந்து கொள்ள ஆவலாக இருந்தது. அக்காவைச் சமாதானப் படுத்தினுல்தானே பேச்சு மேலே ஓடும்? அதற்குக் கொஞ்சம் நாழிகை ஆகிவிட்டது. அதற்குள் வண்டி ஒரு ஜங்ஷனில் வந்து நின்றது. அத்திம்பேருக்குத் தெரிந்தவர்களாம் யாரோ? அவர்கள் சாப்பாடு, பலகாரம் எல்லாவற்றையும் தூக்கிக்கொண்டு வந்து சேர்ந்தார்கள்.

"கொண்டுவரச் சொல்லி ஒருவருக்கும் தகவல் அனுப்பவில்லையே? நான் இந்த வண்டியில் வருகிறேன் என்று எப்படித் தெரியும் உங்களுக்கு? எல்லாம் அங்கேயே செய்து தயாராக எடுத்துக்கொண்டு வந்துவிட்டோம். எதற்காக உங்களுக்கு வீண் சிரமம்!" என்று உபசார வார்த்தை சொன்னுர் அத்திம்பேர்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லேன்னு! உங்களுக்காக இப்போ என்ன செய்தூடணும்? ஏதோ முடிஞ்சதைக் கொண்டுவந்திருக்கிரும். நேத்திக்கி நாகராஜன் செய்தி அனுப்பினுர். பாத்திரம் பண்டத்தைப்பத்தி நீங்க ஒன்றும் கவலைப்பட வேண்டாம்னு! அங்கேயே ஆள் வருவா; கொடுத்தூடுங்கோ" என்று சொல்லிக்கொண்டே அவர்கள் காபி, பலகாரம், சாப்பாடு எல்லாவற்றையும் வண்டிக்குள் எடுத்து வந்து வைத்துவிட்டுப் போனுர்கள். அத்திம்பேர் அவர்களுடன் பேசிக்கொண்டிருந்தார். நான் கீழே இறங்கி வேடிக்கை பார்த்துவிட்டு வண்டி புறப்படுவதற்கு முன் வந்து ஏறிக்கொண்டேன்.

வண்டி புறப்பட்டதும் சோற்று மூட்டையை அவிழ்த்தாள் அக்கா. நாங்கள் எடுத்து வந்தது, அவர்கள் எடுத்து வந்தது எல்லாம் சேர்ந்து ஏக தினுசு சாப்பாடாகிவிட்டது. குழந்தைகள் அம்சியை அடக்கிவிட்டு வெற்றிலே பாக்கை எதிரில் வைத்துக்கொண்டு உட்கார்ந்தாள் அக்கா.

"நன்னு மூக்கைப் பிடிக்கச் சாப்பாடு கிடைத்தது. மேலே என்ன? எதாவது வம்படிக்க வேண்டியது தானே?" என்றார் அத்திம்பேர்.

"வம்பு யார்தான் பேசலே? இப்படி எதையாவது சொல்லிண்டு இருந்தேளானுல் நான் பேசவே இல்லே" என்றாள் அக்கா.

"நான் ஒன்னுமே பேசலே. என்ன நடந்தது மேலே? சொல்லு" என்றார் அத்திம்பேர்.

இதற்குள் குழந்தைகள் ஒன்றுக்கொன்று வேடிக்கையாகப் பேசிக்கொண் டிருப்பதைப் பார்த்து எல்லாரும் கொஞ்ச நேரம் சிரித்தோம்.

'குழந்தைகள் முகத்தில் எதுவும் மறக்கும்' என்பது போல் இந்தச் சிரிப்பில் அக்காவின் கோபம் எங்கேயோ பறந்து போய்விட்டது.

"அதற்கு மேலேன்ன சொல்லணும்? சரி, நாம்தான் வந்திருக்கோம். அத்தையும் எதாவது செய்ய வேணும் என்று சொல்லுவாளா? இதுவரையிலுந்தான் ஒன்னும் அனுப்பவில்லே. நல்லதாக ஒரு சங்கிலி செய்து போட வேண்டும் என்று நினைத்துக்கொண்டேன். ராமுவும் நானும் பேசிக்கொண் டிருந்தோம். 'ஏது? அவனுக்கும் இவ்வளவு சமத்து வந்துவிட்டதே' என்று எனக்கே ஆச்சரியமாக இருந்தது. எப்படியோ, அதைக் குறைத்து இதைக் குறைத்துச் சேர்த்து வைத்திருந்தானும். 'இந்தா இதையும் சேர்த்துக்கொள், நானும் பண்ணினுப்பலே இருக்குமோன்னே?' என்று இருபத்தைந்து ரூபாயை என்னிடம் கொடுத்தான். அதற்கு மேல் பிரமாதமாக ஒரு நாழிப் பிரசங்கம். கடைசியில் இதுவும் உங்களிடமிருந்து வாங்கினதுதானு? இப்போன்னு வள்ளல்

எல்லாம் வெளியில் வருகிறது? 'பிறந்தாத்துப் பெருமையை ஓடப்பிறந்தாளோடு பீத்திக்கொண்டாளாம்' என்று அத்தை சொல்லுவாளே? அதுதான். நன்னு இருக்கோன்னு காரியம்?'' என்று சிரித்தாள் அக்கா.

"ஏமாந்து போனயா? நன்னு வேணும் உனக்கு! நான் சொல்லவந்தால் என்னுடன் சண்டைக்கு வருவாய்? இப்போ! யாரைச் சொல்வது? கொடுப்பதையும் கொடுத்துவிட்டு இளிச்சவாய்ப் பட்டத்தையும் வாங்கிக் கட்டிக்கொள் வாங்கிக்கோ, வாங்கிக்கோ'' என்று சிரித்தார் அத்திம்பேர்.

"அப்படி இருக்கு நம்மாத்துச் சமாசாரம். யாரை என்னத்தைச் சொல்லறது? அந்தப் பொண் பாபு ஒரு கடிதாசு போடப்படாதோ? மூணு மாசமாய் ஒன்றும் சரியாக் கடிதாசியே வரல்லையாம். அதுக்கு ஒக்காந்து கவலைப்படுகிறார் அவர். எதைத்தான் சொல்லறது!'' என்றாள் அக்கா.

இத்துடன் இந்தப் பேச்சு முடிய வேண்டுமே என்று வேண்டிக்கொண்டிருந்தேன்.

நல்ல வேளையாக அத்திம்பேரும் பேச்சை மாற்றினார்.

"ஆமாம், எல்லாத்தையும் விட்டு இந்தக் கல்யாணத்தை நிறுத்திய பழியை நீ வாங்கிக் கட்டிக் கொண்டது எனக்குக் கட்டோடு பிடிக்கல்லே. எதையோ அவர் பண்ணிக்கொண்டு போறார். உனக்கென்ன?'' என்றார்.

என் கல்யாணத்தில் இவளுக்குப் பாத்தியம் இல்லாததுபோல் அத்திம்பேர் பேசியது எனக்குப் பிடிக்கவில்லை.

"அக்கா என்ன செய்துவிட்டாள் அத்திம்பேரே? என்னமோ பிரமாதமாகப் பழி, கிழி என்று பேசறேளே?'' என்றேன். இதில் என்ன தப்பு என்பதும் எனக்குத் தெரியவில்லை.

"நான் ஒன்றும் சொல்லிவிட வில்லையடா உங்க அக்காவை! அதற்குள் பரிஞ்சுண்டு வந்துவிடாதே. காரணம் என்ன என்பதைத்தான் கேட்டேன்'' என்றார்.

"காரணம் இல்லாமலா சொல்லுவேன், ஒரு பொம்மனாட்டி? 'கொக்குக்கு ஒன்னே மதி' என்று உங்களுக்கெல்லாம் இந்தச் சம்பந்தத்தில் ஒரே மோகம்.

"ஒரு கல்யாணம் என்றால் நாலு விதத்தையும் யோசனை செய்து பார்க்க வேண்டாமா? பணம் ஒன்று தானா பிரதானம் மனுஷ்யாளுக்கு?'' என்று அக்கா முடிப்பதற்குள், "ஏன், மனுஷாளுக்கு மாத்திரம் என்னவாம்? சிபா பழகியதைவிடவா உனக்கும் எனக்கும் தெரிஞ்சுடப் போறது? என்னிடம் சொன்னேனே. நீயே அவனைக் கேட்டுப் பார், வேணுமானால்'' என்றார் அத்திம்பேர்.

"சரிதான்னா, நீங்க பாட்டில் எதையோ சொல்லிக் கொண்டே இருக்கேளே? நடராஜன் மருமாள் பெரிசைக் கொடுத்திருக்கே, நம்ம சுப்புவாம்; தெரியுமோ இல்லையோ உங்களுக்கு?''

"தெரியும். பூனாவில் இருக்கிறான் பிள்ளை. அதற்கென்ன இப்போ?''

"அதுக்கு ஒன்றுமில்லே. போன தடவை சுப்பு டில்லிக்கு வந்தபோது எவ்வளவு கதை சொன்னா, தெரியுமா? இனத்துத் தப்பனமாதிரி நாம்பாட்டிலே எதையோ நெனைச்சுண்டிருந்தா?''

"என்ன சொன்னா? அவள் வந்தூட்டுப் போய் ஒரு வருஷம் ஆகப் போறதே கிட்டத்தட்ட? இது வரையில் நீ ஒன்னும் சொல்லக் காணம். இப்போ என்னமோ நிதானமாக நெனைச்சுக்கறயே.''

"ஊரில் எத்தனையோ ஆயிரம் சமாசாரம். ஒவ்வொன்னையும் பத்தியேவா நெனைச்சிண்டிருக்கா? இப்போ இங்கே வந்தவுடன் கல்யாணப் பேச்சு நடந்துண்டிருக்கவே எனக்கும் அது நினைவு வந்தது. நம்ம குழந்தைகள் நாளைக்குச் சந்தோஷமாக இருக்க வேண்

டாயா? பிடுங்கல் படுவதற்கா ஒரு கல்யாணம் செய்து வைப்பது? நீங்களே சொல்லுங்கோ.

"சுப்புவின் பிள்ளை நன்றுப் படிச்சிருக்கான். டாக்டர் பரிக்ஷை இங்கே பாஸ் செய்துவிட்டுச் சீமைக்குப் போயிட்டு வந்தான். சுப்பு கொஞ்சம் உள்ளவள். என்றாலும் இதெல்லாம் அதிகப்படிச் செலவு இல்லையா? எல்லாம் நடராஜன்தான் கொடுத்தானும். சிமாவுக்குக் கூட எல்லாம் தெரிஞ்சிருக்குமே?" என்று சொல்லிக் கொண்டே என்னைப் பார்த்தாள்.

"கல்யாணச் செலவோ, பிள்ளைக்குப் படிக்கவோ எல்லாம் நடராஜன் கொடுத்தான் என்பது தெரியுமே ஒழிய மத்தப்படி இதை எல்லாம்பத்தி எனக்கு ஒன்றும் தெரியாது. அவனையும் இதெல்லாம் நான் கேட்கும் வழக்கம் இல்லை, அக்கா!" என்றேன்.

"இவ்வளவுதானு உங்க சமாசாரம்? எல்லாம் தெரிஞ்சுகொண்டுதான் அப்பாவுக்காகப் பேசாமல் இருக்கே என்று நெனைச்சேன் நான். கேள், கதையை. பிள்ளைகளுக்குக் கல்யாணம் செய்தால் அவனையும் வீட்டையும் பார்த்துக்கொள்வதற்கு ஒரு பெண் வரும் என்று தானே செய்கிறோம்? கேட்டுக்கொள்: சுப்புவுக்கு இரண்டே பிள்ளைதான்; பெண் இல்லை. இதுகளுக்குக் கல்யாணமாகிச் சீக்கிரம் வீட்டில் குலுகுலு என்று நாட்டுப் பெண்களும், குழந்தையும், குஞ்சுமாய் நடமாடவேணும் என்பதுதான் அவள் ஆசை. பெரியவனுக்குப் படிப்பு முடிவதற்குள் அவசரமாய் நல்ல வரனும் வருகிறதே; விடுவானேன் என்று பண்ணிவிட்டாள். கல்யாணம் ஆனதும் அந்தப் பிள்ளையைப்பத்திக் கவலை அவளுக்கு இல்லை என்று வைத்துக்கொள். நாட்டுப்பெண்ணை வீட்டுக்கு அழைத்தாள்; வேண்டியது செய்தாள். . திருசு திருசாப் புடவையும் வேளைக்கு ஓர் இடம் அழைத்துக் கொண்டு போவதுமாகத் தங்கமாய்த்தான் வைத்துக் கொண்டிருந்தாள். நடராஜன் தமக்கையும் வேண்டியது செய்தாள். கடைசியிலே ஏதாவது ஓர் சாக்குச்சொல் விண்டு பொண்ணையே புக்காத்துக்கு அனுப்பமாட்டேங்

கருளாமே! காலத்திலே சிறிசுகள் வீட்டில் வந்து இருந்தாத்தானே எல்லாருக்கும் சந்தோஷமாய் இருக்கும்? அந்தப் புள்ளே என்ன பண்ணும். பாவம்! அங்கே வெட்டாத்தில் போய் உக்காந்துக்க ஆரம்பிச்சுடுத்து. இவனுக்கு இந்த ரெண்டு பிள்ளையைத் தவிர வேறு யார் இருக்கா? சுப்புவுக்குப் பிள்ளை கொஞ்சம் கௌரவமாக இருக்கவேணும் என்பது. கண்டிச்சாள் போல் இருக்கிறது. பொண்ணைக் கொண்டுவந்து விடும்படி ரெண்டு கடுதாசி போட்டாளாம். பொண்ணுக்கு உடம்பு சரியாக இல்லே என்று அவர்கள் எழுதிருப்பிலே இருக்கு. இப்படியாகச் சம்பந்தியம்மா பொல்லாதவள் என்று பெயர் வைத்துவிட்டார்கள். முடிவிலே பார்க்கப்போனால் ஒரே சண்டை, பூசல்! 'நான்தானே படிக்க வச்சேன். சீமைக்குப் போவதற்கு நான்தானே பணம் கொடுத்தேன்? நன்னி இடையாது' என்று பேச்சு வார்த்தை. பலன் என்னடா என்றால் 'கல்யாணம் செய்தும் பிரம்மசாரி' என்கிற கதையா அந்தப் பிள்ளைக்கும் சுகம் இல்லே. பெண்டாட்டியும் விட்டுக்கு வறதே இல்லே. வந்தால் எப்போது பார்த்தாலும் நோவு, நொடி. சரியாகப் பார்க்கல்லே. போகல்லே என்று ஒரே தகராறு. பணம் இருக்கும் பெருமை, மூச்சுக்கு முப்பது தடவை ஓடி வறதும், அந்தப் பெண் ஒரு வழியாக இருந்தாலும் அதையும் சொல்லிக் கொடுத்துக் கெடுக்கறதும்; கடைசியில் எல்லாம் அந்தப் பிள்ளை தலையில் வந்து விடிந்தது. அம்மாவைத்தான் அவனால் அடக்க முடிந்தது. பெரிய இடத்தில் போய்ப் பூந்துகொண்டு என்ன சுகம், சொல்லு? நம்ம பெண்ணை வேணுமானால் நல்ல இடத்தல் கொடுத்துவிட்டு அதற்காகச் சிறுமைப்படலாம். ஆனால் பெண்ணை வாங்கிக் கொண்டு சந்நியில் நிற்கக்கூடாது. நடராஜனுக்கு உள்ளூற விஷயம் என்ன தெரிந்திருக்கப் போகிறது. பாவம்! ஏதோ தயக்கை சொன்னால் சம்பந்தியம்மாள் பொல்லாதவள் என்று நெனைச்சின்டிருக்கப் போறான். எந்த இடத்தில் கொடுத்தாலும் இதேதானே வரப் போறது? நாளைக்குக் கல்யாணத்தைப் பண்ணிண்டு சிமா அங்கேயே போய் உட்கார்ந்துகொண்டிருந்தால் நாம்மட்டும் போமே இருந்துடுவமா? அவனுக்கும் சுகமில்லே; நமக்

கும் சுகமில்லே. என்ன பிரயோஜனம் சொல்லுங்கோ?" என்று முடித்தாள் அக்கா.

'அப்பாடா! இவ்வளவு இருக்கிறதா இங்கே!' என்று நான் நினைத்துக்கொண்டேன்.

"இதில் என்ன தப்பு இருக்கிறது பிரமாதம்? ஜம்மூனு அவனும் அங்கேயே போய் இருந்துடறுன். அதோடு எல்லாக் கவலேயும் ஒழிந்ததோன்னே?" என்ருர் அத்திம்பேர், மறுபடியும் விடாமல்.

"வயசு காலத்தில் அவரை விட்டுவிட்டு இவனும் அங்கே போய் உட்கார்ந்துவிட்டால் வேறு என்ன வேணும்? ஒரு கவலே விட்டது. உங்களுக்கென்ன? வாயாலே சொல்லுவது சுலபந்தான். படப்போகிறவர் நீங்களா என்ன?" என்ருள் அக்கா.

"படுவது என்ன? நல்ல பிறந்தகம் ஒன்று இருக்க வேண்டியது அவசியந்தான். ஒரு நாளேக்கு வா என்று அழைப்பதற்கு விதி இல்லாமே நீங்கள் எல்லாம் இருக்கேள் பார்! எதுக்கானுலும் எங்க பிராணன்தான் போறது. ஆசைக்கு ஒரு துணிக்கிக்கூட விதி இல்லே! உங்களுக்கும் செய்துவிட்டு உங்க மனுஷாளேயும் தாங்கணும். ஏன்னு எங்களுக்கு விதி பார்! இதில் வாயைத் திறந்து ஒரு வார்த்தை சொல்லிவிடக்கூடாது. மூணுக் என்பதற்குள் ரூபாயைக் கக்கணும்! உங்களேக் கட்டிண்டு இப்படி அழவேண்டியது எங்கள் தலேயில் எழுத்து என்ருல் அவனுக்கும் அதேபோல் வரணுங்கறயா?"

'எங்களேப் போலவேயா அவனும் திண்டாடணும்?' என்று அத்திம்பேர் கூறியவுடன் அக்காவுக்கும் எனக்கும் சப்பென்று போய்விட்டது.

உண்மைதான் என்ருலும் நம் வீட்டைப்பற்றி அவருக்கு இவ்வளவு கேவலமான அபிப்பிராயம் இருக்கும் என்று நான் எண்ணவில்லே. 'கஷ்டமோ சுகமோ, நாம் இருக்கும் இடத்தில் மரியாதையாக இராமல் இந்த இடத்துக்கெல்லாம் ஏன் வந்தோம்?' என்று வருத்தமாக இருந்தது.

தங்கம் கூறியது போல் தாயார் இல்லாவிட்டால் பிறந்தகத்தில் என்ன சுகம்? இதைத் தெரிந்துகொண்டு தானே இதுகளும் வரமாட்டேன் என்கிறதுகள்?' என்று நினைத்தபோது இன்னும் வேதனையாக இருந்தது. கடையாணி ஒன்று இல்லாவிட்டால் வண்டிக்கு என்ன பலன்?



டில்லிக்கு வந்ததும் அத்திம்பேர் எனக்கு வேண்டியது செய்தார். நிறையத் துணிகள்கூடத் தைத்துக்கொடுத்தார். நம் ஊரில் பொழுது போக்குவது போல் அலக்ஷ்யமாக அவ்விடம் பொழுது போக்க முடியவில்லை. ஸூட்டும், பூட்டும், டையும் கட்டிக்கொண்டு வெளிக்கிளம்பாவிட்டால் அத்திம்பேருக்குக் கௌரவக் குறைவுபோல் இருந்தது. இதையெல்லாம் வழக்கமில்லாமல் ஒரு நாள் செய்துகொண்டு கண்ணாடியில் பார்த்துக்கொண்டபோது எனக்கே வேடிக்கையாக இருந்தது.

இவ்வளவு வாடகையைக் கொட்டியும் அக்காவின் வீடு சாதாரணமாக இருந்தது. காலை மணி ஒன்பது அடித்தால் ஊரே கப்சிப் என்று ஆகிவிடும். வீட்டில் அக்காவும் நானுந்தான். இப்படிக் கொட்டுக் கொட்டென்று எவ்வளவு நாள் உட்கார்ந்துகொண்டிருப்பது? அத்திம்பேருக்கும் அவ்வளவு தைரியம் இல்லாவிட்டால் என்னைக் கையோடு அழைத்துக்கொண்டு வந்திருப்பாரா? இரண்டு நாளைக்கெல்லாம் ஆபீசுக்குப் புறப்படுவதற்கு முன்பு, "சீமா, நீயும் வா என்னுடன்" என்றார். சாப்பிட்டுவிட்டு அவருடன் கிளம்பினேன். 'ஒன்றுமே முன்பின் பிரஸ்தாபிக்கவில்லையே? என்ன செய்யப்போகிறாரோ என்னவோ?' என்று யோசனைதான் எனக்கு. அவரைக் கேட்பதற்கும் தைரியம் வரவில்லை.

அத்திம்பேர் மூன்று மாடிகள் கொண்ட ஒரு பெரிய இடத்துக்கு என்னை அழைத்துக்கொண்டு போனார். மூன்றாம் மாடியில் உட்கார்ந்திருந்தவரைப் பார்த்தால் மிகவும் தகுந்த மனிதர் என்று தோன்றியது.

அத்திம்பேரைக் கண்டவுடன் அவர் எழுந்து கைகுலுக்கி அழைத்துச் சென்று எங்கள் இருவரையும் சோபாவில் உட்கார வைத்தார்.

"உடனே வந்துவிட்டேளா என்ன ஊரிலிருந்து?" என்றார் அத்திம்பேரைப் பார்த்து.

"ஒரு வாரத்துக்குத்தானே போனேன். உங்களுக்கு ஒரு சரியான பையனைக் கொண்டுவந்திருக்கிறேன். எப்படி?" என்றார் அத்திம்பேர் சிரித்துக்கொண்டே.

"பார்த்தவுடனேயே தெரிந்துகொண்டு விட்டேன். யார்? உங்களுக்குச் சொந்தமா?" என்றார் அவர்.

"சொந்தம் என்று சொன்னால் போதாது. சாக்ஷாத் மச்சினன்! தெரியுமா?" என்று சொல்லிவிட்டுக் கட கடவென்று சிரித்தார் அத்திம்பேர்.

அவர் தோள்பட்டையை ஒரு தடவை குலுக்கிக் கொண்டே, "மச்சினன் என்றால்தானே ரொம்ப ஜாக்கிரதையாக இருக்கணும்? கொஞ்சம் ஏதாவது அலக்ஷ்யமாக இருந்தால் நம்ம பாடுன்னு லாட்டரியாகி விடுகிறது! என்ன சொல்றேள் நீங்க?" என்றார் அவர்.

"போங்கோ ஸார். ஒரு தொல்லை இல்லை. ஜம்மென்று உட்கார்ந்துண்டு என்னமோ பிரமாதமாகப் பேசறேள்! உங்களைப்போல் இருந்தால் நான் எப்படி இருப்பேன் தெரியுமா? அதெல்லாம் போகட்டும். இவனைப் போட்டு வைத்துக்கொள்ளுங்கள் உங்களிடம். பிறகு பார்த்துக்கொள்வோம். என்ன?" என்றார் அத்திம்பேர்.

"பார்ப்பது என்ன? விட்டுவிட்டுப் போங்கோ இங்கே; கவலைப்பட வேண்டாம். எல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றார் அவர்; என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்துகொண்டே.

'இவ்வளவு நல்லவராக இருக்கிறாரே இவர்' என்று சந்தோஷமாக இருந்தது எனக்கு.

"உங்களிடம் கொண்டுவந்து ஒப்பித்துவிட்டேன். இனிமேல் எனக்கு என்ன கவலை? எல்லாம் உங்க பாடு.

அப்படியானல் போய்விட்டு வரட்டுமா நான்? என்ன ஒமா? இரு இங்கேயே; மாலையில் வந்து அழைச்சுண்டு போறேன்'' என்ருர் அத்திம்பேர்.

''ரொம்ப சந்தோஷம். போய்விட்டு வாருங்கள். எனக்கும் வேலை இருக்கு'' என்ருர் அந்த ஆசாமி. நான் தலையை அசைத்ததும் அத்திம்பேர் எழுந்து போய் விட்டார்.

அத்திம்பேரை அனுப்பிவிட்டு அந்த மனிதர் உள்ளே வந்தார். அவர் நல்ல உயரமும் பருமனுமாகச் செக்கச் செவேலென்று வெள்ளைக்காரரைப்போல் இருந்தார். முதலில் நானும் அவரை வெள்ளைக்காரரோ என்றுதான் சந்தேகப்பட்டேன். அவரிடம் வேலை செய்ய வேண்டுமே என்று நினைத்துக்கொள்வதற்குள் சற்று வெறுப்பாகவும் இருந்தது. ஆனல் அவர் பேச ஆரம்பித்த வுடன் நம்மைப்போல் நன்ருகத் தமிழ் பேசியதும் எனக்கு மிகவும் சந்தோஷம் உண்டாகிவிட்டது. எவ்வளவு இருந்தாலும் நம்ம மனிதர்கள் என்று தெரிந்து கொண்டு அவர்களுடன் பழகுவதில் எவ்வளவு சந்தோஷம் இருக்கிறதென்பதை அப்போதுதான் உணர்ந்தேன். நல்ல உயர்ந்த உடைகள் அணிந்துகொண் டிருந்தார். அவர் இருந்த இடத்தைப் பார்த்தால் அது தான் அவருடைய வீடு என்பது தெரிந்தது. கொஞ்சம் சந்தேகம் எதனுல் தோன்றியது என்ருல் வீடென்ருல் ஏதாவது ஒரு சத்தம் இருக்காதா? அவ்வளவு நிசப்தமாய் இருந்தது. மூன்று மாடிகளுக்குமேல் இருந்ததால் நாங்கள் இருந்த இடத்தில் நல்ல வெளிச்சத்துடன் காற்றும் இருந் தது. தகுந்த அந்தஸ்தில் இருப்பவர் என்ருல் வாயில் புகைச்சுருட்டும் நாற்றமும் அவர் இருப்பிடத்தை ஒரு மைல் தூரத்திலிருந்தே அறிவிக்கும். இவரிடம் அதெல்லாங்கூட ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. 'அத்திம்பேரிடம் இருக்கும் இந்த வழக்கங்கூட இவரிடம் இல்லையே?' என்று நினைத்துக்கொண்டபோது எனக்கே மிகவும் திருப்தியாக இருந்தது. அத்திம்பேர் வந்து உட்கார்ந்தாரானல் அந்தச் சுருட்டுப் புகை என்னை வந்து சூழும். அது என் வயிற்றைக் கலக்கிவிடுவதோடு

எங்கேயாவது எழுந்து போய்விடவேண்டும் என்று தான் தோன்றும். 'எவ்வளவு பொறுத்துக்கொண்டாலுங்கூட முடியவில்லையே? இதை மனிதர்கள் எப்படித், தான் விரும்புகிறார்களோ?' என்று எனக்கே விந்தையாக இருக்கும். அங்கே ஒன்றும் சொல்ல முடியாது. 'வந்த இடத்திலாவது இல்லாமல இருக்கிறதே! நான் செய்த புண்ணியம்' என்று பரம திருப்தியாக இருந்தது. அவரைப் பார்த்தபோதே என்னை அறியாத ஒரு மதிப்பு அவரிடம் உண்டாகிவிட்டது. அவரைக் கண்டதும் எழுந்து நின்றேன்.

"உட்கார், உட்கார், உன் பெயரைத் தெரிந்து கொள்ளலாமா நான்?" என்றார் அவர்.

'ஸ்ரீநிவாஸன்" என்றேன்; உட்கார்ந்துகொண்டே.

"எதுவரையில் படித்திருக்கிறாய்?"

"இன்டர் படித்துக்கொண் டிருந்தேன்" என்றேன். அதை முடிக்கவில்லை என்று கூறுவதற்கு வெட்கமாக இருந்தது.

"உம்; டைப் அடிக்கத் தெரியுமா?"

"தெரியாது. கற்றுக்கொண்டுவிடுகிறேன்."

"அப்படிச் சொல்லு. அதல்லவா பையன்களுக்கு அழகு! எங்கே, இந்தத் துண்டுக் காகிதத்தில் எழுது பார்க்கலாம். எழுத்து எப்படி இருக்கிறது, பார்க்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே ஒரு காகிதத்தை நீட்டினார். அதில் நான் என் பெயரை எழுதினேன்.

"வெல்" என்று சொல்லிவிட்டு எழுந்தார். சேவகனைக் கூப்பிட்டு, "இவரை அழைத்துக்கொண்டுபோய் ஆபீசில் விடு" என்று சொல்லிவிட்டு, "என்ன; ஸ்ரீநிவாஸன், போய் ஆபீசில் இரு. நான் இன்னும் ஒரு மணி கழித்து வருகிறேன்" என்றார் என்னிடம். எந்த இடம்? எந்த ஆபீஸ், என்ன வேலை, சம்பளம் எவ்வளவு? இவ்வளவு கேள்விகளையும் மனத்தில் வைத்துக்கொண்டு நான் போய் ஆபீசில் நுழைந்தேன்.

'புக்ககத்துக்குப் போகும் பெண்கள், ஒன்றும் சொல்லாதேங்கோ' என்று அடிக்கடி அத்தை கூறுவது என் ஞாபகத்துக்கு முதல் முதல் வந்தது இப்போது நான் அதே ஸ்திதியில் இருந்தேன். ஒரு பக்கம் சங்கோசம், ஒரு பக்கம் பயம், 'இப்படி ஊரையும் பந்து ஜனங்களையும் விட்டுவிட்டு எங்கேயோ வந்து உட்கார வேண்டுமென்று நம்ம தலையில் எழுதியிருக்கிறது பார்த்தாயா?' என்று துக்கம் எல்லாம் சேர்ந்துகொண்டு என்னை வாட்டியது. ஓர் ஆண்பிள்ளைக்கே இப்படி இருக்கும்போது ஒரு சிறுமி! அதுவும் வீட்டிலேயே பழகி, எப்போதும் தாயுடன் இருந்தவளுக்கு எல்லாரையும் விட்டு வருவது எப்படித்தான் இருக்கும் என்று என்னால் சிந்திக்கவே முடியவில்லை. அத்திம்பேர் இப்படித் தனியாக விட்டு விட்டுப் போய்விட்டாரே என்று துக்கம் துக்கமாக வந்தது. ஒருவரிடம் கொண்டுவந்து விட்டாரே, அவராவது வந்தால் தேவலைபோல் இருந்தது.

சேவகன் என்னை அழைத்து வந்து விட்டு, "ஸார், புரொபரைடர் இரண்டு மணிக்கெல்லாம் வருகிறாராம். கடிதங்களை எல்லாம் பார்த்துத் தயாராக வைக்கச் சொன்னார்" என்று சொல்லிப் போய்விட்டான்.

மூலைக்கு ஒரு மேஜை. அதன் மேல் டைப் செய்யும் யந்திரம். அதன் முன் ஓர் ஆள். எல்லாம் புதிய முகமாகக் காணப்பட்டதே ஒழிய ஒன்றாவது சற்றுப் பழக்க முள்ளதாகவோ எங்கேயாவது பார்த்த நினைவாகவோ தோன்றவில்லை. எல்லோரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்களே தவிர என்னை உட்காரச் சொல்லு பவரோ விசாரிப்பவரோ ஒருவரையும் காணவில்லை. நானும் சிறிது நேரம் அப்படியே நின்றுகொண்டிருந் தேன்.

நடுவில் ஒரு பெரிய மேஜையில் ஒருவர் உட்கார்ந்து எழுதிக்கொண்டிருந்தார். "டைப் செய்த கடிதங்களை எல்லாம் ஒவ்வொருவராக அவரிடம் கொண்டுவந்து கொடுத்துக்கொண்டிருந்தார்கள். அவர் சிறிது நேரம் கழிந்து, "வாங்கோ ஸார், இப்படி வந்து உட்காருங்கோ" என்றார். அவர் மாத்திரம் அவ்விடத்தில் என்னைப்பற்றிய

கவலை ஏன் எடுத்துக்கொண்டார் என்பது அவர் பேசிய பிறகுதான் எனக்குத் தெரிந்தது. அவ்விடம் இருந்தவர்களில் அவருக்கு மட்டுந்தான் தமிழ் தெரியும் என்பது நிச்சயமாயிற்று. நம்மைச் சேர்ந்தவன் ஒருவன் இப்படி நிற்கிறான் என்றால் அவருக்கும் கொஞ்சம் ஒரு மாதிரியாக இருந்ததென்று எனக்குப் பட்டது. மற்றவர்கள் எல்லாரும் அநேகமாக அந்த ஊரைச் சேர்ந்தவர்களாகவே இருந்தார்கள். இப்படி ஒருவர் இருந்தது எனக்கும் ஆறுதலாக இருந்தது. சென்று அவர் பக்கத்தில் ஒரு நாற்காலியில் உட்கார்ந்தேன்.

"எங்கே, சென்னையிலிருந்து வருகிறீர்களா?" என்றார் அவர் தமிழில்.

"ஆமாம். உங்களுக்கு எப்படித் தெரியும்? முன்னாடியே ஏதாவது செய்தி வந்துவிட்டதோ?" என்றேன்.

"இல்லையே! நானாகத்தான் கேட்கிறேன். நம்ம ஊர் மனுஷ்யாள் என்றால் பார்த்தவுடனேயே தெரிந்துவிடுகிறதோ இல்லையோ? அதனால் கேட்டேன். இன்னிக்குத்தான் வந்தேளாக்கும்?"

"நான் வந்து இரண்டு மூன்று நாட்கள் ஆகிவிட்டன. எங்க அத்திம்பேர் இருக்கிறார் இங்கே. ஒரு வேலை விஷயமாக வந்தேன்."

"யார் உங்க அத்திம்பேர்? அவர் பெயர்?" என்றார் அவர் ஆவலோடு.

"மகாதேவன் என்று பெயர். இன்கம்டாக்ஸ் இலாகாவில் இருக்கிறாரே? தெரிந்திருக்குமே உங்களுக்கும்?" என்றேன்.

"ஓகோ! அப்படி வாருங்கோ. நம்ம மகாதேவன் மச்சினரா நீங்க? உங்காத்துலே எல்லாரையும் ரொம்ப நன்றாகத் தெரியுமே எனக்கு. அப்பா எங்கே? சென்னையிலேதானே இருக்கிறார்? சௌக்கியமாக இருக்கிறாரா?" என்று அவர் கேட்டபோது எனக்கே ஆச்சரியமாகிவிட்டது.

'அடே! எங்கே வந்தாலும் எனக்குத் தெரிந்தவர் ஒருவர் இருக்கிறாரே!' "எல்லாரும் நல்லபடியாக இருக்கிறார்கள். நான்தான் வேலை விஷயமாக வந்தேன். அவர் யார், அங்கே நான் பார்த்தவர்? அவர்தான் உங்கள் முதலாளியோ?" என்றேன்.

"ஆமாம், அவர்தான்" என்று நண்பர் சொல்லிக் கொண்டிருந்தபோதே அவர் வந்து சேர்ந்தார்.

வந்தவர் கடிதங்கள் எல்லாவற்றையும் ஒரு முறை பார்த்துவிட்டுக் கையெழுத்துப் போட்டார். சிறிது நேரம் வேலையைப் பார்த்துவிட்டு, "இவர்தான் நான் உங்களுக்காக வரவழைத்த ஆள்; பார்த்துக்கொண்டீர்களா?" என்றார் என்னிடம் பேசிக்கொண்டிருந்த நண்பரிடம்.

"ரொம்ப சந்தோஷம். நானும் யாரோ என்று நினைத்துக்கொண்டிருந்தேன். நம்ம மகாதேவன் இருக்கிறாரே அவருடைய மச்சினராம். கடைசியில் பந்துக்களாகி விட்டோம்" என்றார் அவரும் சிரித்துக்கொண்டே. என்னுடைய முகத்திலும் முதல் முதலாகச் சிரிப்பு அப்போது தான் வந்தது. பழக்கமில்லாத ஓர் இடத்தில் புது மனிதர்களிடம் ஒருவனைக் கொண்டுபோய் விட்டால் எவ்வளவு சங்கோசப்படுவான்; உணர்ச்சிகள் எவ்வளவு எழும் என்பது அப்போதுதான் எனக்கும் விளங்கியது.

பத்து நிமிஷங்கள் இப்படி வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருந்துவிட்டு அவர் போய்விட்டார். 'வேலை எதுவோ, சம்பளம் எதுவோ?' என்ற ஒரு கேள்வியும் இப்போது என் உள்ளத்தில் தலையெடுக்கவில்லை. தைரியமும் உத்ஸாகமும் ஓங்கி எழுந்தன. மணி ஓடியதே தெரியவில்லை.

அதற்குள், "சிறு, வரயா போவோம்?" என்று கேட்டுக்கொண்டே அத்திம்பேர் வந்து என்னை அழைத்துக் கொண்டு வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார். வீட்டுக்குப் போனவுடன் டிபனைப் சாப்பிட்டுவிட்டு என்னையும் அழைத்துக்கொண்டு வெளியே போனார். நாங்கள் போனபோது அக்கா இல்லை. எங்கேயோ போயிருப்பதாகக் குழந்தைகள் சொன்னார்கள்.

விளையாடும் இடத்துக்குச் சென்றுவிட்டு நாங்கள் வந்தபோது இரவு மணி எட்டு அடித்துவிட்டது. எட்டு மணி என்றால் நம்ம ஊரில் அதிகமாக இருக்கிறதே தவிர அவ்விடமெல்லாம் மணி ஒன்பதுக்கு முன்னால் ஒருவரும் சாப்பாட்டைப்பற்றியோ வீட்டைப்பற்றியோ நினைப்பதில்லை. அதே வழக்கமாக அத்திம்பேரும் ஒன்பதுக்கு முன்னால் சாப்பாட்டுக்கு உட்காரமாட்டார்.

வந்ததும், "எங்கே போயிட்டே, சீமா? அத்திம்பேரோடேயே இருந்துவிட்டாயா என்ன?" என்றாள் அக்கா.

'அத்திம்பேர் இவளுக்கும் சொல்லவில்லையா என்ன?' என்ற சந்தேகம் அப்போதுதான் எனக்கு உண்டாயிற்று.

"ஏன் அக்கா, உனக்குத் தெரியாதா என்ன? வேறு விஷயமான்னு அழைத்துக்கொண்டு போனார் அத்திம்பேர்?" என்றேன்.

"அட ராமா! இப்படி எதையாவது பண்ணுவார்னு எனக்குச் சந்தேகந்தான். என்னிடம் நீயாவது ஒரு வார்த்தை சொல்லக் கூடாதா? வெள்ளிக்கிழமை; ராகுகாலமும் அதுவுமாக வேலைக்குப் போவாளோடா? வயசானத்துக்கு இதுவாவது தெரிய வேண்டாமா, சொல்லு. நான் சொல்லப் போனால் சண்டை. ஒரு நல்ல காரியத்தைப் போய் இப்படியா செய்வா, ஓசைப் படாமே?" என்று அக்காவுக்குக் கோபம் வந்து விட்டது.

"நான் என்ன செய்கிறது அக்கா! எனக்கே அவர் சொல்லலியே? வழக்கம்போல் ஆபீசுக்குத்தான் கூப்பிடுகிறாரோ என்னவோ என்று நினைத்துக்கொண்டிருந்தேன். இதனால் என்ன முழுகிப் போய்விட்டது இப்போ? நம்மைப்போல் எல்லாரும் இப்படித்தான் ராகுகாலத்தையும் குளிகனையும் பார்த்துக்கொண்டு இருக்கிறார்களாக்கும்! என்னமோ பைத்தியந்தான்" என்று நான் அவளுக்குச் சமாதானம் சொன்னேனே தவிர, 'என்னடா இது?' என்று மனத்துக்குள் உதைப்புத் தான்.

"என்ன, அக்காவும் தம்பியும் என்னமோ கூடிக் கூடிப் பேசுகிறேள்? அக்காளுக்கு அந்த வேலை திருப்தி இல்லையோ?" என்று கேட்டுக்கொண்டு அத்திம்பேர் வந்தார் அதற்குள். "ரொம்ப அழகாய் இருக்கு, போங்கோ! என்னத்துக்கு இப்படி ராகுகாலத்துலேயும் அதிலேயும் அவனை அழைச்சிண்டு போய் வேலையை ஒப்புக் கொள்ளச் சொன்னேள்? உங்களுக்குத்தான் நாள், கிழமை ஒன்றும் கிடையாது என்றால் அவன் எங்கேயோ ஊரை விட்டு வாசலை விட்டு வந்திருக்கிறான்! அவனைப்பத்தி யாவது கொஞ்சம் கவலை வேண்டாமா?" என்று அவரைக் கோபித்துக்கொண்டாள் அக்கா.

"நான்தான் அப்பவே சொன்னேனே! உங்க சமாசாரமெல்லாம் தெரிஞ்சுதான் செய்தேன். இன்னிக்கி வேண்டாம், நாளைக்கு வேண்டாம் என்றால் வேலை காத்துக்கொண் டிருக்குமா உங்களுக்காக? எத்தனையோ ஆயிரம் பேர் காத்துக்கொண்டு கிடக்கிறார்கள். நமக்குத் தெரிந்தவனுச்சே என்று அவர் செய்தார். நீங்கள் சொல்லுவதைக் கேட்டுக்கொண்டு நாள், நக்ஷத்திரம் என்று காத்துக்கொண் டிருந்தால் நிற்க வேண்டியது தான் அப்படியே. அவள் பாட்டில் எதையாவது அப்படித் தான் அளந்துகொட்டிக்கொண் டிருப்பாள். நல்லபேச்சே வராதே வாயில்! வா இப்படி" என்று என்னையும் அழைத்துக்கொண்டு ஸோபாவில் வந்து உட்கார்ந்தார்.

"நான் விட்டுவிட்டு வந்துவிட்டேனே? பிறகு ராஜன் என்ன சொன்னார்?" என்று கேட்டார் என்னை.

"ராஜனா? அங்கே இருந்தாரே ஒருவர் அவரைக் கேட்கிறீர்களா?" என்றேன்.

"ரொம்ப அழகாகத்தான் இருக்கு, வேலை பார்த்துக் கொடுப்பது. இடத்தையும் சொல்லாமே முன்னால் பின்னால் ஒன்றும் சொல்லாமல்! பேர்கூடத் தெரியாமலா ஒருவனை அழைத்துக்கொண்டு போவார்கள்!" என்று சொல்லிக்கொண்டே வந்தாள் அக்கா.

"நீ பாட்டில் இரேன்! இப்படி எகத்தகெடுத்தாலும் ஏன் வருகிறாய்? உன் தம்பி என்றால் உனக்கு மாத்திரந் தானா அக்கறை இருக்கும்? வேறு ஒருவருக்குமே இருக்

காதா? எல்லாம் காரணமாகத்தான் சொல்லவில்லை. அவனுக்கு ஆள், இடம் எல்லாம் எப்படித் தோன்று கிறது, பிடித்திருக்கிறதா பார்ப்போமே?" என்று அத்திம்பேர் அக்காவை அடக்கிவிட்டு என் பக்கமாகத் திரும்பி, "என்ன? பிடித்திருக்கிறதா அந்த ஆசாமியை?" என்றார்.

"ரொம்ப நல்லவராக இருக்கிறார் அத்திம்பேரே. மிகவும் நயமாகப் பேசுகிறார். அவருக்கு என்ன வேலை?" என்றேன்.

"பார்த்தாயா? அதற்குத்தான் கேட்டேன். ஒருவன் நல்லவன் என்று உனக்கு நான் சொல்லிப் பயன் இல்லை. நீயே அதைத் தெரிந்துகொள்ள வேண்டும். அப்போது தான் உனக்கும் ஒரு தைரியம் உண்டாகும். என்ன கேட்டார் உன்னை?" என்றார் அத்திம்பேர்.

"அவர் கேட்டதை எல்லாம் சொல்லிவிட்டு அவர் யார் என்பதை இன்னும் எனக்கு நீங்கள் சொல்ல வில்லையே?" என்றேன்.

"அவசரப்படாதே, வேலையைப்பற்றி ஏதாவது சொன்னாரா?"

"அதுவும் ஒன்றும் சொல்லவில்லை. நீங்கள் செய்வது உங்களுக்குத்தான் புரியும். எனக்கு ஒன்றும் தெரியல்லே அத்திம்பேரே" என்றேன்.

"பயப்படாதேடா; அப்படி ஒன்றும் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டுவிட மாட்டேன். நல்ல வேலை யாகப் பார்க்க வேண்டும் என்பதுதானே எனக்கும் ஆசை. அங்கே ஆபீசில் என்ன செய்தாய்? சொல்லு."

"அங்கே நம்ம ஊர் ஆசாமி ஒருவரைப் பார்த்தேன்" என்று நான் கூறினேன்.

"அவர் யார் என்று நினைத்துக்கொண் டிருக்கிறாய்? உங்க முத்தண்ணா இருக்கிறார் பார். அவருடைய மாப் பிள்ளை! தெரியுமா உனக்கு?" என்றார் அத்திம்பேர்.

"அவர் இங்கே எங்கே வந்தார்?" என்றாள் அக்கா நடுவில்.

"இப்போதான் பத்து நாட்களுக்கு முன் ராஜனைப் பார்க்கப் போனேனே இல்லையோ, அப்போதுதான் தெரிந்தது. சொல்ல மறந்துவிட்டேன்" என்றார், அத்திம்பேர்.

எனக்குத் தெரியவில்லை.

"முத்தண்ணாவா? யாரைச் சொல்கிறேள்?' என்றேன்.

"எல்லாம் உங்க அண்ணா, முத்தண்ணாதான். தெரியாதா உனக்கு? நான்கூடப் பார்த்திருக்கிறேனே" என்றார் அத்திம்பேர்.

"அவனுக்கு என்ன தெரியப்போகிறது? அவனுக்குத் தெரிந்து முத்தண்ணா நம் வீட்டுக்கு அந்கமாக வந்ததே இல்லை. அவன்தான் இப்போது ரொம்பப் பெரிய மனுஷனாகப் போய்விட்டானே?" என்றாள் அக்கா.

"அதென்னமோ அந்தக் கதை எல்லாம் எனக்குத் தெரியாது; சொல்லு அவனுக்கு நீயே'' என்றார் அத்திம்பேர்.

"சொல்லுகிறேன்; அவனுக்கும் யார், என்ன என்று தெரியணுமோன்னோ? கேட்டுக்கோடா சீனு. எல்லா விஷயமும் தெரியத்தான் வேண்டி இருக்கு. சொல்லுவதைச் சரியாகச் சொல்லாமல் அவர் இப்படித்தான் செய்வார். முத்தண்ணா என்றால், அப்பாவுக்கு அண்ணா பிள்ளை ஒருவர் இருக்கிறார் என்று உனக்குத் தெரியுமோ இல்லையோ அவன்தான். அவன் முழுக்க முழுக்க நம்மாத்திலேதான் வளர்ந்தவன். குழந்தையிலேயே அப்பா அம்மா ரெண்டு பேரும் போய்விட்டார்கள்.

"வளர்த்து, படிக்க வைத்து அவனை ஒரு மனிதனாகச் செய்ததெல்லாம் நம்ம அம்மா, அப்பாதான். கல்யாணம் செய்துவைத்து ஒரு குடித்தனமும் வைத்தது இவர்தான். இப்போ அவன் பெரிய சம்சாரியாகி விட்டான்; பாவம்! அதெல்லாம் இருக்கட்டும். ரொம்பப் பெரிய மனுஷனாய்த் திரும்பிக்கூடப் பார்க்காமல் இருக்கிறானே, அதுதான் வேடிக்கையாக இருக்கிறது. இவ்வளவு செய்தாரே என்று ஒரு விசுவாசம் வேண்டாமா? அப்பாவின் சமத்தைக் கேளு. 'நாம்தான் நன்றாகச் சம்பாதிக்கிறோம். கவலை

இல்லை' என்று இருந்த இரண்டு வேலி நிலத்தையும் அவனுக்கு எழுதி வைத்துவிட்டார். அவன் அதிருஷ்டம், அல்லிருந்து விருத்தியாகிக்கொண்டே வந்தது. இப்போது நன்றாகராஜாவைப்போல் வீடும் வாசலுமாக இருக்கிறான். தட்டுக்கு முட்டுக்கு ஒரு ஐம்பது ரூபாய் கேட்டால்கூட அனுப்புவதும் இல்லை; அப்பாவை மதித்துத் திரும்பிப் பார்ப்பதும் இல்லை. 'இப்போது மாப்பிள்ளைகளெல்லாம் நன்றாக வந்திருக்கிறான்கள். மாமனாரைத் தாங்குகிறார்கள். நாம் என்ன லக்ஷ்யம் சொல்லு. இங்கே வந்திருப்பவன் பெரிய மாப்பிள்ளையாக்கும். அவனும் நம்மையெல்லாம் லக்ஷ்யம் செய்துவிடப் போகிறானா?" என்று அக்கா முடித்தாள்.

"இல்லை அக்கா. அவரைப் பார்த்தாயானால் சொல்லு வாய். ரொம்ப நல்லவராகக் கலகலவென்று பேசுகிறார். எவன் எவன்களோ உட்கார்ந்துகொண்டிருந்தான்களே? வாயைத் திறக்கவில்லை. அவர் இருந்ததனால்தான் என்னால் அங்கே உட்கார்ந்துகொண் டிருக்க முடிந்தது" என்றேன் நான்.

"அவன் நீ யார் என்பதைத் தெரிந்துகொண்டானா?"

"உடனேயே தெரிந்துகொண்டு விட்டார். அப்பா வைப்பற்றி ரொம்ப விசாரித்தார்."

"சரி சரி, உங்கள் கதையெல்லாம் இருக்கட்டும். என்ன வேலை செய்தாய்? ராஜன் என்ன சொன்னார்? அதைச் சொல்லு" என்றார் அத்திம்பேர்.

"வேலையும் செய்யவில்லை, ஒன்றும் செய்யவில்லை. அவர்பாட்டில் வந்தார்; போய்விட்டார்" என்று நான் கொஞ்சம் வெறுப்போடு கூறினேன்.

"ஒன்றும் சொல்லவில்லையா? அப்படியானால் பேசா மலா உட்கார்ந்திருந்தாய்? உனக்கு என்ன வேலை கொடுக் கப் போகிறார் என்று நான் சொல்லுகிறேன் கேள். அப்பா கேட்டால் மிகவும் சந்தோஷப்படுவார். அவருக்குத் தான் இதெல்லாம் ரொம்பப் ப்ரியம். உனக்கு முதலில் எடுத்தவுடன் நல்ல உத்தியோகமே போட்டுக் கொடுத்து விடுவார். ஆனால் நான்தான் முதலில் கொஞ்சம் பழகட் டும் என்று சொன்னேன். அதனால் உதவி ஆசிரியராகப்

போட்டுக்கொண் டிருக்கிறார். பிரமாத வேலை ஒன்றும் இருக்காது. நன்றாகத் தூங்கலாம்'' என்றார் அத்திம்பேர்.

இதைக் கேட்டவுடன் எனக்குத் திடுக் என்றது. "ஆசிரியராவது நாளாவது? என்னது! ஆசிரியரா? எதற்கு ஆசிரியர்?'' என்றேன்.

"அதுக்குள்ளே இப்படிப் பயந்துவிட்டாயே? அவர் ஒரு தமிழ்ப் பத்திரிகை தொடங்கியிருக்கிறார். நீ பேசிக்கொண்டிருந்தாயே நம்ம முத்தண்ணாவின் மாப்பிள்ளை; அவர்தான் ஆசிரியர். நீ உதவி ஆசிரியர்; புரிந்ததா?'' என்றார் அத்திம்பேர்.

"அழகுதான். நானாவது ஆசிரியராவது! என்ன தெரியும் அத்திம்பேரே எனக்கு?'' என்றேன். கொஞ்சமாவது தெரிந்திருக்க வேண்டாமா இதைப்பற்றி?

"போடா! என்ன தெரியணும் பிரமாதமாக? எது வந்தாலும் இன்னும் நன்றாக இருக்க வேண்டும்; இது நன்றாக இல்லை, என்று கூடவா சொல்லத் தெரியாது; பிரமாதம்? இதைவிட எல்லோரும் என்ன கிழித்து விடுகிறார்கள் என்கிறாய் நீ?'' என்று சிரித்தார் அத்திம்பேர்.

"என்னமோ என்று பார்த்தேன். இதுக்கா இவ்வளவு பிரமாதம்! உன்பாடு என்பாடு என்று இருபத்தைந்து ரூபாய் கொடுத்துவிடுவானுக்கும்; பிரமாதம்! இதுக்கா அவனை அங்கேயிருந்து கட்டி இழுத்துக்கொண்டு வந்தேள்?'' என்று கோபித்துக்கொண்டாள் அக்கா.

"இருபத்தைந்தா? நூறு ரூபாய், தெரியுமா? முதல் எடுத்தவுடன்! யார் தருகிறார்கள் இந்தக் காலத்தில், மூடிக்காத இன்டருக்கு? பெரிய பெரிய பரீக்ஷையெல்லாம் தேறிவிட்டு ஐம்பது ரூபாய்க்கும் நாற்பத்தைந்து ரூபாய்க்கும் முட்டி வாங்குகிறார்கள் தெரியுமா? உட்கார்ந்த இடத்திலே அதிகாரத்துடன் வேலையை நடத்தலாம். என்ன கௌரவமான வேலை என்பது உனக்குத் தெரியுமா? அவன் ஒருவர் காலிலும் போய் விழவேண்டாம். ஆயிரம் பேர் அவன் காலில் வந்து விழுவார்கள்'' என்றார் அவர்.

இதைக் கேட்க எனக்கும் கொஞ்சம் சந்தோஷமாகவே இருந்தது. ஆசிரியர் என்றால் என்னவோ ஏதோ என்று இருந்தாலும் ஒருவர் அதிகாரத்தில் இருந்துகொண்டு நடுங்க வேண்டாம். நம் இஷ்டப்படி பத்துப் பேர் நடக்கக் காத்துக்கொண்டிருப்பார்கள் என்று நினைத்தபோது மிகவும் திருப்தியாக இருந்தது.

"ஏன் அக்கா? அவருக்குத் தெரியாதா எல்லாம்? பார்த்து எல்லாம் சரியாகத்தான் செய்வார். சும்மா ஏதாவது தொண தொணவென்று சொல்லிக்கொண்டிருக்காதே" என்றேன் நானும். –

"அப்படியானால் எனக்கு என்னடா கவலை? சொல்லு. நீ ஏதாவது கஷ்டப்பட்டுக்கொள்ளப் போகிறாயே என்று சொன்னேன். உனக்குப் பிடித்தால் பிறகு கவலை என்ன? ரொம்ப சந்தோஷம்" என்றாள்.

"ராகு காலம்! அது! இது! என்று அடித்துக்கொண்டாயே! இப்போ எல்லாம் சரியாகப் போய் விட்டதா, நானூறு ரூபாய் என்றதும்!" என்றார் அத்திம்பேர் அக்காவைப் பார்த்து.

"ரூபாய்க்கா இப்போ சொல்லுகிறேன்? எதை எடுத்தாலும் ஒரு நல்ல வேளையில் செய்ய வேண்டாமா? அதெல்லாம் இருக்கட்டும்; இப்போ இவர், ராஜன், ஆரம்பிக்கப்போகிறார்? இந்த ஊரிலே வந்து கழிசடையிலே ஏதாவது ஆரம்பித்தால் சரியாய் வருமா இப்போ?" என்றாள் அக்கா.

அதைத்தான் நானும் கேட்க வேண்டும் என்று எண்ணினேன். "ஆமாம், அத்திம்பேரே? அவர் என்ன ஆரம்பிக்கப்போகிறார்?" என்றேன்.

"அவர் யார், எந்த ஊர், என்ன செய்கிறார்? எல்லாம் விவரமாகச் சொல்லுகிறேன் கேள். அக்காவுக்குக்கூட இதெல்லாம் தெரியாது. எல்லாம் தெரிந்துவிட்டது போல் கத்திக்கொண்டிருக்கிறாளே?"

"அவர் இந்த ஊர் ஆசாமி என்று நினைத்துக்கொண்டு விட்டாய்? இல்லை. படிப்பை எல்லாம் நம்ம ஊரில்தான் முடித்தார். அப்போது இப்படி ரொம்பப் பிரமாதம்

ஒன்றும் இல்லை. சாதாரணமாக இருந்தவர் தான். ஆனால் படிப்பில் அசாத்திய கெட்டிக்காரர். ஒவ்வொரு பரீக்ஷையிலும் பரிசு பெற்றவர். நல்ல கெட்டிக்காரப் பையனா? எல்லோருக்கும் அவர் பேரில் ஒரு கண். இந்தக் காலத்தில்தானே எவ்வளவு படித்தாலும் லாட்டரி! அப்போதெல்லாம் படிப்பில் கெட்டிக்காரனாக மட்டும் இருந்துவிட்டால் அவனுக்குத்தான் முதலில் எந்த வேலையும். அதனால் பணக்காரர்கள் எல்லோரும் முக்கியமாகப் பணத்தைப் பார்த்தாலும், படிப்பில் கெட்டிக்காரன் என்றால் அவனுக்குத் தனி மதிப்புக் கொடுப்பார்கள். அதுபோல் நம்ம ராஜன் எல்லாப் பரீக்ஷைகளிலும் தேறியதும் எல்லோரும், 'என் பெண்ணைக் கொடுக்கிறேன். உன் பெண்ணைக் கொடுக்கிறேன்' என்று மேலே விழுந்து ஓடி வந்தார்கள். ஒரு நல்ல இடம் என்றால் எல்லோருக்கும் ஆசைதானே? நல்ல பெரிய பிரபுவின் வீட்டு மாப்பிள்ளையானார். ஆனால் ராஜனுடைய சுபாவம் ஒரு தினுசு. சுயேச்சையாக இருக்க விரும்பும் மனிதன். ஒருவர் கூறுவதையும் கேட்டுக்கொண்டு சுயமரியாதையை இழக்க மாட்டார். பெரிய இடத்து மாப்பிள்ளை என்ற பெருமையும் அவருக்கு இருக்கவில்லை. தான் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசை அதிகமாக இருந்தது. அதனால் இங்கே டில்லிக்கு முதல் முதல் வேலையாக வந்தார். நல்ல பெரிய உத்தியோகம் கிடைத்ததே ஒழிய அவருக்குக் குடும்பத்தில் சுகம் இல்லை. அவருடைய மாமனார், 'அவ்வளவு தூர தேசத்தில் வேலை வேண்டாம். எனக்கு ஒரே குழந்தை; அனுப்ப இஷ்டமில்லை' என்று தகராறு செய்ய ஆரம்பித்தார். 'இதென்னடா சங்கடம்?' என்று எவ்வளவோ சமாதானம் சொல்லித் தனியாகவே இருந்துகொண்டு வந்தார். கடைசியில், 'நான் யாருக்காகச் சம்பாதிக்க வேண்டும்? அவளுக்குத்தான் வேண்டியது கிடக்கிறது.' என்று வேலையை விட்டுவிட்டுப் பேசாமல் போய் அங்கேயே உட்கார்ந்திருந்தார். பிறகு அதுவும் சரியாக வரவில்லை. 'இவ்வளவு பிடிவாதம் இருந்தால் எனக்கும் இருக்கத் தெரியும்' என்று அவர் செய்ததுதான் வேடிக்கை. எங்கே வேண்டுமானாலும் போகிறார்; எவ்வளவு வேண்டுமானாலும் செலவு செய்கிறார். ஜம்மென்று

உட்கார்ந்த இடத்தில் பணத்தை வரவழைத்துக்கொண்டு உட்கார்ந்துகொண் டிருக்கிறார். பொழுது போவதற்கு ஏதாவது செய்யவேண்டுமோ இல்லையோ? படித்து விட்டுப் பேசாமல் உட்காரவும் பிடிக்கவில்லை. இந்த ஊரில் ஹிந்தியில் ஒரு பத்திரிகை நடத்த ஆரம்பித்தார். தமிழிலும் நடத்த வேண்டுமென்று அவர் ஆசை. அதைத் தான் இப்போது ஆரம்பிக்கப்போகிறார். அவருடன் சேர்ந் தால் உனக்கென்னடா குறைவு? அதுதான் உன்னையும் இந்தக் கல்யாணத்தைப் பண்ணிக்கொள். அவர்போல் இருக்கலாம் என்று சொல்லுகிறேன். பண்ணிக்கொண்டு புருஷனும் லக்ஷணமாய் அதிகாரத்துடன் இருக்கக் கூடாதா!'' என்று முடித்தார். அத்திம்பேர். அவர் கூறு வதும் ஒரு விதத்தில சரிதானே என்று தோன்றியது எனக்கு.

'கவலை இல்லாமல் இருக்கக் கொடுத்து வைக்க வேண்டுமே!'

# 14

## சுப்பி

ஏதையோ நினைத்துக்கொண்டு குழம்பிக்கொண்டிருந்தேனே ஒழிய ஒரு வாரத்து ஆபீஸ் பழக்கம் என்னைப் புது மனிதனாகவே மாற்றிவிட்டது.

முத்தண்ணாவின் மாப்பிள்ளை, அதாவது எனக்கு மேல் இருந்த ஆசிரியருடைய பெயர் கோபாலன். முதலில் கடிதங்களைப் பார்த்துப் பதில் எழுதவேண்டிய வேலையை எனக்குக் கொடுத்தார். அந்தக் கடிதங்களை வாசிப்பது எனக்குப் பொழுதுபோக்காகத் தோன்றியதே ஒழிய ஒரு முக்கியமான விஷயத்தைப்பற்றியது என்பதே தோன்றவில்லை. ஏனென்றால் அவைகளில் பொழுது போக்குக்கு வேண்டிய அவ்வளவு விஷயங்கள் இருந்தன. ஒவ்வொருவரும் தம்முடைய பிரதாபங்களையும், பெருமைகளையும்பற்றி எழுதிக்கொள்வதுடன் எவ்வளவோ ஆசிரியர்களுடன் தங்களுக்கு இருக்கும் பழக்கங்களையும் அநுபவங்களையும் எழுதித்தள்ளியிருந்தார்கள்.

"இதையெல்லாம் யார் கேட்டது இவர்களை? அனுப்பும் கதையோ, கட்டுரையோ, ஒரு தம்பிடிக்குப் பிரயோஜனமில்லை! பக்கம் பக்கமாக எழுத்து!" என்று ஆசிரியர் கோபித்துக்கொண்டார்.

எங்களுடைய பத்திரிகை, மாதப் பத்திரிகை. தென் இந்தியாவிலிருந்து எவ்வளவோ பத்திரிகைகள் வந்து கொண்டிருந்தாலும் எங்களுடைய பத்திரிகைக்கு நல்ல வியாபாரம் காத்துக்கொண்டிருந்தது என்று நிச்சயமாக இருந்தோம். ஏனென்றால் பத்திரிகையைத் தொடங்குபவர் அநாமதேயமாக இருந்தால் அதைப்பற்றிப் பிரசாரம் செய்வதற்கு அதிகச் செலவோடு வியாபாரம் நடக்கவும் வருவுக் கணக்கில் ஆகும். நம் விஷயத்தில் ராஜன் அவர்களைத் தெரியாதவர்கள் இல்லை. அப்படி இருந்தாலும் தெரிந்தவுடன் புத்தகத்தை விருப்பத்துடன்

வாங்கிக்கொள்ளுபவர்களாக இருந்தனர். ஆகையினால் எங்களுக்கு வியாபாரப் பொறுப்புக் குறைவாக இருந்தது.

ஆசிரியர் பெரியவர். அவருக்கு அநுபவம் இருந்ததோ என்னமோ. என் வேலை அவர் நினைப்பதுபோல் அவ்வளவு சீக்கிரமாக முடியவில்லை. கத்தை கத்தையாக வரும் இந்தக் கடிதங்களுக்கு என்ன பதில் எழுதவதென்றே தோன்றாமல் இருந்தது. ஒரு நாள் ஒரு நண்பர் பெரிய கடிதம் ஒன்றை அனுப்பியிருந்தார். அதற்குப் பதில் எழுதிக்கொண்டு வா என்றார் ஆசிரியர். என்ன எழுதுவது என்பதையும் சுருக்கமாகச் சொன்னார். நான் எழுதிக் கொண்டு வந்தவுடன் அவருக்கு மிகுந்த கோபம் வந்து விட்டது.

'என்னையா இது? இது ஆபிஸ் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? விளையாட்டு என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா?" என்று என் பேரில் சீறி விழுந்தார்.

"ஏன் ஸார்?" என்றேன் நான் மெதுவாக.

"ஏன் என்று கேட்கிறாயே என்னை! இப்படியா கடிதம் எழுதுவது? ஒரு வரி எழுத வேண்டியதை வளர்த்து வளர்த்து ஒரு பக்கம் எழுதியிருக்கிறாயே? ஏதாவது பொருள்படும்படி இருக்கிறதா? நாம் குறையை வைத்துக்கொண்டு அவன் இன்னும் ஐம்பது பக்கம் எழுதுவான். நம்ம பத்திரிகைக்கு நல்லதாக ஒன்றும் கிடைக்காவிட்டால் இனிமேல் இதையெல்லாந்தான் போட்டுவிட வேண்டும்போல் இருக்கிறது. ஆபீஸ் கடிதங்கள் என்றால் இரண்டு வரி எழுதுவார்கள்! நான்கு வரி எழுதுவார்கள்; ஒரு கதையா எழுதிக்கொண் டிருப்பது?" என்று மிகவும் கோபித்துக்கொண்டு விட்டார். 'ஆசிரியர் என்றால் அவருக்குத் தம் காரியத்திலேயே கண் இருக்க வேண்டுமே அன்றி மற்றவர்களுடைய சௌகரியங்களையோ உணர்ச்சிகளையோபற்றிக் கவலைப்பட்டால் மதிப்புக் குறைவுபோல் இருக்கிறது' என்பதை அப்போதுதான் நான் உணர்ந்தேன். 'ஆசிரியர் என்பது மற்ற எல்லாப் பதவிகளையும்விட இவ்வளவு உயர்ந்ததா?' என்று நினைத்துக்கொண்டபோது எனக்கு மிகப் பெரு

மையாக இருந்தது. இந்த ஒரு வாரத்தில் என்னிடம் இருந்த மாறுதல்களைக் கவனிக்க எனக்கே ஆச்சரியமாக இருந்தது. 'மற்றவர்கள் மதிப்பினால்தான் மனிதன் உலகத்தில் தன் மதிப்பை உணருகிறான். இல்லாவிட்டால் தன்னிடம் எவ்வளவு பெருமை இருந்தும் பெருமையுடன் நடந்துகொள்ள மாட்டான்' என்று தோன்றியது. அத்திம்பேருடைய நண்பர்கள் வரும்போது அவர்களுடன் பேசுவதற்கோ பழகுவதற்கோ சங்கோசமாக இருந்தவனுக்கு எல்லாம் எங்கேயோ பறந்துவிட்டது. எல்லோருடனும் உட்கார்ந்துகொண்டு உலக விஷயங்களைப் பற்றிப் பேசவோ வெளியில் போகவோ ஆசை உண்டாயிற்று. அத்திம்பேருடன் பேசுவதற்குச் சங்கோசமாக இருந்த எனக்கு என்ன தைரியம் வந்துவிட்டது! தனக்கென்று ஓர் அந்தஸ்து வராத வரையில் மனிதனுக்கு எவ்வளவு சங்கோசம்! ஒரு நாள் மாலை ஆபீசிலிருந்து வரும்போது அத்திம்பேருடன் ஒரு நண்பர் பேசிக்கொண்டு உட்கார்ந்திருந்தார். நான் அவரை இதற்கு முன் பார்த்ததில்லை. யாரோ ஏதோ என்று பேசாமல் போனேன். அதற்குள், "இவர்தான், பராசக்தியின் உதவி ஆசிரியர்" என்றார் அத்திம்பேர்.

அத்திம்பேர் என்னை இப்படி அழைத்தது அதுதான் முதல் தடவை. ஏதோ பரிகாசம் செய்கிறாரோ என்னவோ என்று சற்று நின்றேன்.

"வாங்கோன்னா ஆசிரியர்வாள். உங்களைத்தான் தேடிக்கொண்டு வந்து ரொம்ப நாழியாகக் காத்துக்கொண்டிருக்கிறார் பாவம். இந்தப் பெரிய பெரிய சமாசாரங்களைப்பற்றி நமக்கென்ன தெரிகிறது? நம்ப மூளை வேலை செய்கிறதா இதுக்கெல்லாம்?" என்றார் அத்திம்பேர் மறுபடியும்.

நான் வந்து ஸோபாவில் உட்கார்ந்துகொண்டதும் வந்திருந்த அந்த நண்பர் என்னைப் பார்த்து ஒரு கும்பிடு போட்டுவிட்டு, "எங்கே, ஆபீசிலிருந்து வராப்பலேயோ?" என்றார்.

"ஆமாம், தாங்கள் யார் என்பதைத் தெரிந்து கொள்ளலாமோ நான்?" என்றேன்.

"ஒன்றுமில்லே, உங்களை ஆபிசிலே வந்து பார்க்கப் பிடிக்கவில்லே. அதுதான் இங்கே வந்தேன். நீங்க தயவு செய்யணும்" என்றார் அவர்.

"சரி, என்ன செய்யணும்?" என்றேன்.

"ஒன்றும் இல்லே. நீங்க எங்காத்துக்குத் தயவு பண்ணணும். எப்போ உங்களுக்குச் சௌகரியப்படும்?" என்றார் அவர்.

"இதுதானா பிரமாதம்? அதற்கென்ன, கட்டாயம் வருகிறேன். நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்?" என்றேன்.

"அவர் தம் விலாசத்தை எழுதி என் கையில் கொடுத்துவிட்டு, "ஆபீசுக்குப் பக்கத்தில்தான். அதற் காக ஒன்றும் சிரமமில்லே. நீங்கள் எப்போது வருகிறீர் கள் என்று தெரிய வேண்டும். உங்களுக்காகக் காத்துக் கொண்டிருப்பேன்" என்றார்.

"ஆகட்டும். முடிந்தால் நாளை மாலையில் வருகிறேன்" என்று சொல்லிவிட்டு அவரை வழி அனுப்பிவிட்டு வந் தேன். அன்று அக்கா வீட்டில் ஒரு விசேஷ சம்பவம் நடந்தது. 'நம்ம ஊரில்தான் எத்தனையோ விதம் என் றால் இங்கே இவ்வளவு நாகரிகமான இடத்தில்கூட இதெல்லாம் இருக்கிறதா?" என்று எனக்கே அதிசயமாக இருந்தது. சாப்பிட்டுவிட்டு நாங்கள் எல்லோரும் உட் கார்ந்துகொண்டு வேடிக்கையாகப் பேசிக்கொண் டிருந்தோம். அப்போது வேலே ஆள் ஒருவன் உள்ளே வந்து, "அம்மா, பழைய டில்லியிலிருந்து அந்த அம்மா வந்திருக்காங்க" என்றான்.

"யார்?" என்றார் அத்திம்பேர்.

அக்கா உடனே பதில் சொல்லுவதற்குச் சற்றுத் தயங்கினாள். அவளுடைய தோற்றத்தில் ஒரு விதமான பயமும் அருவருப்பும் தோன்றின.

தனக்குள்ளேயே ஏதோ மொண மொணத்துக் கொண்டு எழுந்தாள்.

"வேறு யார்? வந்துவிட்டாளா சுப்பி! இனிமேல் அமர்க்களந்தான். மரியாதையாகப்போகச் சொன்னாயோ

பிழைச்சே. இல்லாட்டா உன்னையும் அவளுடன் அனுப்பி விடுவேன்; தெரியுமா? இதென்ன? கேள்வி முறையற்ற மடம் என்று நினைத்துக்கொண் டிருக்கிறீர்களோ எல்லாரும்?'' என்று அத்திம்பேர் சத்தம் போட்டார்.

இன்னது என்று எனக்குப் புரியவில்லை. அக்கா எழுந்து போனதும், 'என்னது? பார்த்துவிட்டு வரலாம்' என்று நினைத்துக்கொண்டு நானும் உள்ளே சென்றேன்.

நாற்பது வயது இருக்கும். ஓர் அம்மா போர்வை எல்லாம் அமர்க்களமாகப் போர்த்துக்கொண்டு அக்காவின் எதிரில் நின்றுகொண் டிருந்தாள். அவள் எப்படி இருக்கிருள்; யார்? என்பதை நான் கவனிப்பதற்குள் அக்கா அவளைப் பேசவே விடவில்லை. அவளையும் அழைத்துக் கொண்டு சென்று ஓர் அறையில் பேசிக்கொண் டிருந்தாள். ஒன்றும் சரியாகக் காதில் விழவில்லை.

எனக்கென்ன தெரியும் இதெல்லாம்? ''யார் அத்திம்பேரே அவள்?'' என்று கேட்டதற்கு அவர் பிரமாதமாகக் கோபித்துக்கொண்டு விட்டார்:

''வரவர இந்த வீட்டில் நான் ஒரு புருஷன் இருக்கிறேன் என்ற மரியாதையே இல்லாமல் போய்விட்டது. ஊரில் இருக்கிறதுகளை எல்லாம் கட்டிக்கொண்டு அழ இதுதானு இடம்? சொன்னுல் உங்கள் அக்காவுக்கு ஏதாவது புரிந்தால்தானே? வரவரப் பைத்தியந்தான் பிடித்துவிட்டது. இதுகளிடமெல்லாம் நடுங்கிச் சாகணுமா? கஷ்டம்! நீயே பார்த்துக்கொள், உங்க அக்காவின் சமத்தை!'' என்று அவர் சத்தம் போட்டுக்கொண் டிருக்கும்போது நான் பேசாமல் படுக்கைக்குப போய் விட்டேன்.

அன்றைப் பொழுதே சண்டையும் பூசலுமாக இருந்தது.

''அந்தச் சனியனை முன்னுல் அனுப்பப் போகிருயா இல்லையா வீட்டை விட்டு?'' என்று அக்காவை அதட்டினுர் அத்திம்பேர்.

"இதென்னடா இழவாய் இருக்கிறது? நானு இவர் களையெல்லாம் அழைக்கிறேன் இங்கே? வந்து உட்கார்ந்து கொண்டு கல்விடிமங்கன் போல் பிராணனை எடுத்தால் நான்தான் என்ன செய்கிறது? எல்லாம் வேறுமென்று பண்ணுவதுபோல் பேசுகிறுரே உங்க அத்திம்பேர்" என்று அக்கா என்னைப் பார்த்துச் சொன்னாள்.

"ஆமாம்! எல்லாம் நீ கொடுக்கிற இடந்தான். நீ கண்டிப்பாக இருந்தால் இப்படித் தலைக்குமேல் ஏறு வார்களா? அந்த ஜானகிக்குந்தான் புத்தி எங்கே போய் விட்டது? இப்படியா இருப்பார்கள் எல்லோரும்? நான் ஆபிஸிலிருந்து வருவதற்குள் எங்கேயாவது தொலைந்து விடச் சொல்லு! தெரிந்ததா? இல்லாமல்போனால் நான் எங்கேயாவது தொலைந்துபோகிறேன்" என்று கோபித் துக்கொண்டு ஆபீசுக்குக் கிளம்பினர்.

இதென்ன விஷயம் என்று தெரிந்து கொள்ள வேண்டுமென்று இருந்தாலும் நானும் அவருடன் புறப் பட வேண்டும். என்னை ஆபிசில் இறக்கி விட்டுவிட்டு அத்திம்பேர் போய்விட்டார்.

# 15

## சுரங்கம்

மறுநாள் ஆசிரியர் எனக்குக் கடிதம் எழுதும் வேலையைக் கொடுக்கவில்லை. வந்த கட்டுரைகளையும், கதை, கவிதைகளையும் ஒரு கத்தையாகக் கட்டி என்முன் போட்டார். "இவைகளை எல்லாம் பார்த்துக் குறித்துக் கொண்டு நன்றாய் இருப்பவைகளைப் பொறுக்கி எடு. ஒவ்வொன்றும் ஒரு பெரிய ராமாயணமாக இருக்கிறது" என்று சொன்னார்.

உண்மையாக எல்லாவற்றையும் படித்துப்பார்த்ததில் எனக்கும் அவர் கூறுவது சரியாகவே பட்டது. இரண்டு மூன்று கட்டுரைகளையும் கதைகளையும் பொறுக்குவது எவ்வளவு சிரமமான காரியம் என்பதை அப்போதுதான் உணர முடிந்தது. மூன்று நான்கைப் பொறுக்கி ஆசிரியர் முன்பு போட்டேன். அந்தச் சமயத்தில் எங்களைப் பார்க்க ஒருவர் வந்தார்.

"வாங்கோ, வாங்கோ; எங்கே அதிசயமாக இருக்கு!" என்று நம் ஆசிரியர் அவரை வரவேற்றதைப் பார்த்ததும் அவருக்கு வெகு நாட்களாகப் பழக்கமுள்ளவரோ என்று நினைத்தேன்.

"உங்களிடமிருந்து ஒன்றும் பதிலைக் காணோமே: பார்த்துவிட்டுப் போவோம் என்றுதான்" என்றார் அவர்.

"ரொம்ப சந்தோஷம். உங்களுடைய கட்டுரையைப் பார்த்துவிட்டேன். மிகவும் நன்றாக இருக்கிறது. கட்டாயம் இந்த இதழில் வந்துவிடும். நீங்கள் உலகத்தில் எழுதியிருப்பது ரொம்ப முதல் தரம் ஸார். அதை ஏன் நமக்கு அனுப்பவில்லை!" என்றார் ஆசிரியர்.

எல்லாக் கத்தையையும் என்னிடம் கொடுத்திருந்தவர் எப்படி இந்தக் கட்டுரையைமட்டும் படித்தார் என்பது எனக்குத் தெரியவில்லை. "இல்லையே! இன்னும்

நீங்கள் பார்க்கவில்லையே. எல்லாம் என்னிடம் அல்லவா இருக்கின்றன" என்றேன்.

"உச்..... பேசாமல் இரு. உனக்கு என்ன தெரியும் அவரைப்பற்றி? அவருடையதைத்தான் படிக்க வேண்டியதே இல்லையே! எங்கே எடு அதை" என்று ஆசிரியர் கட்டிலிருந்து அதைமட்டும் பொறுக்கி எடுத்துக் கொண்டார்.

"நீங்கள் மறுபடியும் எழுதும்படி அவ்வளவு சிரமத்தை உங்களுக்குக் கொடுக்கக் கூடாதென்றுதான் அனுப்பிவைத்தேன். வெளியில் நம்ம பாரதிக்கு என்ன மதிப்புத் தெரியுமா? அப்படி எல்லோரும் பறக்கிறார்கள். உங்களைப்போல் ஓர் ஆசிரியர் அமைந்து விட்டால் பிறகு கேட்க வேண்டுமா ஐயா? ராஜன் அவர்களுடைய அதிருஷ்டம்" என்றார் அந்த நண்பர்.

"உங்களைப்போல் நான்கு எழுத்தாளர்கள் இருக்கும் வரையில் எனக்கு என்ன ஸார் குறைவு? எல்லாம் உங்கள் தயவு. அவர், ஐயாசாமியைப் பார்த்தீர்களா நீங்கள்? இன்றைக்கு ஊருக்குப் போகிறாராமே?" என்றார் ஆசிரியர். இவர்கள் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டு என் மனம் எங்கேயோ வேலை செய்துகொண்டிருந்ததே தவிர வேலையில் செல்லவில்லை. இந்தச் சில நாள் அநுபவத்தில் அனேகமாக நம்ம ஆபீசுக்கு வருபவர் எல்லோரையும் தெரிந்துகொண்டு விட்டதாகவே நான் நினைத்துக்கொண்டிருந்தேன். ஆனால் இன்று பார்த்த இவர் யார் என்பது தெரியாததோடு ஐயாசாமி யார் என்பதையும் தெரிந்துகொள்ளும் சந்தர்ப்பம் இன்னும் வாய்க்கவில்லை.

கட்டுரை, கதையைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்ததால் எழுத்தாளர் என்று நிச்சயம் செய்துகொள்ள முடிந்தது.

ஆசிரியர் வைத்துக்கொண்டிருந்த கட்டுரையை எடுத்துப் படித்துப் பார்த்தேன். முதலில் எனக்கே பிடித்தால்தானே? ஒன்றும் இல்லாமல் ஒரு பக்கமா?

'அவளுக்கு வயது அறுபது இருக்கலாம். தலையில் ஒட்டிக்கொண்டிருந்த இரண்டொரு மயிரும் நாணல் பூவைப் போல் நரைத்துக்கிடந்தது. அவளுடைய வயதை அவள் பொக்கைவாய் நன்றாக எடுத்துக் காட்டியது. இப்படி ஒரு பக்கம்.

ஒரு வரியில் எழுதுவதை வளர்த்துவதா எழுத்தாளர்களின் சிறப்பு? ஆசிரியர் என்ன நினைத்தாலும் எழுத்தாளரின் பொறுப்பு இவ்வளவு கேவலமாக இருக்க வேண்டுமென்று எனக்குப் படவில்லை. ஒரு சிறு சம்பவமானாலும் அதை விறுவிறுப்புடன் சித்திரித்து வாசகர்களைக் கடைசிவரையிலும் தங்களுடன் இழுத்துச் செல்லுபவர்தான் எழுத்தாளர் என்ற உறுதியான ஒரே அபிப்பிராயம் என் மனத்தில் பதிந்தது.

அதற்குள் அந்த நண்பர், "நான் போய் வரட்டுமா? ஐயாசாமியைக் கட்டாயம் பார்க்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே கிளம்பினார்.

ஆசிரியர் ஏதோ பேசிக்கொண்டே அவரை வாசல் வரையில் அழைத்துக்கொண்டுபோய் விட்டுவிட்டு வந்தார்.

"இதைவிட இது இன்னும் சற்று நன்றாக இல்லையா, ஸார்? நீங்கள் பார்க்கவில்லைபோல் இருக்கிறதே?" என்று ஒரு கட்டுரையை அவரிடம் நீட்டினேன்.

"நன்றாய் இருக்கிறதென்று எப்படிச் சொல்ல முடியும்? தகுந்தவர்களாய், நல்ல பிரசித்தி பெற்ற எழுத்தாளர்கள் எழுதுவதைப் பிரசுரம் செய்தால்தான் நம்ம பத்திரிகைக்கு நல்ல பெயர் இருப்பதுடன் வியாபாரமும் இருக்கும். நீ சிறு பையன். உனக்கு என்ன தெரியும் இதெல்லாம்?" என்றார் அவர்.

"இதை எல்லாமா நாம் முதலில் பார்க்க வேண்டும்? ஆசிரியர் என்றால் விஷயங்களைப் பொறுக்கிப் பிரசுரம் செய்வதல்லவா நம்ம வேலை? நல்ல சிறு கதைகளைப்

பிரசுரம் செய்தால்தானே ஸார், வாசகர்களுக்கு மிகவும் விருப்பமாக இருக்கும்?'' என்றேன்.

இதைக் கேட்டதும் ஆசிரியர் மெள்ளச் சிரித்துக் கொண்டார். "எல்லாந்தான். நம்மைக் கூடத்தான் பார்த்துக்கொள்ள வேண்டும். நீ இப்போதுதானே உலகத்தில் கண்ணை விழிக்கிறாய்'' என்றார் சிரித்துக் கொண்டே.

இப்படி எதையோ பேசிக்கொண்டே அன்றைப் பொழுது போய்விட்டது. மற்ற நாட்களைவிட இன் றும் சீக்கிரமாகவே ஆசிரியர் கிளம்பிவிட்டார். இதழுக்கு அவர் பொறுக்கி எடுத்து வைத்த கட்டுரைகளை எல்லாம் திருத்திவிட்டு நான் கிளம்பியபோதும் மணி ஆகவில்லை. அத்திம்பேர் வருவதற்கும் இன்னும் நேரம் இருந்தது. 'அந்த நண்பர் அழைத்துவிட்டுப் போனாரே; அவரைப் பார்த்துவிட்டு வரலாம்' என்று கிளம்பினேன். அவர் கொடுத்த விலாசம் அங்கிருந்து வெகு தூரம் இல்லை. கால் நடையாகவே போய்விடலாம். வெயிலும் தாழ்ந்து குளிர்ந்திருந்ததால் கால் நடையாகவே அங் கிருந்து கிளம்பினேன். நல்ல வியாபாரம் நிறைந்த இட மானதால் தெருவில் இரு பக்கங்களிலும் மெத்தைகளில் கடை கண்ணிகளைத் தவிர வேறு ஒன்றும் கண்ணிலேயே படாது. அவ்விடத்தில் ஒரு பெரிய புத்தகக் கடை உண்டு. அங்கே எந்தப் புத்தகம் வேண்டுமானாலும் கிடைக்கும்.

"சிறு கதைகளை எப்படி எழுதுவது?'' என்பதைப் பற்றி ஒரு புத்தகத்தைப் படிக்க வேண்டுமென்ற ஆவல், ஆசிரியர் பதவிக்கு வந்தது முதல் உண்டாயிற்று, எனக்கு. புத்தகக் கடையைப் பார்த்தவுடன், 'ஏதாவது கிடைக்குமா பார்க்கலாம்?' என்று கடையில் நுழைந்தேன். எல் லாப் புத்தகங்களையும் அப்படியே வாங்கிவிட வேண்டும் போல் இருந்ததே தவிர ஒன்றையும் வேண்டாம் என்று தள்ள மனம் வரவில்லை. பார்த்துக்கொண்டே இருந்த போது யாரோ ஒரு வாலிபர் என்னைப் பார்த்துக் கும் பிடு போட்டார். அவர் யார் என்பது எனக்குத் தெரிய வில்லை; நல்ல உயரமாக அழகாக இருந்தார். மாணவர் என்றே தோன்றியது.

வந்தவர் என்னுடைய கையைப் பிடித்து உலுக்கிக் கொண்டே, "நீங்கள் பராசக்தியின் உதவி ஆசிரியர் அல்லவா? உங்களைக் காண நேர்ந்தது மிகவும் சந்தோஷம்" என்றார்.

முன் பின் தெரியாதவர்! அவருக்கு என்ன கூறுவ தென்று தெரியவில்லை. "ரொம்ப சந்தோஷம்" என்றேன்.

"என்ன புத்தகம் தேடுகிறீர்கள்?" என்றார் அவர்.

"ஒன்றும் இல்லை. பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன்" என்றேன். ஏனென்றால், 'சிறு கதைகள் இவ் விதம் இருக்க வேண்டும் என்று இவனுக்கே தெரியா விட்டால் இவன் ஆசிரியனா!' என்று அவர் நினைத்துக் கொண்டுவிடப் போகிறாரே என்று சங்கோசமாக இருந்தது.

"இதோ ஸார், நீங்கள் கேட்ட புத்தகம்" என்று கடைக்காரன் ஒரு புத்தகத்தை என் எதிரில் வைத்தான். அப்போது எனக்கு வந்த ஆத்திரம் அவனை அப்படியே அறைந்துவிடலாம்போல் இருந்தது. "இது இல்லையே நான் கேட்டது" என்று மழுப்புவதற்குள், "இதை என்னத்துக்கு ஸார் வாங்க வேண்டும்; தண்டம். வாருங் கள் என்னுடன். எந்தப் புத்தகம் வேண்டுமானாலும் தருகிறேன்" என்றார் புது நண்பர்.

"எனக்குப் புத்தகம் ஒன்றும் அவசியம் இல்லை, ஸார். பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன். அவ்வளவு தான். ஒரு நண்பரைச் சந்திக்க வேண்டும். அவர் எனக் காகக் காத்திருப்பார். நான் போய் வருகிறேன். நமஸ் காரம்" என்று கிளம்பினேன்.

"இல்லை ஸார், நானும் உங்களை வந்து பார்க்க வேண்டுமென்று வெகு ஆவலாக இருந்தேன். இன்று கட்டாயம் என்னுடன் வந்துவிட்டுத்தான் போக வேண் டும். இதோ இந்த மெத்தைதான் நான் இருப்பது" என்று சொல்லிக்கொண்டே எதிரில் உள்ள மெத்தையைக் காண்பித்தார். எனக்கு அவ்விடம் செல்ல வேண்டும் என்ற எண்ணம் ஒன்றும் இல்லை, "இதோ பாருங்கள்;

இந்த விலாசத்துக்குப் போக வேண்டும். அதுவும் இங்கே தான்போல் இருக்கிறதே?" என்றேன். அவர் சீட்டைப் பார்த்துவிட்டு, "ஓகோ இவரா? ஐயாசாமி! என் அறைக்குப் பக்கத்தில்தான். வாருங்கள் போகலாம்" என்று என்னைக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு சென்றார். 'ஒரே கல்லில் இரண்டு மாங்காய்கள்' என்பார்களே? அதுதான் எனக்கு ஞாபகம் வந்தது. இந்த ஐயாசாமியையும் மற்றொருவரையும் பார்க்க வேண்டுமென்று பகலில்தான் நினைத்துக்கொண்டேன். அவரும் அவ்விடத்திலேயே இருக்கிறார் என்றதும் என் கால்கள் பரபரவென்று நடந்தன.

ஒரு பெரிய மெத்தையில் வாடகைக்கு அநேக அறைகள் இருந்தன. அவைகள் ஒவ்வொன்றும் தனித் தனியே பூட்டுப் போடப்பெற்றிருந்தன.

அறைக்கு நடந்துகொண்டே,' உங்கள் பெயர் ஸார்?" என்றேன்.

"என் பெயர் சந்தர்" என்றார் அவர்.

"ஐயாசாமி என்பவரை உங்களுக்குப் பரிசயமா?" என்றேன்.

"அடேயப்பா! பலே ஆசாமின்னு அவர்! எல்லா ஆசிரியரையும் ஒரு கை பார்த்துவிடுவார். அதற்குத் தான் இங்கே வந்திருக்கிறார். அது தெரியாதா உங்களுக்கு விஷயம்? இன்று உங்களைப்பற்றிக்கூடப் பேசிக்கொண்டிருந்தாரே?" என்றார் அவர்.

எனக்குத் தெரியாத ஒருவர் என்னைப்பற்றி எப்படிப் பேசிக்கொண்டிருக்க முடியும் என்பது எனக்குத் தெரியவில்லை.

"என்னைப்பற்றி என்ன சொன்னார்?" என்றேன்.

"ஒன்றும் தப்பாகச் சொல்லிவிடவில்லை. அதற்குள் பயந்துவிடாதீர்கள். 'மிகவும் படித்தவர், நல்ல அநுபவமுள்ளவர்' என்று பெருமையாகத்தான் சொல்லிக்கொண்டிருந்தார்" என்றார் சந்தர்.

"அவருக்கு நண்பர் ஒருவர் இருக்கிருரே, எழுந்தாளர், அவரை உங்களுக்குத் தெரியுமா? அவரும் இங்கே தான் இருக்கிருரா?" என்றேன் நான்.

காலையில் ஆபீசுக்கு வந்தாரே அவரையும் இவருக்குத் தெரிந்திருக்கலாம் என்று நினைத்தேன். அதற்குள் நாங்கள் இருவரும் அவருடைய அறையில் சென்று உட்கார்ந்தோம். சந்தர் எங்கள் இருவருக்கும் காபி கொண்டுவரச் சொன்னர்.

காபியைச் சாப்பிட்டுக்கொண்டே, "யாரைக் கேட்கிறீர்கள்? கேட்டை என்று பெயர் வைத்துக்கொண்டு எழுதுகிருரே அந்தப் பேர்வழிதானே?" என்று கேட்டார்.

"ஆமாம், ஆமாம். அவர் பெயர்?"

"அவர் பெயர் கிருஷ்ணன். ஐயாசாமியும் அவரும் ஒரு நிமிஷம் பிரிந்திருக்கமாட்டார்களே? இப்போதும் அங்கேதான் போயிருக்கிருர் ஐயாசாமி."

"அவர் இல்லையா ஆனல்?" என்றேன்.

"இதோ வந்துவிடுவார். என்னிடங்கூடச் சொல்லி விட்டுத்தான் போனர். அடையாளங்கள் எல்லாவற்றையும் பார்த்துத்தான் நான் உங்களைக் கண்டுபிடித்தேன். நீங்கள் எந்த விஷயமாக அவரைப் பார்க்க வேண்டும்?" என்று கேட்டார் சந்தர்.

என்ன விஷயம் என்பது எனக்கே தெரிந்தால்தானே? "நேற்று வீட்டுக்கு வந்திருந்தார். ஏதோ பேச வேண்டுமென்று இங்கே வரும்படி கேட்டுக்கொண்டார். அருகில் தானே இருக்கிருர் என்று வந்தேன். வர இன்னும் நேரம் ஆகுமோ?" என்றேன் நான்.

"இல்லை, இல்லை; இதோ வந்துவிடுவார். இதோ பாருங்கள். நீங்கள் தேடிய புத்தகம் என்னிடம் இருக்கிறது. என்று ஒரு புத்தகத்தை என் முன் எடுத்து வந்து வைத்தார் அவர்.

அவர் இருந்த அறை மிகவும் சிறியதாக இருந்தாலும் வெகு அழகாக வைக்கப்பட்டிருந்தது. சுவரில் எங்கே பார்த்தாலும் அலமாரிகள் மாட்டியிருந்தன. அவை களில் எவ்வளவு புத்தகங்கள் இருந்தனவோ கணக்கே எடுக்க முடியாது.

"புத்தகம் என்ருல் பைத்தியம்போல் இருக்கிறதே உங்களுக்கு?'' என்று கேட்டேன் அவரை.

இதைக் கேட்டதும் அவர் சிரித்துக்கொண்டார். "எனக்கும் நன்ருக ஏதாவது எழுத வேண்டுமென்று மிகவும் ஆசை. இதைப் பாருங்கள். ஒரு சிறு கதை எழுதி யிருக்கிறேன்'' என்று சொல்லிக்கொண்டே ஒரு கத்தையை என்னிடம் எடுத்து வந்து கொடுத்தார். சந்ருடைய சுபாவத்தையும் மரியாதையையும் பார்த்து எனக்கு மிகவும் சந்தோஷமாகவே இருந்தது. அவர் கொடுத்த சிறு கதையை ஏன் படிக்க வேண்டும் என்று தோன்ற வில்லை. படித்துப் பார்த்துவிட்டு, "மிகவும் அருமையாக அமைந்திருக்கிறது. உங்களுக்கு இந்த விஷயம் எப்படிக் கிடைத்தது எழுத?'' என்றேன். அவர் அதனுல் பெருமை அடைந்தவர்போல் காண்பித்துக்கொள்ளவில்லை.

"என்ன ஸார்? எல்லாம் நம்ம வாழ்க்கையிலே வேண்டியது இருக்கிறது. இதற்கு எங்கேயோ தேடிக் கொண்டு போக வேண்டுமா என்ன? நானும் இவ்வளவு புத்தகங்களையும் நன்கிருகப் புரட்டிவிட்டேன். நமக்கு வேண்டியது என்ன கிடைத்துவிடுகிறது என்று நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள்? அதை எடுத்து எழுதினுலும் நம்முடைய சித்திரத்துக்கு வேண்டிய குணங்கள் எங்கே கிடைக்கின்றன, என்கிறீர்கள்? வாழ்க்கையில் நம்மைச் சுற்றிலும் உள்ள சம்பவங்களை உணர்ச்சியுடன் எழுதினுல் ஏன் ஸார் நன்ருக இல்லாமல் போகும்? என் நண்பர் ஒருவரைப் பார்ப்பதற்குப் போயிருந்தபோது அவருடைய தகப்பனுர் மிகவும் அபாயமான நிலையில் இருந்தார். அப்போது அங்கே இருந்த நிலையைக் கண்டு என் மனத்தில் தோன்றியதை ஒரு கதையாக எழுதினேன். அவ்வளவுதான்'' என்று அவர் சொன்னபோதுதான் அவருக்குச் சற்றுப் பெருமையாக இருந்தது.

"நாளைக்கு ஆபீசுக்கு வாருங்கள். ஆசிரியரைப் பார்த்துச் சொல்லுகிறேன். கட்டாயம் வாருங்கள்" என்றேன் நான்.

இதைச் சொல்லி முடிப்பதற்குள், "இதோ வந்துவிட்டாரே" என்று எழுந்திருந்தார் சந்தர்.

கும்பிடு போட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தார் ஐயாசாமி என்னும் ஆசாமி.

"என்ன ஐயா, என்னை வரச்சொல்லிவிட்டு எங்கேயோ போய்விட்டீர்களே?" என்றேன் நான்.

"ரொம்ப நாழியாகக் காத்துக்கொண்டிருக்கிறீர்களோ? மன்னித்துக்கொள்ள வேண்டும். நம்ம கிருஷ்ணன் தெரியுமோ இல்லையோ உங்களுக்கு?" என்றார் அவர்.

"இப்போதுதான் நான் அவருக்குச் சொன்னேன். அவருடைய சொந்தப் பெயரைப்பற்றி இவ்வளவு நாள் அவர் கவலைப்படவில்லைபோல் இருக்கிறது. எழுத்தாளர் என்றால் அவருடைய புனைபெயர் அல்லவா நிலைத்துவிடுகிறது" என்றார் சந்தர்.

"ஐயாசாமி சிரித்துவிட்டு, "வாருங்கள், நம்ம அறைக்குப் போகலாம்" என்று என்னை அழைத்துக்கொண்டு அவருடைய அறைக்குச் சென்றார்.

"நாம் எல்லோரும் ஒருவரை அண்டி ஒருவர் பிழைக்கிறவர்கள், என்ன?" என்று அவர் ஆரம்பித்தபோது எதைப்பற்றிக் கூறப்போகிறார் என்பதே என் மூளைக்குச் சிறிதும் எட்டவில்லை.

"ஆமாம், அதற்கென்ன?" என்றேன் ஒன்றும் புரியாமல்.

"அதைத்தான் சொல்ல வந்தேன் இப்போது. நீங்கள் தயவுசெய்து ஆசிரியரிடம் சொல்லிச் செய்ய வேண்டும். நம்ம கிருஷ்ணனைப் போன்ற எழுத்தாளர்களை நீங்கள் தயவு செய்து தூக்கி வைத்தால் நமக்கும் எவ்வளவோ விதத்தில் ஒத்தாசையாக இருக்கும். உங்களுக்கும் ஒரு லாபம். இதைச் சொல்ல வேண்டும் என்றுதான் உங்கள் வீட்டுக்கு வந்தேன். நீங்களெல்லாம் கொடுத்தால்தானே

எங்களுக்கும் ஒரு பிழைப்பு. சிறு கதைகளைப் பொறுக்கி ஒரு புத்தகமாகப் போட வேண்டும் என்றுதான். அங்கே நம்ம ஊரில் எல்லோரையும் பார்த்துவிட்டேன். உங்களுடைய பத்திரிகையிலிருந்து வந்தால்தானே எனக்கும் திருப்தி? கொஞ்சம் பார்த்துச் சௌகரியமாகச் செய்ய வேண்டும்'' என்று முடித்தார் அவர்.

இதைக் கேட்டதும் எனக்கு ஒரு பக்கம் சிரிப்பும் ஒரு பக்கம் அழுகையும் வந்தது.

என் மனத்தில் என்ன இருந்தாலும் அவரிடம் என்ன சொல்ல முடியும்? நான் ஒன்றைச் சொல்லப்போக வேறு இன்னும் என்ன வருமோ என்று பயமாக இருந்தது. ''ரொம்ப சரி. ஆகட்டும். ஆசிரியரிடம் கட்டாயம் சொல்லுகிறேன்'' என்று சொல்லிவிட்டுச் சந்திரிடமும் விடை பெற்றுக்கொண்டு கிளம்பினேன்.

நான் ஆபீசுக்குத் திரும்பியபோது வெகு நேரம் ஆகிவிட்டது. அத்திம்பேர் வந்து சிறிது நேரம் காத்துக் கொண்டிருந்துவிட்டுப் போய்விட்டார் என்று சேவகன் கூறினான்.

வீட்டுக்கு வந்தால் காலையில் இருந்த நிலைமைக்கு எப்படி இருக்குமோ என்று யோஜனைதான். வந்து பார்த்தால் குழந்தைகளும் ஆட்களும் மாத்திரம் இருந்தார்களே ஒழிய அக்காவையும் காணவில்லை; அத்திம்பேரையும் காணவில்லை. குழந்தைகளைக் கேட்டால் விஷயம் ஒன்றும் தெரியவில்லை.

முகத்தைக் கழுவிக்கொண்டு வந்து உட்கார்ந்தபோது சமையல்காரன், ''நீங்கள் சாப்பிடுகிறீர்களா?'' என்று கேட்டான்.

'ஒருவரையும் காணவில்லை. எனக்கு மட்டும் சாப்பாட்டுக்கு என்ன அவசரம்?' எனக்கு ஒன்றும் தோன்றவில்லை.

''அம்மா எங்கே? இன்றும் அத்திம்பேர் வரவில்லையா?'' என்றேன். அவன் நம்ம ஊரிலிருந்து வந்தவன். அக்கா வீட்டில் வெகு வருஷங்களாக வேலை செய்து கொண்டு வருகிறான். அவனுக்கு வீட்டு விஷயம் எதுவானு

லும் நன்றாகத் தெரியும். நான் கேட்டதும் அவன் ஒன்றும் பதில் சொல்லவில்லை. முகத்தைச் சுளுக்கிக் கொண்டு பேசாமல் நின்றான். எனக்கு ஒன்றும் புரிய வில்லை.

"ஆபீஸிலிருந்து எங்கேயோ வெளியில் போயிருந் தேன். வருவதற்குள் அத்திம்பேர் வந்துவிட்டுப் போய் விட்டார் என்று சொன்னார்கள். ஓடி வந்தேன். இங்கே வந்தால் ஒருவரையும் காணவில்லையே. எங்கேயாவது வெளியே போயிருக்கிறார்களா? என்ன விஷயம் சொல் லேன்?" என்றேன் மறுபடியும்.

அவன் வாசல் வரையிலும் ஒரு தடவை சென்று பார்த்துவிட்டு வந்தான். பிறகு, "இங்கே வாருங்கள் பேசலாம்" என்று என்னை உள்ளே சாப்பாட்டுக் கூடத் துக்கு அழைத்துக்கொண்டு போனான். 'என்ன சொல்லு கிறான் பார்ப்போம்' என்று நானும் எழுந்து சென்றேன்.

"நான் சொல்லுகிறேன் என்று நீங்கள் கோபித்துக் கொள்ளக்கூடாது, என்ன? வரவர நம்ப அம்மாவுக்கு ஒன்றுமே தெரியவில்லை" என்று ஆரம்பித்தான் அவன்.

"இவ்வளவு நாள் இல்லாமல் இப்போது என்ன வந்துவிட்டது புதுசாய்?" என்றேன் நான்.

"ஐயாவுக்குத்தான் ஒன்றும் தெரியவில்லை; பொ றுப்பில்லை என்றால் அம்மாவும் இப்படியே இருந்தால் எப்படி ஸார் போகிறது? இதையெல்லாம் நாம் சொன் னால் நன்றாக இருக்குமா?"

"அப்படிப் பொறுப்பு இல்லாமல் என்ன செய்து விடுகிறார்கள் என்கிறாய் நீ? சொல்லுவதைச் சரியாகச் சொல்லேன்" என்றேன் நான்.

"என்ன ஸார், வீட்டைப் பார்ப்பதில்லை, குழந்தை களைப் பார்ப்பதில்லை; எப்போ பார்த்தாலும் சத்திரமா இந்த வீடு? யார் வந்தாலும் எப்படி வேணுமோ அப்படி நடக்கணும்! ஒருத்தரா இரண்டு பேரா? வந்தவா ஒரு நாளைக்கின்னு பத்து நாள் இருக்கா. வந்தால் யாருக் காவது போக மனசு வரதாங்கறேளா நீங்க? இந்த ஊரிலே எல்லாருடைய வீட்டையும் போய்ப் பார்த்தாட்டு

வாங்கோ. இப்படி நடக்குமா எங்கேயாவது? அவர்கள் ஒன்று கேக்கறத்துக்கு முன்னால் இங்கே மூனு பண்ணிக் கொடுக்கணும். இல்லாவிட்டால் நமக்குப் பிடித்தது சனி!'' என்று அவன் சொன்னான்.

''அதற்காக என்ன? அத்திம்பேரும் தாராளம், அக்காவும் அதற்கு மேலே. இரண்டு பேரும் சேர்ந்தால் வீடு எப்படி இருக்கும், சொல்லு?'' என்றேன்.

செலவைப்பற்றி யார் சொல்றா ஸார்? நமக்கு வேண்டிய விஷயங்களைக் கவனிக்காமல் ஊருக்கெல்லாம் நல்ல பெயர் எடுத்தும் பிரயோஜனம் என்ன? இந்தக் காலத்தில் இதையெல்லாம் நினைக்கிறவா யார்? யாராவது ஓடி வரப்போகிறார்களா நமக்குச் சமயத்தில்? சொல்லுங்கள்'' என்று அவன் பேச்சை மேலும் வளர்த்துக்கொண்டு போனானே ஒழிய விஷயத்தை ஒன்றும் சொல்லுவதாய் இல்லை.

''அதெல்லாம் கிடக்கட்டும். இப்போது அக்கா எங்கே போயிருக்கிறாள்? இரண்டு பேரும் சேர்ந்தா போனார்கள்?'' என்றேன் நான்.

''அதை ஏன் கேட்கிறீர்கள்? ஐயர் வந்த உடன் ஒரு பெரிய அமர்க்களம் நடந்தது. எல்லாம் அந்த அம்மா ஒருத்தி இருக்கிறாளோ இல்லையோ அந்த இழவுதான். அவள் என்னிக்கி வராமல் இருக்கப் போகிறாளோ அன்னிக்கித்தான் நம்ம வீடும் சந்தோஷமாக இருக்கப் போகிறது'' என்றான் அவன்.

''யார் அந்த அம்மா?''

''அது அம்மாவா? ஒரு பிசாசு. அங்கே அவர்கள் வீட்டில் ஒன்றும் நடக்கிறதில்லை என்று இங்கே வந்து விடுகிறது. நம்ப அம்மாவுக்கு ஏதாவது தெரிகிறதா? 'போ' என்று சொல்லுவதற்கென்ன?''

''அடே, அவள் யார் என்றால் அதை ஒன்றும் சொல்ல மாட்டேன் என்கிறாய். நீ பாட்டில் பேசுகிறாயே!''

''அந்த வயிற்றெரிச்சலைக் சொல்லுகிறேன் கேளுங்கள். ஐயருடைய சிநேகிதர் மணி வருகிறாரோ இல்லையோ இங்கே?'' என்று அவன் சொன்னபோது வண்டி வந்த

சத்தம் கேட்டது. கதவைத் திறந்ததும் அக்கா உள்ளே நுழைந்தாள்.

"அத்திம்பேர் வரவில்லை?" என்றேன் நான்.

"வரவில்லையா இன்னும்? இப்படிக் கோபித்துக் கொள்ளுகிறாரே என்றுதான் அவனை அங்கே கொண்டு போய்த் தொலைத்துவிட்டு வரலாம் என்று போனேன். அப்பப்பா! வரவர என்னாலும் ஒன்றும் முடியவில்லை. போனால் போகிறது என்று வாயை மூடிக்கொண் டிருந்தால் எல்லாம் தலைமேல் ஏறுகிறது. ஒரு புருஷன் இருக்கிறானே என்றுகூடப் பார்க்காமல் இப்படி வருகிறவர்களை நான்தான் எவ்வளவு தடுப்பது?" என்று உட்கார்ந்தாள் அக்கா. இந்த ரகளை எப்போது ஓயப் போகிறதென்று எனக்கே பயமாய் விட்டது.

வேலை எல்லாம் முடிந்து வெளியில் வந்தபோது, "எதுவானாலும் இழுத்துப் பிடிப்பதற்கு ஒரு கை வேண்டும், ஸார். இல்லாவிட்டால் இப்படித்தான் கேள்விமுறை கிடையாது" என்றான் சமையல்காரன்.

"ச்......" என்றேன் நான். உடனே ஊர் நினைவுதான் வந்தது.

# 16

## முகாரி

மறுநாள் பாபுவிடமிருந்து கடிதம் வந்தது. எல்லோருடைய க்ஷேமங்களையும் விசாரித்துவிட்டுத் தன்னுடைய விஷயத்தைப்பற்றி விவரமாக என்றும் எழுதாமல் விட்டிருந்த காரணம் எனக்கு விளங்கவில்லை. "அப்பாவுக்கு உடனே கடிதம் எழுத முடியவில்லை. எழுதியிருக்கிறேன். நீ டில்லிக்கு வந்திருக்கிறாய் என்று எழுதியிருக்கிறார் அவர். என்ன விசேஷம்? எனக்கு எல்லோரையும் பார்க்கவேணும் என்று மிகவும் ஆவலாய் இருக்கிறது. திவசத்துக்கு வரலாம் என்றுதான் இருந்தேன். என்ன செய்வது? என்னுடைய விஷயங்கள் ஒன்றும் சொல்லிக்கொள்ளுவதாக இல்லை. அப்பாவையும் அதிகமாகத் தொந்தரவு செய்யப் பிடிக்கவில்லை. ஏதோ அவரால் முடிந்தது பத்து ரூபாயாவது அனுப்பச் சொல்லு. நீ ஒரு தடவை வந்துவிட்டுப் போனாயானால் ரொம்ப சந்தோஷமாய் இருக்கும். ராமு, மன்னி எல்லோரையும் பார்க்க ஆவலாய் இருக்கிறது. சீக்கிரத்தில் பார்ப்பேன் என்று நினைக்கிறேன். பட்டுவையும் அத்திம்பேரையும் கேட்டதாகச் சொல்லு. பட்டு ஏனோ எனக்குக் கடிதம் போடவில்லை. குழந்தைகளையும், அத்திம்பேரையும்பற்றி நான் என்ன சொல்லப் போகிறேன்? வந்து விட்டுப்போ ஒரு தடவை" என்று எழுதியிருந்தாள். பட்டுவிடம் இதையெல்லாம் எப்படிச் சொல்வதென்று யோசனையாக இருந்தது. கடிதத்தைப் பார்த்ததும் ஏதோ வேதனை மட்டும் செய்துகொண் டிருந்தது. அன்றே அப்பாவின் கடிதமும் வந்து சேர்ந்தது, அடுத்த தபாலில். எதற்காக அன்று இதுவும் வந்து சேர வேண்டும்?

அத்திம்பேரும் அக்காவும் கோபமாக இருந்தார்கள்; ஒருவரோடு ஒருவர் பேசவில்லை. எனக்கும் மிகவும் சங்கோசமாக இருந்தது. வேலையைப் பார்த்துக்கொண்டு

ஆபீசுக்குக் கிளம்பும் சமயத்தில் அத்திம்பேர் ஒரு கடிதத்தைக் கொண்டுவந்து கொடுத்தார். அப்பா கடிதம் எழுதியிருந்தார்.

"நீ இல்லாமல் வீடே நன்ருக இல்லை. உனக்கு அந்த வேலை பிடிக்கிறதா? பிடிக்காவிட்டால் வந்துவிடு. இங்கே நான் தகுந்த வழி ஒன்று ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறேன். அங்கே எல்லோரும் சுகமாக இருக்கிருர்களா? பாபுவிடமிருந்து கடிதமே வரவில்லை. அங்கே ஏதாவது வந்ததா? குஞ்சுவின் சமாசாரம் அப்படியேதான் இருக்கிறது. ஊரை விட்டே கிளம்பிவிட்டார்கள். ராமு, மன்னி, குழந்தைகள் எல்லோரும் சுகம். நீ என்ன செய்யப்போகிருய் என்று உடனே எழுது" என்று ஒரு பெரிய ராமாயணம் எழுதியிருந்தார்.

அப்படி என்ன ஏற்பாடு செய்திருக்கப் போகிருர்? ஏதாவது ஒரு வழி அகப்பட்டால் இங்கிருந்து கிளம்பி விடலாம் என்றே எனக்குத் தோன்றியது. வீட்டில் இருப்பதைப் பார்த்தால் ஒன்றும் சுவாரசியப்படவில்லை. கடிதத்தை வைத்துக்கொண்டு சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்துவிட்டேன். நம்ம வீடுதான் எப்போது பார்த்தாலும் இப்படி இருக்கிறதென்ருல் வந்த இடத்திலும் இதையெல்லாம் பார்க்க எனக்குப் பிடிக்கவே இல்லை. அதற்குள் மணி ஓடிவிட்டதோ என்னவோ தெரியவில்லை. எங்கே கால் வைத்தாலும் இப்படியா இருக்க வேண்டும்; நம்ம தலையில் எழுத்து!

"ஏண்டா இப்படி உட்கார்ந்துவிட்டாய்? சாப்பிட வரவில்லையா?" என்ருர் அத்திம்பேர்.

சாப்பிடும்போது கலகலப்பாய் இல்லை. "என்னடா எழுதியிருக்கிருர் அப்பா?" என்று கேட்டார் அத்திம்பேர். என்னுடைய அசட்டுத்தனத்தை யாரிடம் சொல்லிக்கொள்வது? எது சொல்ல வேண்டுமோ அதைச் சொல்லாமல் கடிதத்தை எடுத்து அவரிடம் கொடுத்தேன். அவர் படித்துப் பார்த்துவிட்டு என்னை ஒரு தடவை பார்த்தார். ஏன் அப்படிப் பார்க்கிருர் என்று எனக்குத் தெரியவில்லை.

"இந்தக் காலத்தில் இவ்வளவு வருவாய் யாருக்கடா வேலை கிடைக்கிறது? கஷ்டப்பட்டு ஒரு மனிதன் பார்த்துச் செய்தானே என்பது கிடையாது! ஒரு வரி எனக்கு எழுதவேண்டுமென்று தோன்றவில்லை! 'உனக்குப் பிடிக்காவிட்டால் வேலையை விட்டுவிட்டு வா' என்று எழுதியிருக்கிறரே? பேஷ்! பெரியவர்களே இப்படி இருந்தால் பிள்ளைகள் எப்படித்தான் இருக்காது? போ! எடுத்தவுடன் கவர்னர் உத்தியோகம் கொடுத்துவிடுவான். உனக்கும் அவர் சொன்னால்தானே சரியாக இருக்கும். அம்மா இருந்தால் இதற்கு என்ன சந்தோஷப்படுவாள் தெரியுமா? நான் கால் வைத்த முகூர்த்தம் வீட்டில் எல்லாம் விருத்தியாச்சு என்று அவளுக்குத்தான் திருப்தி. இவருக்கு என்ன? எதையாவது சொல்லிக்கொண் டிருப்பார்" என்றார் அத்திம்பேர் வருத்தத்துடன்.

என்னுடைய முட்டாள்தனம்! கடிதத்தை ஏன் காண்பிக்க வேண்டும்! 'அவருக்கும் அப்பா ஒரு வரி எழுத வேண்டாமா?' என்பது அப்போதுதான் பட்டது. என்ன பதில் கொடுப்பது? மௌனமாக இருந்துவிடுவதே நல்லது என்று பேசாமல் இருந்துவிட்டேன்.

வண்டியில் வரும்போது, "அவர் அப்படித்தான் எதையாவது சொல்லிக்கொண் டிருப்பார். அதனால் இப்போது எனக்கு ஒன்றும் குறைந்துபோய்விடவில்லை. இதையெல்லாம் எதிர்பார்த்துக்கொண்டா நான் செய்கிறேன்!" என்றார்.

"மனுஷாளுக்கு ஒரு திருப்தி கிடையாது பார்! அதை நினைத்துக்கொண்டால்தான் வருத்தமாக இருக்கிறது. எதை வேண்டுமானாலும் எழுதிக்கொள்ளட்டும். உன் வேலை உண்டு, நீ உண்டு என்று இருந்தாயானால்தான் இனி பிழைக்கலாம் தெரிந்ததா? அவர் சொல்லுகிறார் என்று எதையாவது செய்துகொண்டு பின்புயானால் அதற்கெல்லாம் நான் பதில் சொல்லமுடியாது. நீ பிழைக்க வேண்டுமானால் ஒரு தீர்மானம் வேண்டும். நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன். பிறகு உன் இஷ்டம்; எதை வேண்டுமானாலும் செய்துகொண்டு

போங்கள். இந்தக் காலத்திலேயே ஒருவருக்கும் நல்லது செய்யக் கூடாது. அதற்குக் கைமேல் பலன் கிடைத்து விடும்'' என்று அவர் சொன்னபோது எனக்கே மிகவும் வருத்தமாக இருந்தது.

'வயதானவர்கள் என்று பெயர்தான்! எனக்குத் தெரிவதுகூட இவர்களுக்கெல்லாம் தெரியவில்லை பார்! இப்படிச் செய்தாரே' என்று நினைக்க மிகவும் கஷ்டமாக இருந்தது. "எப்போதும் இப்படித்தான். எதையாவது செய்யாவிட்டால் அவருக்குப் பொழுது போகாது அத்திம் பேரே!'' என்று சொல்லிவிட்டு நான் இறங்கிச் சென்றேன்.

வேலையைப் பார்த்துக்கொண்டு எல்லாவற்றையும் மறந்துவிடலாம் என்று நினைத்தேன். வந்த தபால்களை எல்லாம் பார்த்துவிட்டு மேலே கதை கட்டுரைகளைக் கவனிக்க எடுத்தேன். அதற்குள் ஹிந்தி பத்திரிகையின் உதவி ஆசிரியர் வேகமாக என்னை நோக்கி வந்தார்.

"ரொம்ப அவசரமாக இருக்கிறதே? என்ன விசேஷம்?'' என்றேன் சாதாரணமாக.

வந்தவர் என் எதிரில் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தார். என் மேஜையை மேலும் கீழுமாக ஒரு முறை பார்த்துவிட்டு, "எங்கே? உங்கள் ஆசிரியர் இன்னும் வரவில்லையா? சரியாய்ப் பத்து மணிக்குத்தான் ஆஜராவார். எங்கள் ஆசிரியர் வந்து அப்போது முதல் காத்துக்கொண்டு கிடக்கிறார். ஓர் ஆள் கிடையாது! கேள்வி முறை கிடையாது! எல்லோரும் எங்கே தொலைந்து போய்விட்டார்கள்? உங்கள் பத்திரிகை நடந்துவிட்டால் சரி, உங்களுக்கு! எங்களுடைய வேலைகளெல்லாம் என்னவாகிறதாம்?'' என்று சரமாரியாக ஆரம்பித்தார்.

விஷயம் என்னவென்று விளங்காதநுடன் அவர் ஆங்கிலத்தில் சடசடவென்று அடித்துத் தள்ளியதும் எனக்குப் பதில் சொல்லத் தடுமாறிவிட்டது. கொஞ்சம் யோசித்தேன்.

"ஏன் இப்படி என்னிடம் கோபித்துக்கொள்ளுகிறீர்கள்? உங்கள் ஆட்கள் எல்லாம் எங்கே என்று எனக்குத் தெரியுமா? எங்கேயாவது போயிருப்பார்கள். வேலை சரியாக நடக்காவிட்டால் முதலாளியிடம் போய்ச் சொல்லுங்களேன்! வேண்டியதைச் செய்து இன்னும் இரண்டு ஆட்களைப் போட்டுவிட்டுப் போகிறார். எல்லாம் எனக்கும் உங்களுக்கும் என்ன ரூபா? ஆசிரியர்கள் இருக்கிறார்கள். பார்த்துக்கொண்டு போகிறார்கள்" என்றேன் நான்.

அதற்கும் அவர் அடங்குவதாக இல்லை.

"இப்படி ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டுதான் வேண்டிய நடப்பதில்லை! இஷ்டப்படி இருக்கிறார்கள் எல்லோரும்! இவருக்குத்தான் இந்த வேலை என்பது ஏதாவது இருக்கிறதா, இந்த இடத்தில்? ஒரு வேலைக்குப் பத்து ஆட்கள்! எல்லாம் நீங்கள் கேட்டுப் பாருங்கள்! அவ்வளவு பேரும் உங்கள் பராசக்தியின் வேலைக்காகத் தான் போயிருக்கிறார்கள்! எங்கள் வேலை நடந்தால் என்ன? நடக்காவிட்டால் என்ன? பேசாமல் எல்லாவற்றையும் மூடிவிட்டுப் போகலாம் மரியாதையாக" என்று ஆத்திரத்துடன் பேசிவிட்டு எழுந்து சென்று விட்டார்.

காலையில் நல்லமுகத்தில் விழிக்கவில்லை. எழுந்தவுடன் வேறு யார்? அக்காவின் முகத்தில்தான் விழித்தேன். அக்காவாக இருந்தால் என்ன? அம்மாவாக இருந்தால் என்ன? சில பேருடைய முகம் நல்ல ராசியாக இருக்கிறதில்லை என்பதே எனக்குத் தீர்மானமாகப்பட்டது. ஏனென்றால் முதலில் ஒன்றும் தெரியாமல் வந்து வேலையை ஒப்புக்கொண்டபோது சமையல்காரன் முகத்தில்தான் விழித்தேன். கடைசிவரையில் என்ன வருமோ, என்னவோ என்ற திகில்தான். அவன் முகத்தில் விழித்தால் கட்டாயம் நல்லது நடக்கிறது. இன்னும் நாள் முழுவதும் போக வேண்டுமே என்று ஒரு பக்கம் பயமாக இருந்தது. ஒவ்வொன்றாக எல்லாம் சேரவே தியின் மேல் நெய்யை ஊற்றியதுபோல் என் கோபமும் அதிகரித்தது. எழுந்து ஆபிசை ஒரு சுற்றுச் சுற்றினேன். அந்த உதவி ஆசிரியர்

கூறியதுபோல் வேலை ஆட்கள் ஒருவரையும் காணவில்லை. இன்னுமா எல்லோரும் வரவில்லை! டைப் செய்துகொண்டிருந்தவனைப் போய்க் கேட்டேன். 'எல்லோரும் வந்துவிட்டு அவசரமாக ஏதோ வேண்டிய இடங்களுக்குப் போனார்கள்' என்றார் அவர். 'வரட்டும், கேட்டுப் பார்க்கலாம்' என்று நினைத்துக்கொண்டு நான் வந்து உட்கார்ந்தபோது ஆசிரியர் வந்தார்.

அங்கவஸ்திரத்தை எடுத்து மாட்டிவிட்டு மின்சார விசிறியைத் திருப்பிக்கொண்டு அவர் உட்கார்ந்தபோது ஆத்திரந்தான் வந்தது. வீட்டில் எப்போதும் மின்சார விசிறியின் கீழேதான் உட்காருகிறாரா? கிடைத்தால் மனிதன் எவ்வளவு அதிகாரத்தைச் செலுத்திக் கொள்ளுகிறான்!

"என்ன ஸார்? ஆட்களை எல்லாம் எங்கே அனுப்பி விட்டீர்கள்? அந்த ஆசிரியர் வந்து பிரமாதமாகக் கத்துகிறாரே?" என்றேன்.

"எல்லாம் ஆபீஸ் வேலையாகத்தான் அனுப்பினேன். எங்கள் வீட்டு வேலைக்கா அழைத்துக்கொண்டு போய்விட்டேன்? இவர்களுக்கு வேண்டியதைச் செய்துகொண்டு போகிறதுதானே? நானா வேண்டாம் என்றேன்?" என்று எனக்குமேல் சிடுசிடு என்றார் அவர்.

தபால்களை எல்லாம் அவரிடம் எடுத்துக் கொடுத்துவிட்டு, "எந்த எந்தக் கடிதத்துக்குப் பதில் எழுத வேண்டும்?" என்றேன்.

"எதற்கு வேண்டுமானாலும் எழுது; பேசாமல் வேண்டுமானாலும் இரு. உலகத்தில் மனிதர்களுக்கே நன்றி என்பது கிடையாது. தாங்கள் செய்வதையெல்லாம் நினைவு வைத்துக்கொண்டு கணக்குப் பார்க்கிறார்களே தவிர அவர்கள் செய்ததைப்பற்றி நினைப்பதே இல்லை" என்றார் அவர்.

ஆபீசுக்கும் இதற்கும் என்ன சம்பந்தம் என்பது எனக்கு விளங்கவில்லை.

"என்ன எழுதுவதென்று கேட்காமல் எழுதலாமா? அதைக் கேட்டால் என்னமோ சொல்லுகிறீர்களே? எனக்கு ஒன்றும் புரியவில்லை" என்றேன்.

"புரியுமா? ஒன்றுமே புரியாததுபோல் இருந்துவிட்டால் வம்பு கிடையாது பார்! காரியவாதிகள் என்றால் அப்படித்தான் இருப்பார்கள். இவ்வளவு ரகளை நடக்கும்போது ஒன்றுமே தெரியாமல்தானே இருந்துவிடும்! என்னமோ அளக்கிறான் கதை!" என்று அவர் சொன்னதும் எனக்கும் தாங்க முடியவில்லை.

"என்ன ஸார்? உங்களுக்கு ஏதோ தொல்லை இருந்தால் அதற்கெல்லாம் நானா பாத்தியம்? வேலையைப் பார்ப்பதற்கு வருகிறோமா? வீட்டுத்தொல்லை பேசுவதற்கா? கேட்டால் சிள்ளென்று விழுகிறீர்களே? நல்ல ஆபிஸ்! நான் வேண்டுமானால் இன்றே நின்றுவிடுகிறேன் ஸார். உங்களுக்கு வேண்டியவனைப் பார்த்து வைத்துக் கொள்ளுங்களேன்!" என்றேன்.

"ஆ......அதுதான் கேட்டேன். உனக்கென்னடாப்பா? தைரியம் இருப்பதனால்தானே இவ்வளவு வாயாடுகிறாய்? இதெல்லாம் என் அதிகாரத்திலா இருக்கிறது; வா, போ, என்று சொல்லுவதற்கு? முதலாளியைப் பார்த்துச் சொல்லி எதை வேண்டுமானாலும் செய்துகொள்ளலாம்" என்று அவர் நிதானமாகக் கூறினார் அதற்கு மேல் நான் ஒன்றும் பேசவில்லை. கத்தைகளைச் சிறிது நேரம் புரட்டிவிட்டு, "அடுத்த இதழுக்கு இது சுமாராக இருக்கிறதா பாருங்கள்?" என்று ஒரு கத்தையை அவரிடம் கொடுத்தேன்.

"யாருடையது?" என்றார் அவர்.

"யாருடையதாய் இருந்தால் என்ன? நன்றாக இருக்கிறதா பாருங்கள்?" என்றேன்.

"சுமாராக நன்றாக எழுதும் எழுத்தாளர்களுடையதாய் இருந்தால் பார்ப்பதில் பிரயோஜனம் உண்டு. ஒன்றும் தெரியாமல் இதையெல்லாம் படித்துக்கொண்டிருப்பதில் வீணாகப் பொழுது போவதுதானே மிச்சம்? நான் ஒரு திட்டம் போட்டு வைத்துவிட்டேன். இவை

களைப் பார்த்துத் திருத்தி வை'' என்று சொல்லிக் கொண்டே என்னிடம் ஒரு கத்தையைக் கொடுத்தார் அவர்.

எல்லாம் அநேகமாகத் தெரிந்த எழுத்தாளர்களாா கவே இருந்தது.

''ஆனால் தெரியாத இளம் எழுத்தாளர்கள் அனுப்பு வதைப் பார்க்கவே வேண்டாம் என்கிறீர்களா? அப்படி ஒரு அட்டை எழுதி மாட்டிவிடலாமே? இதோ பாருங்கள்; இதைப் படித்துப் பார்த்தீர்களானால் நன்றாக இருக்கிறதென்று கட்டாயம் சொல்லு வீர்கள். நேற்று அவரை நான் சந்தித்தேன்'' என்று சொன்னேன்.

''நான் எவ்வளவோ காலமாகப் பார்த்துவிட்டுத்தான் சொல்லுகிறேன்'' என்று ஆசிரியர் ஆரம்பித்தார். அதற் குள் நாங்கள் யாரைப்பற்றிப் பேசிக்கொண் டிருந் தோமோ அந்த ஆசாமியே வந்து சேர்ந்தார்.

''வாங்கோ, வாங்கோ'' உங்களைப்பற்றித்தான் பேசிக்கொண் டிருந்தோம்'' என்றேன்.

சிரித்துவிட்டுக் கும்பிடு போட்டுக்கொண்டே உட் கார்ந்தார் அவர்.

''உங்களுடைய சிறுகதையைப்பற்றி அவரிடம் சொல்லிக்கொண் டிருந்தேன்'' என்று சொல்லிவிட்டு ஆசிரியரைப் பார்த்தேன். அவர் ஒன்றையும் கவனித்தது போலவே காண்பித்துக்கொள்ளவில்லை. அதற்குள், ''எப்படி இருக்கிறது? நீங்கள் படித்துப் பார்த்தீர்களா லா?'' என்று சுந்தர் ஆசிரியரைக் கேட்டார்.

தூக்கத்திலிருந்து விழித்துக்கொள்வதுபோல் ஆசிரியர் பதில் கூறியது எனக்கு மிகவும் வேடிக்கையாக இருந்தது; கோபமும் வந்தது.

''இன்னும் பார்க்கவில்லை. எனக்கு எங்கேன்று ஒழிவு கிடைக்கிறது? ஒன்று இரண்டா? இதையெல்லாம் படித்துக்கொண்டு, தலையில் எழுத்துத்தான்'' என்று அவர் கூறியபோது சுந்தருடைய முகம் மாறியது. இதைக் கேட்டுக்கொள்ளவா அவர் வந்தார்?

"இவர் ரொம்பச் சொன்னார்; அதனால்தான் அனுப்பி னேன்" என்று அவர் பதில் சொன்னதும் ஆசிரியர் அவரை நிமிர்ந்து பார்த்தார்.

"ஒவ்வொருவரும் கொடுத்துவிட்டு உடனே பிர சுரம் செய்துவிட வேண்டுமென்றால் முடிகிறதா என்ன? இன்னும் எவ்வளவு பேர் அனுப்பியதெல்லாம் அப்படியே இருக்கிறது தெரியுமா? நம்ம பத்திரிகையில் ஒன்று பிரசுரமாய் விட்டால் போதுமே ஸார், அவர் களுக்கு?" என்று அவர் சொன்னபோது அதில் ஒரு தீர்மானம் தொனித்தது.

"இப்படியே சொல்லிக்கொண்டிருந்தால் இளம் எழுத்தாளர்களுக்கு எப்போது ஸார் சமயம் வாய்ப் பது? எழுதும் விஷயத்தைப் பொறுத்துத்தானே நாம் பேச வேண்டும்?" என்றேன் நான்.

ஆசிரியர் எனக்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை.

"நான் பார்த்துக்கொள்ளுகிறேன் ஸார், எல்லாம். நீங்கள் வேறு ஒரு சமயம் என்னை வந்து பாருங்கள். இப்போது எனக்கு அதிக வேலை இருக்கிறது" என்று சொல்லி அவர் சந்தரைக் கிளப்பி விட்டுவிட்டார்.

"ரொம்ப சந்தோஷம். மறக்கக் கூடாது" என்று எங்கள் இருவருக்கும் கும்பிடு போட்டுவிட்டு அவர் சென்றுவிட்டார்.

"இவ்வளவு தீர்மானமா இவருக்கு?" என்று எனக்கு மிகுந்த கோபம் வந்தது.

"இதைப் படித்துத்தான் பாருங்களேன்" என்று மறுபடியும் அந்தச் சிறுகதையை நீட்டினேன்.

"இதெல்லாம் உனக்கென்ன கவலை? நான் செய் என்பதைச் செய். இதையெல்லாம் பார்த்துக்கொண்டு படித்துக்கொண்டே போனால் நமக்கு எவ்வளவு பொழுது இருந்தாலும் போதாது. தெரியுமா? மள மளவென்று வேண்டியதைப் பார்த்துப் பொறுக்கிப் போட்டால் நம்ம பாடு விட்டது. எங்கே, இருந்த ஆட்கள் ஒருவனையும்

காணோம்? இப்படித்தான்! அனுப்பிவிட்டால் ஊரைச் சுற்றிக்கொண்டு நிற்பார்கள். அவன், ராமன் எங்கே?" என்றார் அதிகாரத்துடன்.

'ராமனையும் காணோம், லக்ஷ்மணனையும் காணோம். ஆபீசில் மூலைக்கு ஒருவராகக் கத்திக்கொண்டு ஒரே ரகளையாக இருந்தது. இந்த ஆசிரியருக்கும் அந்த ஆசிரியருக்கும் பலமாகச் சண்டை வந்துவிடும்போல் இருந்தது. ஒருவர் போன வழி ஒருவர் போகாமல் இதென்ன அக்கிரமம்?' என்று நினைத்துக்கொண்டு நான் வெளியில் வந்தேன். முதலில் சென்று, ராஜனைப் பார்த்துவிட்டு வர வேண்டும் என்பது என் ஆத்திரம். அவர் வீட்டை நோக்கிச் சென்றேன்.

வழியில் ராமன் அவசரமாக வந்துகொண் டிருந்தான். "எங்கேடா போய்விட்டாய்? காலையில் எழுந்து உன்னைத் தேடுவதுதான் வேலையா எல்லோருக்கும்? எங்கே தொலைந்துவிட்டாய்?" என்று அவனைப் பிடித்துக் கோபித்துக்கொண்டேன்.

"என்னை என்ன ஸார் செய்யச் சொல்லுகிறேள்? ஒவ்வொரு மூலையில் ஒவ்வொருவர் வேலை இடுகிறார்கள். இவருக்குச் செய்தால் அவருக்குக் கோபம் வருகிறது. அவருக்குச் செய்தால் இவருக்குக் கோபம்! இவ்வளவு ஆட்கள் இருந்து என்ன பிரயோஜனம்? இப்போது ஊர் முழுக்க அலைந்துவிட்டு வருகிறேன்" என்று அவன் உறுமினான்.

ஆசிரியர் முதற்கொண்டு ஆள்வரையிலும் உறுமலா?

"எங்கே தொலைந்தாயாம்?" என்றேன்.

"இதோ பாருங்கோ ஸார், இந்த வர்ணத்தைக் கொண்டு வா என்கிறாங்க; ஒவ்வொரு நிமிஷத்துக்கு ஒவ்வொரு வர்ணம். எவ்வளவு செலவு? பணம் இப்படியா போகணும்? நம்ம ஆபீஸ் இப்படி இருக்குதுங்க" என்றான் அவன். இது யாருடைய வேலை என்பது தெரியவில்லை எனக்கும். நான் விழித்த வேளை!

"வாங்கி வரச் சொன்னது யார்?" என்றேன்.

"யாரா? சொல்லுகிறேன் இப்படி வாங்க" என்று என்னை அழைத்துக்கொண்டு ராஜன் வீட்டில் நுழைந்தான்.

அங்கே ஒரே அமர்க்களமாக இருந்தது. ஓவியக்காரர்கள் இரண்டு மூன்று பேர் தங்களுடைய படங்களை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். விளம்பரங்களை எப்படிப் போடவேண்டும் என்ற சர்ச்சை நடந்து கொண்டிருந்தது.

ராஜன் ஒவ்வொன்றுக்கும் படம் போடச் சொல்லி. அதை எந்த எந்த வர்ணத்தில் அமைத்தால் நன்றாக இருக்கும் என்று பார்த்துக்கொண் டிருந்தார். நான் உள்ளே நுழைந்ததும், "வரணும்" என்றார்.

"இதெல்லாம் என்ன?" என்றேன்.

"விளம்பரங்களினாலேதானே நமக்கு நல்ல வருமானம்? அதைப் பார்த்துக் கவனிக்க வேண்டுமென்றுதான் வேண்டியதைப் பார்த்துக்கொண் டிருக்கிறேன். இதைப் பாருங்கள். இப்படிப் படங்கள் போட்டு வர்ணத்தில் அமைத்தால் மிகவும் நன்றாக இராது?" என்று சொல்லிக்கொண்டே என்னிடம் இரண்டு மூன்று விதப் படங்களை விதவிதமான வர்ணங்களைத் தீட்டிக் காண்பித்தார்.

"இவ்வளவு செய்தால் அதிகமான செலவாகுமே" என்றேன் நான்.

"அதைப்பற்றி என்ன ஸார், இப்போது? நன்றாக இருக்க வேண்டியதுதானே நமக்கு? எல்லாவற்றையும் போட்டுப் பார்த்து எது நன்றாக இருக்கிறதோ அதைப் பொறுக்கி எடுப்பது" என்றார் அவர்.

"ஆமாம். ஆமாம். நீங்கள் சொல்வதுதான் ரொம்ப சரி. எதையும் அச்சுப் போட்டுப் பார்த்தால்தானே தெரியும்? ரொம்ப அவசியம்" என்று தலையை ஆட்டினார்கள். அவ்விடம் இருந்த எல்லா ஆசாமிகளும் அவர்

களுக்கென்ன செலவைப்பற்றி? தங்களுடைய காரியம் ஆக வேண்டியதுதானே! எனக்கு ஒன்றும் பேசப் பிடிக்க வில்லே.

'உம்......யாரைச் சொல்வது? அவர்கள் விழித்த முகம்!' என்று எனக்குள்ளேயே சொல்லிக்கொண் டேன். 'ஆபிசாவது! பண்ணுங்கட்டியாவது! இப்படியா தலைக்குத் தலை?'

விழித்தாலும் இப்படிப்பட்ட முகத்தில் அல்லவா விழிக்க வேண்டும்? முகராசி என்பது கட்டாயம் இருக்கிறது.



## 17

### யாருக்கு யார்?

சதிபதிகளுக்குள் எவ்வளவு சச்சரவுகள் இருந்தாலும் இரண்டே நாட்கள்தான்; எல்லாம் சரியாகப் போய்விடும் என்றாலும் இந்த இரண்டு மூன்று நாட்கள் ஓடுவது எனக்கு ஒரு யுகமாகவே தோன்றியது. ஒரு நாள் மாலை நாங்கள் வந்து இறங்கியவுடன், "பட்டு" என்று தானாகவே கூப்பிட்டார் அத்திம்பேர். மற்ற நாட்களில் கூப்பிட்டவுடன் வரச் சிறிது நேரமானாலும் அன்று பட்டு உடனே வந்தாள்.

'ஏன்? இதோ வந்துவிட்டேன்'' என்று சொல்லிக்கொண்டே அவள் வந்து நின்ற விதத்தைக் கண்டதும் எனக்கே அதிசயமாக இருந்தது. எப்போது அழைக்கப் போகிறார் என்று காத்துக்கொண் டிருந்தவள்போல் அவ்வளவு ஆவலுடன் வந்து நின்றாள்.

"ஒன்றும் இல்லை. என்ன செய்கிறாய்? இப்படி வந்து 'உட்காரேன் என்றுதான். அதற்குள் பயந்துவிட்டாயோ?'' என்று சிரித்தார் அத்திம்பேர்.

"பயம் என்ன, எல்லாவற்றையும் விட்டு?" என்றாள் அவள்.

நான் நின்றுகொண் டிருப்பதைக் கண்டு, "ஏண்டா, உன்னையும் உபசாரம் செய்ய வேண்டுமா? வந்து உட்காரேன் இப்படி'' என்றார். நானும் உட்கார்ந்தேன்.

"நடராஜன் அவ்வளவு சொல்லுகிறானாமே? என்ன செய்வதாக உத்தேசமடா? மறுபடியும் கேட்டாயா உங்க அக்காவை?'' என்றார் என்னைப் பார்த்து.

"எனக்கு ஒன்றும் சொல்லவில்லையே இவன்! அப்பா என்ன எழுதி இருக்கார்?" என்றாள் அக்கா.

"இங்கே வீடு படும் அமர்க்களத்தைப் பார்த்துப் பயந்துகொண்டு விட்டானுக்கும் பாவம்! ஏண்டா?" என்று சிரித்தார் அத்திம்பேர்.

"என்ன செய்யணும், நீங்கள்தான் சொல்லுங் களேன்?" என்றேன் நான்.

"நான்தான் அன்றையிலிருந்து சொல்லுகிறேனே; பேசாமல் செய்துகொண்டு விடு. பிறகு உன் இஷ்டப்படி இரேன். என்னைக் கேட்டால் அதைத்தான் சொல்லு வேன்" என்று அத்திம்பேர் சொன்னார்.

அதற்குள், "வேறு என்னடா எழுதியிருக்கிறார், அப்பா?" என்று கேட்டாள் அக்கா. நான் எல்லாவற்றை யும் சொன்னேன்.

"இப்படி எழுதுகிறாரேடா இவர்? ஏதாவது தெரிந்தா எழுதுகிறார்? வர வர ஏண்டா ஒண்ணும் யோசிக்கவே மாட்டேங்கறார் இப்படி?" என்றாள் அக்கா. ஆனால் இதைப்பற்றிப் பேச எனக்குப் பிடிக்கவில்லை. வீட்டில் ஒன்றும் பிடிக்காவிட்டால் அவர் அவ்விதம் எழுதியது சகஜம் என்றே தோன்றியது.

"என்ன அத்திம்பேரே, எங்கேயும் வெளியில் போகவில்லையா? உட்கார்ந்துவிட்டேளே? அக்காவோடு பேசி ரொம்ப நாள் ஆய்விட்டதோ இல்லையோ பாவம்!" என்று பரிகாசமாகக் கேட்டேன்.

"ஓகோ! அப்படி உன்னையும் பரிகாசம் செய்ய வேணும் என்கிறாயா? இரு இரு, பார்த்துக்கொள் கிறேன் உன்னை. உங்கள் இரண்டு பேருக்கும் எவ்வளவோ இருக்கும். அதுக்குத்தான் ஜாடையாக என்னைக் கிளப் பப் பார்க்கிறாயாக்கும். சரி, தொலைகிறேன்" என்று சொல்லிக்கொண்டே அத்திம்பேர் பந்து விளையாடக் கிளம்பினார்.

"அதுக்காகச் சொல்லவில்லை அத்திம்பேரே. அதற் குள் கிளம்பிவிட்டீர்களே?" என்று நான் அவரை நிறுத்த முயன்றுகொண் டிருந்தேன்.

"ஏண்டா, அவர்பாட்டில் போய்வரட்டும், விடு. வீட்டில் இருந்தால் கோட்டுடா குடையடா என்று அலைய வேண்டும். நம்ம ஊரைப்போல் சாப்பாட்டாவது சீக்கிரம் முடியப்போகிறதா? அதுவும் இல்லை" என்று அக்காள் என்னிடம் சொன்னாள்.

"நீங்களும் அப்படிப் போய்விட்டு வாங்கோ. நாங்களும் நம்ம சரோஜாவைப் பார்த்துவிட்டு வருகிறோம். சீமாவைப் பார்க்க இரண்டு மூன்று தடவை வந்தாள். அவளுக்கு மத்தியான்னம்தான் ஒழிகிறதாம். சமையல் இருக்கோ இல்லையோ? ஒவ்வொரு தடவையும் சொல்லிவிட்டுப் போகிறாள்" என்றாள் அக்கா அத்திம்பேரிடம்.

"சரி, சரி, உங்கள் மனுஷா தானே உங்களுக்கு ஒசத்தி! போய்விட்டு வாங்கோ" என்று கேலியாகக் கூறிவிட்டுக் கிளம்பிப் போய்விட்டார் அவர்.

அத்திம்பேர் வெளியில் சென்றாரோ இல்லையோ, முதலில் வீட்டில் ஏன் இவ்வளவு சச்சரவு என்று தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவல் எனக்கு எழுந்தது. அதற்குள் அக்கா உடை மாற்றிக்கொண்டு வர உள்ளே சென்றுவிட்டாள். நாங்கள் புறப்படுவதற்குள் அத்திம்பேர் வண்டியை எங்களுக்காக அனுப்பி வைத்துவிட்டார். அக்காவுக்கே ஆச்சரியமாக இருந்தது. "ஏதோ மழைதான் வரப்போகிறது கட்டாயம்" என்று சொல்லிக்கொண்டே வண்டியில் ஏறினாள். அப்பாவைப் பற்றிச் சிறிது நேரம் பேசிக்கொண்டு போனோம்.

"நடராஜன் எவ்வளவு சொன்னால் என்ன? அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். நம்மருக்கு தங்கமாய் இருக்கிறாள். அழகுக்கு என்னடா? உனக்கும் ஆதரவாச்சு. குழந்தையும் வீட்டைப் பொறுப்போடு பார்த்துக்கொள்ளும். பேசாமல் பண்ணிக்கொள். நான் ஏற்பாடு செய்கிறேன். அவா சொல்வதையும் இவா சொல்வதையும் கேட்காதே. கடைசியில் நீதான் திண்டாட வேண்டும்" என்று ஒரே தீர்மானமாகச் சொன்னாள் அக்கா.

"அதெல்லாம் இருக்கட்டும் அக்கா. கல்யாணத்துக்கா முட்டை? அப்படியே செய்தால் போகிறது. அன்று நம்மாத்துக்கு வந்தாளே இருட்டில், அவள் யார்? அவ

ளைக் கண்டதும் அத்திம்பேருக்கு அவ்வளவு கோபம் வந்துவிட்டதே?" என்றேன்.

"அவளா? அதை ஏன் கேட்கிறாய் போ. அது ஒரு பெரிய கூத்து. இப்போது சொல்லக்கூட முடியாது அதை" என்றாள் அக்கா.

பிறகு அவளே ஆரம்பித்தாள்.

"யார் என்றுதானே கேட்கிறாய்? உலகத்தில் எவ்வளவு வேடிக்கைகள் இருக்கின்றன பார். என் தோழி ஒருத்தி வருகிறாளே தெரியுமோ இல்லையோ உனக்கு? அவளுடைய தமக்கை. இவள் ஓர் இடத்தில் இருக்கிறாள். அவள் ஓர் இடத்தில் இருக்கிறாள். நானும் நீயும் இருக்கோமே. சாமர்த்தியம் என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்? என் தோழி ஒரு அசடு, என்னைப்போல். அவள் தமக்கைக்கு வீடு, வாசல், குழந்தை எல்லாம் இருக்கிறது. ஆனால் எப்போது பார்த்தாலும் தங்கை வீட்டில்தான் எல்லாம். 'இருந்து விட்டுப் போகட்டுமே; என்ன வந்துவிடுகிறது?' என்றால் இந்த வேடிக்கையைக் கேள். உட்கார்ந்த இடம் விட்டு அசைய மாட்டாள். வீட்டில் காரியம் செய்ய வேண்டி இருக்கிறதோ இல்லையோ? சிரம பரிகாரம் எல்லாம் இங்கே. குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு வந்து தங்கை வீட்டில் டிகானா. அதுவும் எப்படி என்கிறாய்? எல்லாம் இருந்த இடத்தில் முதலில் நடக்க வேண்டும். வீட்டுக் குழந்தைகள், எஜமானர் எல்லோருக்கும் பிறகுதான். இவளுக்கு நடத்திவிட்டுத்தான் எதுவும் அவர்களுக்கு. ஆட்களும் நடுங்குவார்கள். நினைத்துக்கொண்டாளா, பக்ஷணம், பாடி, எல்லாம் நடக்கணும். எங்கே வேண்டுமானாலும் போக வேண்டும்; வண்டி தயாராக இருக்க வேண்டும். ஒரே தர்பார்தான். அவள்தான் என்ன செய்வாள் பாவம்?" என்று அக்கா நிறுத்தினாள்.

"ஏன் பயப்பட வேண்டும்? வருஷம் முந்நூற்றறுபது நாளும் ஒருத்தி இப்படி இருந்தால் அதற்குப் பயப்பட வேண்டுமா? முடியாது என்று நன்றாகச் சூடாகக் கொடுத்தனுப்புவதுதானே? வீட்டில் ஒரு புருஷன்

இருக்கிறான் என்றால் என்ன செய்ய முடியும்? அவனும் பொறுத்துக்கொண் டிருந்தால்தானே எல்லாம் செய்ய-லாம்?'' என்றேன் நான்.

“அதெல்லாம் சரிதாண்டா? அவளை யார் சொல்வது என்று நினைத்துக்கொண் டிருக்கிறாய்? யாராவது சொல்லிப் பிழைக்க முடியுமா? சொன்னால் உடனே சண்டை. ‘என்னை எல்லோரும் அலக்ஷ்யம் செய்கிறார்கள். இவர்கள் எல்லாம் பணக்காரர்களைத்தான் மதிப்பார்கள். நமக்கென்றால் வயிற்றுக்குக்கூடச் சாப்பாடு போட மாட்டார்கள். இருந்தால் இடமே தேய்ந்துவிடும் என்பார்கள்' என்று வருவார் போவார் எல்லோரிடமும் ஓயமாட்டாள். வேலைக்காரர்களைக் கண்ணில் விரலைக் கொடுத்து ஆட்டி வைத்துவிடுவாள். அவர்கள் ஒரு வார்த்தை ஏதாவது சொல்லிவிட்டால் அவ்வளவுதான்! அம்மாவுக்குப் பிடித்தது சனி. ‘இவர்கள் கொடுக்கும் இடத்தினால்தானே ஆட்கள் இப்படித் துள்ளுகிறார்கள்? ஒரு சத்தம் போட்டால் பெட்டிப் பாம்புபோல் அடங்க மாட்டார்களா? அவர்களுக்கும் சொல்லிக்கொடுத்து வேடிக்கை பார்க்கிறார்கள்' என்று அழுது ஆர்ப்பாட்டம் செய்துகொண்டு சாப்பிடாமல் படுத்துக் கொண்டுவிடுவாள். மூன்று நாட்கள் ஆனாலும் பசியும் பட்டினியுமாகக் கண்ணீர் வடிப்பாள். இப்படிச் செய்தால் அவள்தான் என்ன செய்வாளடா?''

“இங்கே வர வேண்டாம் என்று கண்டிப்பாகச் சொல்லி அனுப்பி விடுவதற்கென்ன!'' என்றேன் நான்.

“அப்படியும் செய்யாமலா இருந்துவிடுவாள்? எல்லாம் பார்த்தாகி விட்டது. சொல்லாமல் இருக்கும் போதே இவ்வளவு ரகளை. ஒரு நாள் பிடித்து நன்றாகக் கோபித்துக்கொண்டாள். அதிலிருந்து ஊரே அமர்க்களப்படும்படி ஒவ்வொரு விடாகப் போய், அவ்வளவு பாடு படுத்திவிட்டாள். அதிலிருந்து எனக்குப் பிடித்தது சனி. இப்படிக் கோணலாக இருந்தால் யார்தான் பொறுத்துக்கொண் டிருப்பார்கள்? பிள்ளைகள் நன்றாகக் கொடுக்கிறதுபோல் இருக்கிறது. உடனே அழுது கொண்டு இங்கே ஓடிவந்து விடுகிறாள். தங்கையைப்

பற்றியும் பிள்ளைகளைப்பற்றியும் என்னிடம் ஆயிரம் புகார். இப்படி ஒருத்தி வந்து படுத்துக்கொண்டு, 'போகமாட்டேன், வேறு இடம் கிடையாது; நீயும் துரத்தினுல் எங்கே போவது!' என்று அழுதால் நான்தான் என்ன செய்வது? கண்டபடி இருட்டிலும் குளிரிலும் வந்து என் கழுத்தை அறுக்கிருள். பகல் பொழுதாளுலும் எப்படியாவது கொண்டுபோய்த் தள்ளிவிட்டு வந்து விடுவேன். இருட்டு வேளையில், அதுவும் ஒரு பொம்மனுட்டியை என்ன செய்வது? நீயே சொல். வந்தால் இப்படி விட்டில் ஏகரகளை. ஒரே அடியாக அவளை உள்ளேயே விடக்கூடாது என்று கத்துகிறூர் அந்நம்பேர். இதுகளை எல்லாம் கொண்டு வந்து வைத்துக்கொண்டு சிராட்ட வேண்டுமென்று எனக்குமட்டும் என்ன ஆசையா? பிராரப்தம்! விட்டில் எப்போது பார்த்தாலும் இதே சண்டை" என்று முடித்தாள் அக்கா.

அவள் முடிப்பதற்கும் வண்டி சரோஜாவின் விட்டை அடைவதற்கும் சரியாக இருந்தது.

'இப்படியெல்லாம் விசித்திரமான பிரகிருதிகளா!' என்று எனக்குள் சிரித்துக்கொண்டே வண்டியிலிருந்து இறங்கினேன்.

சரோஜாவை நான் இதுவரையிலும் பார்த்ததில்லை. சாயல் எல்லாம் குஞ்சுவைப் போலவே இருந்தாள். "ஒருவரைப் பார்க்காவிட்டாலும், தெரியாவிட்டாலுங் கூடச் சாயல்மட்டும் எவ்விதம் அமைகிறது பார்!" என்று எனக்கு அதிசயமாக இருந்தது.

"பார்த்தவுடன் நம்ம குஞ்சுவின் நினைவுதான் வருகிறது. அவளைப் போலவே இருக்கிருளே அக்கா?" என்றேன் நான்.

"யாருக்கு யாரடா? எங்கே போய்விடும் எல்லாம்? அத்தையும் மருமாளுந்தானே!" என்று சிரித்தாள் அக்கா. அக்கா சரோஜாவைப்பற்றி எவ்வளவோ பெருமை அடித்துக்கொண்டிருக்கிருள். ஆனுல் அவள் கூறியதுபோல் சரோஜாவுக்கு எங்களுடைய வரவில் அவ்வளவு மகிழ்ச்சி இருந்ததுபோல் தோன்றவில்லை.

ஏனென்றால் அவள் எங்களை வரவேற்ற விதத்திலிருந்து அப்படிப் பட்டது. அக்காவுக்கும் அப்படித்தான் தோன்றியிருக்க வேண்டும்.

"ஏன் சரோஜா? இன்று என்னமோபோல் இருக்கிறாயே? உடம்பு ஏதாவது சரியாக இல்லையோ?" என்று கேட்டாள் அக்கா.

"ஒன்றும் இல்லையே" என்றுமட்டும் பதில் சொன்னாளே தவிர வேறு வார்த்தை பேசவில்லை. நாங்களே உட்காரவேண்டி யிருந்தது. அக்காவும் விடவில்லை.

"நம்மாத்திலே நீ சொல்ல வேண்டுமா? உக்காரடா போ, நானே சொல்லிவிட்டேன்" என்றாள்.

"நான் அப்படி நினைத்துக்கொண் டிருக்கிறேனே ஒழிய நீங்களெல்லாம் அப்படி இருக்கிறீர்களா?" என்றாள் சரோஜா, உம் என்று முகத்தை வைத்துக் கொண்டு.

"நாங்கள் மாத்திரம் எப்படி இருக்கிறோம்? உன்னைப் பார்க்க வேண்டும் என்றுதானே அவனையும் அழைத்துக் கொண்டு வந்திருக்கிறேன்" என்றாள் அக்கா.

எனக்கும் இரண்டு வார்த்தை சொல்ல வேண்டுமென்றே தோன்றியது. இருந்தாலும் ஏதோ சங்கோசம் என்னைத் தடுத்தது. அக்கா கூறியதற்குச் சிரித்துக் கொண்டேனே ஒழியப் பேசவில்லை.

"அவர் இன்னும் வரவில்லையா வெளியிலிருந்து?" என்று கேட்டாள் அக்கா.

"வந்துவிட்டு வெளியில் போனார்" என்று சொன்ன சரோஜா அதற்கு மேலும் ஒன்றும் பேசவில்லை.

"ஏன் என்னமோபோல் இருக்கிறாய்? ஏதாவது வேலை இருக்கிறதா? இல்லை வெளியில் போக வேண்டும் என்று நினைத்துக்கொண் டிருக்கிறாயா? நாங்கள் வந்தது உனக்குப் பிடிக்கவில்லைபோல் இருக்கிறது. நாங்கள் போய்விட்டு வருகிறோம்" என்று சொல்லிக்கொண்டே கேலியாகச் சிரித்தாள் அக்கா.

சரோஜா அதற்கும் பலவந்தமாகச் சிரித்துக்கொண்டாளே ஒழிய ஒன்றும் சுவாரஸ்யமாக இருப்பதாகப் படவில்லை.

"எனக்கு ஒன்றும் பிடிக்காமல் போகவில்லை. உங்களுக்குத்தான் எங்களைக் கண்டால் பிடிக்கவில்லை. வேண்டுமென்று அவமானப்படுத்துகிறீர்கள்" என்றாள் டப்பென்று.

அக்காவும் நானும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம்.

"என்ன சரோஜா? பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தால் என்னவோ எல்லாமோ பேசுகிறாயே? உங்களை நாங்கள் என்ன செய்தோம்?" என்று அக்கா கேட்டதும் சரோஜாவின் கண்களிலிருந்து மல மலவென்று கண்ணீர் பொங்கியது.

துக்கம் தொண்டையை அடைக்க, "தாத்தாதான் அப்பாவை வாயில் வந்தபடி பேசுகிறாரே? அது போதாதா? இவரை யாராவது கேட்டார்களா? எல்லாம் இவராகத்தானே செய்தார்" என்றாள் சரோஜா.

ரெயில்வண்டியில் சொல்லிக்கொண்டு வந்தாளே அக்கா, அது நினைவு வந்தது எனக்கு. "அப்படித்தான் ஏதாவது அசட்டுக் காரியம் செய்திருப்பார், அப்பா" என்று நினைத்துக்கொண்டு அக்காவையும் கேட்டு விட்டேன்.

அக்காவுக்கு ஒன்றும் தோன்றவில்லை. "அப்படி என்ன சொல்லிவிட்டாராம்? முத்தண்ணாவுக்கு அவர் சுபாவம் தெரியாதா? ஏதாவது சொல்லியிருப்பார். அதனால் என்ன பிரமாதம்?" என்றாள்.

"அவர் எதைச் சொன்னால் யார் என்ன சொல்லுகிறார்கள் இப்போ? எப்போதோ நினைத்துக்கொண்டு இரண்டு காணி நிலத்தை அப்பாவிடம் கொடுத்துவிட்டாராம். அதை அப்பா கொடுக்க மாட்டேன் என்று சொன்னார்? அதற்கு வாயில் வந்தபடி திட்டி ஒரு கடிதம் எழுதுகிறாராம். வேண்டுமென்றால் வாயாக வார்த்தையாக வாங்கிக்கொண்டு போகிறதுதானே? அவராகத்

தானே கொடுத்தாராம்?" என்று சரோஜா சொன்ன போது எனக்கு என்னவோ செய்துவிட்டது.

"இதையெல்லாம் உனக்கு யார் எழுதியது? எங்களுக்கு ஒன்றும் தெரியாதே?" என்றேன் நான்.

"வேறு யார் எழுதப் போகிறார்கள்? அப்பாதான் வருத்தப்பட்டுக்கொண்டு எழுதியிருக்கிறார். வேண்டுமானால் உடனேயே ராமுவின் பேரில் எழுதி ரிஜிஸ்தர் செய்துவிடுவதாக உனக்குச் சொல்லச் சொல்லி எழுதியிருக்கிறார்" என்றாள் அவள் அக்காவைப் பார்த்து.

அவளும் கலகலவென்று பேசவில்லை. அதற்கு மேல் எங்களாலும் அவ்விடத்தில் உட்கார முடியவில்லை.

"அப்படித்தான் எதையாவது சொல்லிக்கொண்டு இருப்பார் அவர். வயதாய் விட்டதோ இல்லையோ? முத்தண்ணாவுக்கும் எல்லாம் தெரியும். இதற்கு ஒன்றும் வருத்தப்பட வேண்டாம். நான் அவருக்கு எழுதுகிறேன் என்று எழுது" என்று சொல்லிவிட்டு அக்காவும் நானும் கிளம்பினோம்.

"இவ்வளவு வருஷங்கள் கழித்து இதை எதற்கடா நினைத்துக்கொள்ள வேண்டும்? அவர் சம்பாதித்ததே நிற்கவில்லையாம். இதெல்லாம் வந்துதானா தாங்கப் போகிறது? ஒரு சமயம் ராமுவுக்கு ஏதாவது செய்ய வேண்டும் என்று நினைத்துக்கொண்டு விட்டாரோ? எதுதான் இருக்கட்டும்; இதைப் போய் அல்பம்போல் கேட்பானேன்; நீதான் சொல்லு. கடைசியில் இரண்டு வேலி நிலத்தையும் கொடுத்துவிட்டு, 'இரண்டு காணியாம்!' இவள் சொல்லுகிறாள். உலகத்தில் இப்படியெல்லாம் ஒரு பிரகிருதிகளா? எல்லாம் வேண்டுமென்று நமக்குத்தான் வந்து சேருகிறதடா!" என்று அக்கா வண்டியில் வருத்தப்பட்டுக்கொண்டே வந்தாள்.

"அதென்ன அவ்வளவு? யார் சொல்வதுதான் போய், பார்த்துவிடலாம். அப்படியா ஒருவர் எழுதியிருப்பார்? எனக்கொன்றும் இதெல்லாம் வேண்டவே வேண்டாம். அப்பாவுக்கு எழுதிவிட்டு மறுவேலை பார்க்கிறேன்" என்றேன் நான்.

"வயது காலத்தில் இருப்பது போதும். நீயும் எதை யாவது எழுதி வைக்காதே, யோசித்து எழுது" என்றாள் அக்கா.

"இரண்டு மூன்று நாட்களாக ஆசிரியர் என் பேரில் கோபமாக இருப்பதற்குக் காரணம் இதுதானா, அத்திம்பேரே?" என்றேன், எல்லோருமாகப் பேசிக்கொண்டிருக்கும்போது.

"அவன் கிடக்கிறானடா! எங்கே போனாலும் இப்படித்தான். அவனுக்குப் பிடித்ததைத்தான் பிரசுரம் செய்வான். மற்றதைக் காதில் வாங்க மாட்டான். அவன் இப்போது தன் இஷ்டப்படி நடந்தால் உனக்கு ஒரு காலம் வராதா? அப்போது நீயும் உன் இஷ்டப்படி செய். அவ்வளவுதானே; வீட்டுச் சண்டைகளை எல்லாம் வெளியில் காட்ட முடியுமா? நன்றாய் இருக்கிறதே!" என்றார் அத்திம்பேர்.

நானும் அப்படித்தான் தீர்மானம் செய்தேன்.

"எல்லாம் சித்தி இருக்கும் வரையில்தான் எனக்கும் அங்கே சலுகை. அவள் போனதும் அங்கே யார் கேள்வி முறை?" என்று சரோஜா கடைசியில் கூறிய வார்த்தைகள் என் மனத்தில் ஆணிபோல் பதிந்தன.

உண்மையில் உலகத்தில் யாருக்கு யார்?

# 18

## யோகம்

எங்கள் இஷ்டப்படி நாங்கள் போட்டி போட்டுக்கொண்டு செய்தாலுங்கூடப் பராசக்தியின் பெயர் எங்கும் காற்றுப்போல் பரவிவிட்டது. 'சந்தாதாரர்கள் மாத மாதம் அதிகரித்துக்கொண்டு வர வர எங்கள் பொறுப்புக் குறைந்தாலுங்கூட எங்கள் உத்ஸாகம் அதிகரித்தது. நான் கைவைத்த முகூர்த்தம் பத்திரிகை வெகு விமரிசையாக நடக்கிறது என்று ஊரார் சொல்லுவதுடன் ராஜன் அவர்களுக்கும் வெகு திருப்தியாக இருந்தது. அத்திம்பேரிடம சொல்லி வெகு சந்தோஷப் பட்டுக்கொண்டார்.

“ரொம்ப சந்தோஷம். இனி அவளைப்பற்றி என்ன கவலை? ஒரு நல்ல வரன் வந்திருக்கிறது. உங்களுக்குத் தெரியுமோ இல்லையோ நம்ம ஊர் நடராஜன்? அவனுடைய மருமாள்; பேசாமல் செய்துகொள்ளச் சொல்லுங்கள். நாங்கள் சொன்னால் ஒன்றும் கேட்க மாட்டேன் என்கிறான்” என்றார் அத்திம்பேர்.

‘உங்களுக்கு ஏன் கவலை? நான் பார்த்துச் செய்து வைக்கிறேன்; பேசாமல் இருங்கள்” என்றார் அவர்.

நான் கவலைப்பட்டுக்கொண்டிருந்ததற்கும் அப்பா கவலைப்படுவதற்கும் ஒரு நல்ல காலம் வந்து விடிந்ததே என்று எனக்கு மிகவும் திருப்தியாக இருந்தது.

அன்று ஊரிலிருந்து ஏதாவது கடிதம் வரும் என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். ஆனால் அக்காரியத்தியம் எதிர்பார்த்துக்கொண்டிருந்த மாதவி ஊரிலிருந்து வந்து சேர்ந்தாள். மாதவி அக்கா வீட்டுப் பணிப்பெண். அவள் ஊருக்குப் போய்விட்டு வரும்போது அப்பாவையும் குழந்தைகளையும் பார்த்துக்கொண்டு வரும்படி அக்கா சொல்லியனுப்பி இருந்தாள்.

அப்பா குழந்தைகளுக்குப் பக்ஷணங்களும் பழங்களும் வாங்கி அனுப்பியிருந்தார்.

"அப்பாவையும் மன்னியையும் பார்த்தாயா? என்ன சொன்னார்கள்?" என்று கேட்டாள் அக்கா மாதவியை.

"அப்பா உடம்பே நன்று இல்லேங்க. மற்றப்படி அம்மா குழந்தைங்க எல்லாரும் சுகந்தான். சின்னப் புள்ளே ரொம்ப நல்லா இருக்குதுங்கம்மா" என்றாள் அவள்.

"ஏன் ஏதாவது உடம்பு சரி இல்லேயாமா அப்பாவுக்கு? ஒன்றும் சொல்லவில்லேயா? சின்ன ஐயரைப் பார்த்தாயா?" என்றேன் நான்.

"அப்பாவுக்குத்தான் அடிக்கடி ஜுரம் வருதுங்களாம். அதுவுமில்லாமே சின்ன ஐயரும் இங்கே வந்துவிட்டாரா? ரொம்ப ஏக்கமாக இருக்கிறாப்பலே இருக்குதுங்க."

"அப்படி ஒன்றுமே எழுதவில்லேயே! இரண்டு நாள் முந்திக்கூடக் கடிதம் வந்ததே!" என்று அக்கா என் முகத்தைப் பார்த்தாள்.

"அம்மாவைக் கேட்டாயா? என்ன சொன்னுங்க?" என்றேன் நான்.

"அவுங்கதான் சொன்னுங்க: பாபுவிடமிருந்து கடிதாசு வந்ததாம். என்னமோ ரொம்ப வருத்தப்பட்டுக்கிட்டு எழுதி இருக்காம். அதிலே இருந்து அப்பா ரொம்ப ஒரு மாதிரி இருக்காருன்னு அம்மா சொன்னுங்க" என்றாள் மாதவி.

"அத்தையம்மாளேப்பற்றி ஏதாவது சொன்னுங்களா?" என்றாள் அக்கா.

"அத்தையம்மாதான் அப்புறம் வரவே இல்லேயாம். நம்மைப் பத்திக் கவலேப்படுகிறவங்கன்னுல் இப்படியா இருப்பாங்க?' இன்னு அம்மா ரொம்பக்கோவிச்சுக்கிட்டாங்க. அப்பா அதைப்பத்தி ஒண்ணும் பேசலேங்க" என்றாள் அவள்.

"ஆமாம், பாபுவிடமிருந்து என்ன கடிதாசு வந்து அன்று சொன்னுளா அம்மா?" என்று கேட்டேன் நான்.

"அதைப்பத்தித்தான் ரொம்பச் சொன்னுங்க. என்ன என்னமோ ஒன்றும் சொல்லப் பிடிக்கவில்லை எனக்கு. அத்தையம்மா என்னமோ கல்யாணம் பண்ணப் போருங் களாம். அதுக்கு இங்கே வரப் போருங்களாமே. உங்க ளுக்கு ஏதாவும் எழுதி இருக்காங்களா?" என்று என்னைக் கேட்டாள் அவள்.

"எங்கே? இங்கேயா வரப் போகிருள்?" என்றேன் நான்.

"இங்கே எதற்குடா வரப்போகிருள்? ஏதாவது பார்க்க அங்கே வரப்போகிருளோ என்னமோ?" என்ருள் அக்கா.

மாதவி தன் வேலையைப் பார்க்கப் போய்விட்டாள்.

"என்னவாம்? மாதவி என்ன பொரிந்துகொட்டு கிருள்!" என்ருர் அத்திம்பேர் வந்துகொண்டே.

"வேறு என்ன நல்ல சமாசாரம் கொண்டு வரப் போகிருள்? கவலைக்குத்தான்; அப்பாவுக்கு உடம்பே சரி யில்லையாம். இந்தப் பொண்ணு பாபு என்னமோ மிகவும் கஷ்டப்படுகிருளாம். அந்த அழகில் அத்தை வேறு கல்யாணப் பிரஸ்தாபம் எடுக்க வரப் போகிருளாம்" என்று அலுத்துக்கொண்டாள் அக்கா.

"ருக்குவுக்கா? யாருக்குக் கொடுக்கப் போகிருர் களாம்?" என்ருர் அவர்.

அதைத் தெரிந்துகொள்ளத்தான் எனக்கும் ஆவ லாக இருந்தது.

"யாருக்கு என்று நான் கண்டேனு? வரன் தேடவோ அல்லது பெண்ணைப் பார்க்க யாராவது வருகிருளோ என்னமோ?" என்ருள் அக்கா. மணி ஓடிவிட்டது. நானும் அத்திம்பேரும் அவசர அவசரமாகச் சாப்பிட்டு விட்டு ஆபிசுக்குப் புறப்பட்டோம்.

அன்று ஆபீசில் நுழைந்தவுடன் எல்லோரும் வந்து ஒவ்வொருவராக என் கையைப் பிடித்துக் குலுக்கினார்கள்.

"உங்களுக்கென்ன ஸார்? வருவதற்குள் அப்படி அதிருஷ்டம் அடித்துவிட்டது. எங்களைப் பாருங்கள், மாடு மாதிரி உழைக்கிறோம்; ஒன்றையும் காண வில்லை" என்றார் ஒரு டைபிஸ்ட்.

"நம்மைப்போல் உழைத்தால் அதுதான் ஸார், கிடைக்கும். இரண்டு மணிக்கே எல்லாவற்றையும் மூட்டை கட்டி வைத்துவிட்டு ஜோராகக் கிளம்புகிறார் கள் பாருங்கள்; அவர்களுக்குத்தான் காலம்" என்று ஒருவர் குத்தலாகச் சொன்னார்.

எனக்கு மட்டும் என்ன விஷயமென்று தெரிய வில்லை. என்னையும் விடச் சீக்கிரமாக ஆசிரியர் வந்து உட்கார்ந்துகொண்டிருந்தது எனக்கு அதிசயமாகத் தோன்றியது. அவசர அவசரமாக என் மேஜைக்கு வந்த போது, "என்ன, இப்போதே ஆரம்பித்து விட்டாப்போல் இருக்கிறது, நேரம் கழித்து வர?" என்றார் ஆசிரியர்.

"இல்லையே, எப்போதும்போல்தானே வருகிறேன்" என்று கடிகாரத்தைப் பார்த்தேன் நான். மணி பத்துத் தான்.

"கௌரவமாக இருக்கத் தெரிய வேண்டாமா? எல் லோரும் என்னைப் போலவேயா இருப்பார்கள், ஆசிரியர் என்றால்?" என்றார் ஆசிரியர் மறுபடியும்.

"ஏன் இப்படியெல்லாம் சொல்லுகிறீர்கள்? புதிதாக என்ன வந்துவிட்டது இப்போது எனக்கு?" என்றேன் நான்.

"அதைத்தான் சொன்னேன் இப்போது; இதோ பாருங்கள் கடிதத்தை" என்று ஒரு கடிதத்தை என்னிடம் கொடுத்தார்.

படித்துப் பார்த்ததும் என்னாலேயே நம்ப முடிய வில்லை. ஆசிரியரை வேறு இலாகாவுக்கு மாற்றிவிட்டு

என்னை ஆசிரியராக நியமித்துவிட்டதாக ராஜன் கடிதம் எழுதியிருந்தார்.

"உம்...இனி உங்கள் இஷ்டப்படி நடத்தலாம், ஐயா! நான் இருந்ததுதானே உங்களுக்கு இடைஞ்சலாக இருந்தது." என்று சிரித்துக்கொண்டார் அவர். அவருக்கும் இதைவிட உயர்ந்த உத்தியோகம் கிடைத்துவிட்டதனால் இந்தச் சிரிப்பு.

"இடைஞ்சல் என்ன ஸார்? ஏதோ அவரவர்கள் விருப்பத்தைத் தெரிவித்துக்கொள்வதுதானே? இதற்கென்ன பிரமாதம்?" என்று நானும் சிரித்துக் கொண்டேன்.

அப்போது சேவகன் ஒரு கடிதத்தை என்னிடம் கொண்டு வந்து நீட்டினான்.

"என்னது?" என்றார் ஆசிரியர்.

"ஒன்றுமில்லை. ராஜன் வரச் சொல்லி எழுதியிருக்கிறார். உடனே வரவேண்டுமாம். போய்ப் பார்த்துவிட்டு வரட்டுமா?" என்றேன்.

அங்கிருந்து ராஜனுடைய பங்களாவை அடைந்தேன்.

"என்ன ஸ்ரீநிவாசன்? வரவேண்டும். ஒரு காரியம் செய்ய வேண்டும். இந்த ஒரு வாரத்துக்குச் சற்றுச் சிரமத்தைப் பார்க்கக்கூடாது" என்றார் ராஜன் என்னைப் பார்த்ததும்.

"சிரமம் என்ன? என்ன செய்ய வேண்டும் சொல்லுங்கள்!" என்றேன் நான்.

இதைக் கேட்டதும் அவருக்குப் பரம திருப்தியாகிவிட்டது. "அப்படிச் சொல்லுகிறவன்தானே எனக்கு வேண்டும்? ரொம்ப சந்தோஷம். ஒரு விஷயமாகக் கல்கத்தாவுக்குப் போய் வர வேண்டும்; என்ன?" என்றார்.

"கல்கத்தாவுக்கா? என்ன விசேஷம்?" என்றேன் நான்.

"அங்கே வந்தால் நம் பத்திரிகைக்கு இன்னும் வேண்டிய சௌகரியம் செய்து தருவதாகவும் முக்கிய மான ஒரு யந்திரத்தையும் பார்த்துத் தருவதாகவும் என் நண்பர் ஒருவர் எழுதியிருக்கிறார். நான் அவருக்கு எழுது கிறேன். நீங்கள் அங்கே சென்று இறங்கிக்கொண்டு வேண்டியவைதைப் பார்த்துக்கொண்டு வர வேண்டும்" என்றார் அவர்.

வேண்டிய ரூபாய்கள், கடிதங்கள் எல்லாவற்றையும் பெற்றுக்கொண்டு வந்து சேர்ந்தேன்.

கல்கத்தா என்றதும் எனக்குப் பாபுவின் ஞாபகந் தான் முதலில் வந்தது. அவளும் எழுதியிருந்ததால் கட்டாயம் புறப்பட வேண்டும் என்று தீர்மானம் செய்து கொண்டேன்.

"நேரில் பார்த்துவிட்டு வந்து அப்பாவுக்கு எழுத லாம்டா" என்றாள் அக்கா.

"நல்ல வேளையாக எல்லாம் சேர்ந்துகொண்டது. இல்லாவிட்டால் எங்கே கிளம்ப முடியப் போகிறது?" என்றேன் நானும்.

"கல்கத்தாவில் ரஸகுல்லா மிகவும் பேர் போனது. மறக்காமல் வாங்கிக்கொண்டு வாடா" என் றார் அத்திம்பேர்.

"சீமாவை என்னவென்று நினைத்துக்கொண் டிருக் கேள்? பெரிய ஆசிரியராகி விட்டான். கோபாலனை மாற்றிவிட்டு இவனைப் போட்டுவிட்டாராமே ராஜன்? தெரியாதா இன்னும் உங்களுக்கு?" என்று கேட்டாள் அக்கா கேலியாக.

"போக்கிரிப்பயல்னு அவன்! என்னிடம் சொன்னானா பார்? அக்காதானே எல்லாம் பண்ணிக்கொடுத்தாள்?" என்றார் அத்திம்பேர் வேடிக்கையாக.

"உங்கள் உத்தியோகத்தை விடப் பிரமாதம் பாருங்கோ; என்னமோ!" என்று அலக்ஷ்யமாகச் சொன்னேனே ஒழிய எனக்கும் பெருமை இல்லாமலா இருக்கும்?

"சரி. ஊருக்குப் போய்விட்டு வந்ததும் விருந்து வைக்க வேண்டியதுதான்" என்று அத்திம்பேர் இன்னும் முடிக்கக்கூட இல்லை. அக்கா தோள்பட்டையைக் கன்னத்தில் இடித்துக்கொண்டாள்.

"அவனும் வந்து ஆறு மாதம் ஆகப் போகிறது. இப்போதுதான் நினைத்துக்கொண் டீர்களாக்கும்?" என்றாள் அக்கா. எனக்காக என்ன விருந்து?

# 19

## பாபு

கல்கத்தாவுக்கு இதுதான் என்னுடைய முதல் பிரயாணம். அங்கே நான் சந்தித்தவர் ராஜனைப்போல் தகுந்த பெரிய பேர்வழி. என்னைக் கண்டதும் மகிழ்ச்சியுடன் ஆசார உபசாரத்துடன் வரவேற்ருர். பெரிய வீடு, வேண்டிய இடம் இருந்தாலுங்கூட எனக்கென்று தனியாக ஓர் அறை ஏற்பாடு செய்திருந்தார். நான் போய் இறங்கியதும் அவ்விடத்தில் எனக்கு வேண்டியவை தயாராகக் காத்துக்கொண் டிருந்தன. ஒரு சேவகனும் அவ்விடம் நின்றுகொண் டிருந்தான்.

வந்தவர்கள் தங்களுக்கு வேண்டியதைப் பார்த்துச் செய்துகொண்டு, அலங்கரித்துக்கொண்டு, சிரமபரிகாரம் செய்துகொண்ட பிறகுதான் மற்றவர்களுடன் பேசுவது என்பது மேல்நாட்டாருடைய வழக்கமாம். இதெல்லாம் இங்கே வந்து இறங்கியதுந்தான் எனக்குத் தெரிந்தது.

நாமானுல் காட்டு மிராண்டிகள்போல் தலையையும் விரித்துக்கொண்டு பிரயாண சிரமம் ஆறுவதற்கு முன்பே அவர்களை நிறுத்திக் கேள்விகள் கேட்போம். இதை நினைத்துக்கொண்டபோது எனக்கே சிரிப்பு வந்தது.

சாவகாசமாக எல்லாவற்றையும் முடித்துக்கொண்டு சிற்றுண்டிகளைச் சாப்பிட்டுவிட்டு ஒரு சோபாவில் சாய்ந்துகொண் டிருந்தேன்.

அப்போது சேவகன் வந்து, "சிரம பரிகாரம் முடிந்திருந்தால் உங்களைப் பார்க்கலாமா என்று ஐயா கேட்கிருர். உங்களுக்காக ஹாலில் காத்திருக்கிருர்" என்ருன் மரியாதையுடன்.

"எனக்காகக் காத்திருக்கிருரா? தாராளமாக உள்ளே வரலாமென்று சொல்லேன்" என்றேன் நான்.

"இப்போது அப்படி வழக்கமில்லை ஸார். வந்தவர்கள் உங்களுடைய சௌகரியங்களைப் பார்த்துக்கொண்டு, வெளியில் வந்து ஹாலில் உட்கார்ந்த பிறகுதான் அவர்களுடன் பேசுவது வழக்கம். அதற்கு முன் உங்களைத் தொந்தரவு செய்வதில்லை" என்றான் அவன்.

"அவனுக்குத் தெரிந்ததுகூட நமக்குத் தெரியவில்லையே" என்று எனக்கு மிகவும் வெட்கமாக இருந்தது. சங்கோசத்துடன் வெளியே போனேன். சேவகன் வழி காண்பித்துக்கொண்டே அவர் உட்கார்ந்திருந்த அறைக்கு அழைத்துப் போனான்.

"என்ன ஸ்ரீநிவாசன்? எல்லாம் சரியாக வந்து சேர்ந்ததா? காபி பலகாரம் எல்லாம் சாப்பிட்டீர்களா?" என்றார் அவர்.

"எல்லாம் வந்தது. என்றால் உங்களுக்கு ரொம்ப சிரமம்" என்றேன் நான்.

"இதென்ன பிரமாதம்? நித்தியம் இதுதான் நம்ம வீட்டில். உனக்காக என்ன செய்துவிட வேண்டும் அதிகமாக?" என்றார் சிரித்துக்கொண்டே.

"ராஜன் எப்படி இருக்கிறார்? உங்கள் பத்திரிகை எல்லாம் எப்படி நடக்கிறது?" என்றார் மேலே.

"எல்லாம் நன்றாக நடக்கிறது" என்று சொல்லிக்கொண்டே இரண்டு மூன்று கடிதங்களை அவரிடம் கொடுத்தேன்.

அவர் அதையெல்லாம் படித்து முடித்துவிட்டு என்னை ஒரு முறை பார்த்தார்.

"நீங்கள்தான் ஆசிரியரோ!" என்றார். ஏன் இப்படிக் கேட்கிறார் என்று எனக்குத் தெரியவில்லை. சங்கோசத்துடன், "ஆமாம்" என்றேன்.

"உம்....இந்த ராஜன் எப்படி இதில் எல்லாம் போய் மாட்டிக்கொண்டான் என்று தெரியவில்லை. போயும் போயும் இதிலா செலவு செய்ய வேண்டும்? வேறு ஏதாவது உபயோகமான வேலைகளைச் செய்யக் கூடாதா?" என்றார் அவர்.

பத்திரிகைப் பிரசுரம் என்ன? அப்படி ஒன்றுக்கும் உபயோகமற்றதாகவா போய்விட்டது என்று எனக்கு அதிசயமாக இருந்தது. இவர் ஒரு மாதிரிப் பேர்வழிபோல் இருக்கிறது என்று நினைத்துக்கொண்டேன்.

"ஏன் உங்களுக்கு இதெல்லாம் உபயோகமற்றதாகவா தோன்றுகிறது? உலகத்தில் இதெல்லாந்தானே முக்கியமான விஷயங்கள்?" என்றேன்.

"நல்ல உபயோகம்! வெளிநாடுகளுக்குச் சொல்லு ஒப்புக்கொள்ளுகிறேன். வேலையைச் செய்துவிட்டு வந்தவர்கள் பொழுது போக்குவதற்கு உபயோகம். நம்ம ஊரில் வேலையற்ற வெறும் சோம்பேறிகளுக்கு இதெல்லாம் எதற்கு? பணமிருந்தால் வேலை இல்லாதவர்களுக்கு ஒரு பிழைப்புக் கிடைக்கும்படி எதையாவது ஒன்றை ஆரம்பிப்பதுதானே?" என்றார்.

"வேறு என்ன செய்யலாம் என்கிறீர்கள்? இதிலும் நாலு பேருக்குப் பிழைப்புக் கிடைக்காமலா போய்விடுகிறது? ஒருவராகவா செய்ய முடியும்?" என்றேன் நான்.

"இங்கே வா காட்டுகிறேன்" என்று என்னையும் அழைத்துக்கொண்டு ஓர் அறைக்குப் போனார் அவர். அந்த அறை ஒரு பெரிய ரசாயனசாலைபோல் தோன்றியது. கண்ணாடிச் சாமான்களும், மூலைக்கு மூலை கருவிகளும் குவிந்து கிடந்தன. அதிலிருந்து அவர் ஒரு பெரிய ஆராய்ச்சிக்காரராக இருக்க வேண்டும் என்று தோன்றியது.

"இதோ பார்; இந்தச் சாயத்தைக் கண்டுபிடித்திருக்கிறேன்; இந்தக் கல்லால் இதைச் செய்யலாம், இந்த மண்ணால் இதைச் செய்யலாம். நம்ம தேசத்தில் எவ்வளவு சாமான்கள் வீணாகப் போகின்றன தெரியுமா? இதையெல்லாம் பார்த்துச் செய்பவர்கள் இல்லை. இந்த ராஜன் வந்து என்னுடன் சேர்ந்து எதையாவது ஆரம்பிக்கக் கூடாதா? கையில் பணம் இருப்பவர்களுக்கு இதெல்லாம் தோன்றுகிறதில்லை" என்றார் அவர்.

இவரும் பணம் உள்ளவர்தானே? ஏன் செய்யக் கூடாது என்று தோன்றியது எனக்கு. யாரையாவது கேட்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டேன்.

இப்படி எதையோ பேசிக்கொண் டிருந்தாரே தவிர நான் வந்த வேலையைப்பற்றி அவர் ஒன்றும் பேசப் போவதாகவே எனக்குப் படவில்லை.

எல்லாம் அந்த அந்த உலகத்தில்தான் மனிதர் களுக்கு மதிப்புப்போல் இருக்கிறது. ஆசிரியர் என்ருல் உலகமே வாயைப் பிளக்கும் என்று நான் எண்ணியது பைத்தியக்காரத்தனம் என்றே தோன்றியது. ஆனல் பணம் என்ற விஷயத்துக்கு மட்டும் எப்படி இருந்தாலும் எவ்விடத்திலும் மதிப்பு உண்டு என்பது என் மனத்தில் உறுதியாகப் பதிந்தது.

'உலகத்தில் வேண்டியது பணந்தான். அதுதான் பிரதானம்' என்று நினைத்துக்கொண்டேன்.

தொண தொணவென்று தம்மைப்பற்றியே அவர் பேசிக்கொண் டிருந்ததைக் கேட்டு என்னல் அங்கே அதிக நேரம் உட்கார முடியவில்லை.

"கொஞ்சம் அவசரமான வேலை இருக்கிறது; வெளி யில் போய்விட்டு வருகிறேன்" என்றேன்.

"நானும் எவ்வளவோ பேரைப் பார்த்தேன். உங் களைப்போல் பொறுமையுடன் எல்லாவற்றையும் ஒரு வராவது கேட்டுக்கொள்ளவில்லை. தாங்கள் ஒரு மாதம் என்னுடன் இருந்தால் சந்தோஷமாக இருக்கும்" என்ருர் அவர்.

இவருடைய தொணதொணப்புக்கு யார்தாம் ஈடு கொடுப்பார்கள்? வேறு வழி இல்லை என்று நினைத்துக் கொண்டபோது எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

"அதற்கென்ன? இருந்தால் போகிறது" என்றேன் சிரித்துக்கொண்டே.

"ராஜனுக்கு நானே எழுதிவிடுகிறேன்" என்ருர் அவர்.

"வேண்டாம், வேண்டாம். உங்களுக்கு எதற்குச் சிரமம்? நானே எழுதிப் போடுகிறேன்" என்று என் அறையை அடைந்தேன். எங்கே எழுதிவிடப் போகிறாரோ என்று எனக்கே பயமாக இருந்தது. ஆனால் நண்பருடைய குணம் அவருக்கா தெரிந்திராது? அதற்காகத்தான், 'நான்கு நாளைக்குமேல் தங்காதே; அவர் என்ன சொன்னாலும் புறப்பட்டு வந்துவிடு" என்று கூறினார்போல் இருக்கிறது.

வேலை விஷயமாக மாலையில் பார்த்துக்கொள்ளலாம், பாபுவைப் பார்த்துவிட்டு வரலாம் என்று கிளம்பினேன்.

புறப்படும் சமயத்தில் சேவகன் வந்து, "ஸார்" என்றான்.

"என்ன?" என்றேன் நான். அதற்குள் இனும் கேட்க வந்துவிட்டானா என்று பார்த்தேன்.

"ஐயாவோடு பேச்சுக்கொடுத்து மாட்டிக்காதிங்க. உங்க வேலையைப் பார்த்துக்கொண்டு புறப்பட்டுடங்கன்னு நல்லது" என்றான் அவன்.

"ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?" என்றேன் நான்.

"வீட்டில், அம்மா, குழந்தைகள் எல்லோரும் அவரிடம் மாட்டிக்கொண்டு திண்டாடுவது போதாதா? நீங்களும் திண்டாடணுமா?" என்றான் அவன்.

"அப்படி என்ன செய்துவிடுவார்? பயமுறுத்துகிறாயே?" என்றேன்.

"ஒன்றுமில்லை ஸார். பேச ஆரம்பித்தால் ஓயமாட்டார். நாம் ஒன்றும் பேசவும் கூடாது. அவர் பேசினால் பேசிக்கொண்டிருக்கட்டும் என்று அந்தப்புறம் போய் விடவும் கூடாது. போய்விட்டோமோ, பிடித்தது சனி. பிடித்து நிறுத்தி வைய ஆரம்பித்துவிடுவார். குழந்தை குட்டி எல்லோருக்கும் நடுக்கந்தான். அவர் பேசுவதைக் கேட்கவும் வேண்டும்; அப்படியே செய்யவும் வேண்டும் என்றால் யாரால் ஸார் முடியும்? அதனால்தான் எல்லோரும் பயப்படுகிறார்கள். நீங்களே வேண்டுமானால் கேட்டுப்

பாருங்கள். ஒரு தடவை வந்தவர் மற்றொரு தடவை வரமாட்டாரே" என்று முடித்தான் அவன்.

"பாவம், நல்ல மனிதர்! என்ன செய்வது? அது ஒரு மாதிரிப் பைத்தியம்" என்று அவன் காதில் விழுந்ததும் விழாததுமாகச் சொல்லிக்கொண்டே கிளம்பிவிட்டேன்.

முதலில் நம்ம பாஷை தெரியாத ஊர். அதுதான் இல்லை என்றால் ஆங்கிலம் சில பேருக்கு மாத்திரம் தெரிகிறதே ஒழிய, சாதாரணமானவர்களுக்கு அதுவும் தெரியவில்லை. பாபுவின் வீட்டைத் தேடிக்கொண்டு போய்ச் சேருவதற்கு வெகு நேரம் ஆகிவிட்டது.

அந்த விலாசத்துக்கு வந்தும் வீடு கிடைக்கவில்லை. தேடித் தேடிக் கடைசியில் ஒரு சிறிய சந்தை அடைந்தேன். இருபக்கங்களிலும் இருந்த அசிங்கமும் நாற்றமும்! மனிதர் அவ்விடத்தில் எப்படி வாழ முடியும் என்பதே எனக்குத் தெரியவில்லை. அங்கே கோடியில் இருந்த பாழடைந்த ஒரு வீட்டுக்கு என்னை ஒரு பையன் அழைத்துக்கொண்டு போய் நிறுத்தினான். அதைப் பார்த்த உடனேயே என் வயிற்றை ஒரு கலக்குக் கலக்கிவிட்டது. 'நன்றாகச் செல்வமாக வளர்ந்துவிட்டு, இந்தக் காலிச் சந்தில், ஒரு பாழடைந்த இடந்தானா கிடைக்கவேண்டும்?' என்று நினைத்துக்கொண்டே வீட்டுக்குள் நுழைந்தேன். குழந்தைகள் என்னைப் பார்த்துவிட்டு இங்கும் அங்கும் ஓடினார்களே தவிர என்னை யாரென்று தெரிந்து கொள்ள அவர்களால் முடியவில்லை. அவர்களையும் என்னால் யார், யார் என்று தெரிந்துகொள்ள முடியவில்லை. உள்ளே வந்து நின்றுகொண்டு, "பாபு!" என்று ஒரு சத்தம் கொடுத்தேன்.

"யாரது!" என்று கேட்டுக்கொண்டே உள்ளே யிருந்து ஓர் உருவம் வந்தது என்று சொல்ல வேண்டுமே தவிர பாபு வந்தாள் என்று என்னால் சொல்ல முடியவில்லை. துரும்பாக இளைத்து, கறுத்து, வாடியிருந்த அவளைக் கண்டதும் என்னால் ஒன்றுமே பேச முடியவில்லை கண்களில் மல மலவென்று கண்ணீர் நிறைந்துவிட்டது பிரமை பிடித்தவன்போல் ஒரு கணம் நின்றுவிட்டு,

"மாமாவா?" என்று அவள் கேட்டபோது அவளுடைய தொண்டையும் தழுதழுத்துவிட்டது.

சுவரில் சாய்ந்துகொண்டு அவள் விக்கி விக்கி அழ ஆரம்பித்தவுடன் என்னாலும் தாங்கவே முடியவில்லை. "அம்மா இருந்தால் இப்படி விட்டுவிடுவாளா?" என்று நினைத்துக்கொண்டு நானும் அழுதுவிட்டேன்.

இப்படி இருவரும் எவ்வளவு நேரம் இருந்தோம் என்பது எனக்கே தெரியவில்லை. நான் கண்ணைத் துடைத்துக்கொண்டு நிமிர்ந்து பார்த்தபோது அந்தத் தெருவே அங்கே கூடி இருந்தது.

"பாவம், பார்த்தால் வருத்தமாகத்தானே இருக்கும்? தாயில்லாக் குழந்தை!" என்று ஒருவருக் கொருவர் பேசிக்கொண் டிருந்தார்கள்.

நான் அவர்களை எல்லாம் போகும்படி கை ஜாடை காட்டினேன். பாபு உள்ளே சென்று முகத்தைக் கழுவிக் கொண்டு, "மூர்த்தி, மாமா வந்திருக்கா. எதிராளாத் துக்குப் போய்க் கொஞ்சம் டீ இலை வாங்கிண்டு வா" என்று ஒரு குழந்தையிடம் சொல்லிக்கொண் டிருந்தாள்.

இதைக் கேட்டதும் என் துக்கம் தாங்க முடியவில்லை. 'வரும்போது குழந்தைகளுக்குப் பிஸ்கோத் வாங்கிக் கொண்டு வர வேண்டும் என்றுகூடத் தோன்றவில்லை பார்த்தாயா?' என்று என்னையே நொந்துகொண்டேன். அசட்டுத்தனத்தைத் தவிர எனக்கு வேறு என்ன இருந்தது? உள்ளே சென்று பார்த்தேன். எங்கேயும் எனக்கு ஒன்றும் அகப்படவில்லை. ஒரு செம்பு கீழே வைத்திருந்தது. எனக்கு இருந்த வேதனையில் அதை எடுத்துக் கொண்டு வெளியில் போகிறோமே என்பதுகூடத் தோன்றவில்லை. முதலில் குழந்தைகளுக்கும் அவளுக்கும் காபி வாங்கிக்கொண்டு வரவேண்டுமென்று கிளம்பினேன். நான் பத்து அடிகள் போவதற்குள் ஒரு பையன் ஓடிவந்து, "என்ன ஸார் வேண்டும்?" என்றான்.

"காபி கிடைக்குமா இங்கே?" என்றேன்.

"நீங்கள் எதற்குப் போகவேண்டும்? நான் போய் வருகிறேன் கொடுங்கள். பாவம்! அம்மாவைப் பார்க்க

வந்தீர்களாக்கும்" என்று என் கையிலிருந்த செம்பை வாங்கிக்கொண்டான். ஹிந்தியைப் புரிந்துகொள்ளும் சக்தி எனக்கு வந்திருந்ததே ஒழிய நன்றாகப் பேச வரவில்லை. 'இடம் இப்படி இருந்தாலும் ஜனங்கள் எவ்வளவு நல்லவர்களாக இருக்கிறார்கள்!' என்று நினைத்துக் கொள்ளாமல் இருக்க முடியவில்லை. அவன் கையில் செம்பைக் கொடுத்துவிட்டு, "இன்னும் ஏதாவது பலகாரம் வாங்கிக்கொண்டுவா" என்று என் கொச்சை ஹிந்தியில் கூறிவிட்டு உள்ளே வந்தேன்.

உள்ளே பாபு சவுக்குச் சுள்ளிகளை வைத்து அடுப்பு மூட்டிக்கொண்டிருந்தாள். பெண் குழந்தைகள் இரண்டும் விரிந்த தலையும் விட்ட காதுமாகப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தன. என்னைப் பார்த்ததும் அவைகளுக்கு ஒரு விதத் திகில் ஏற்பட்டதுபோல் தோன்றியதே ஒழிய வேறு விதமாக எனக்குப் படவில்லை.

"நான்தான் மாமா, வாம்மா இங்கே" என்றேன். ஆனால் அவைகள் என்னைக் கண்டபடி! அறிவு தெரியாத தற்குறி முன் பார்த்ததுதான்.

"என்ன செய்யப் போகிறாய் இப்போ? உடம்பைக் கூடப் பார்த்துக்கொள்ளாமல்! ஏன் இப்படிக் கடிதமே போடாமல் இருந்துவிட்டாய். எழுதினால் வரமாட்டேனா? இப்படியா அநியாயம்!" என்றேன் நான்.

"என்னத்தைச் செய்கிறது? என்னத்தை எழுதுகிறது? என் தரித்திரம் விடியாத தரித்திரம்!" என்றாள் பாபு.

"எனக்காக நீ ஒன்றும் செய்ய வேண்டாம். உட்கார் இப்படி" என்றேன்.

"என்ன செய்யப் போகிறேனடா அப்பா, விருந்து! இவ்வளவு மாவைப் போட்டுக் கிண்டப்போகிறேன். வேறு என்ன இருக்கு செய்யறத்துக்கு?" என்றாள் அவள்.

வீட்டில் ஓர் இடத்தில் துளி சாமான் இருந்ததாகத் தெரியவில்லை. இருந்த நான்கு பாத்திரங்களும் அப்படியே கவிழ்த்தது கவிழ்த்தபடி இருந்தன. என்ன செய்கிறாள்? என்ன சாப்பிடுகிறாள்? என்று எனக்கு ஒன்றுமே

விளங்கவில்லை. இந்த லக்ஷணத்தில் இருக்கும் அவளை ஒன்றும் கேட்கவும் பிடிக்கவில்லை.

கூழைக் கிண்டி எனக்கும் வைத்துவிட்டுக் குழந்தைகளுக்கும் ஓர் ஓர் உருண்டை வைத்தாள் பாபு. என் நாக்கில் இறங்காத அந்தக் கூழை, குழந்தைகள் எவ்வளவு ஆசையுடனும் திருப்தியுடனும் தின்கிறார்கள் என்று பார்த்தபோது என்னால் அங்கே உட்காரவே முடியவில்லை. எழுந்து வெளியே வந்துவிட்டேன். எதிரில் காபிக்குச் சென்ற பையன் வந்து சேர்ந்தான்.

காபியை எடுத்துக்கொண்டு போய் பாபுவிடம் கொடுத்துவிட்டுப் பலகாரங்களை அவிழ்த்துக் குழந்தைகளுக்குக் கொடுத்தேன். அதற்குள் அதே பையன், "உங்களை எங்கள் அப்பா அழைக்கிறார்" என்றான்.

"அவர் எங்கே பாபு?" என்றேன் அவளைப் பார்த்து.

"அவர் வீட்டுக்கு வந்து பத்து நாள் ஆய்விட்டது" என்றாள் அவள். மேலே அவளை ஒன்றும் கேட்கப் பிடிக்கவில்லை. எதிர் வீட்டை நோக்கிச் சென்றேன்.

நல்ல வேளையாக அவர் ஆங்கிலத்தில் என்னை வரவேற்றார்.

தட்டுத் தடுமாறிக்கொண்டு பேசினாலும் ஏதோ ஆங்கிலம் என்று பேசினாரே. அதுவே எனக்குத் திருப்தியாக இருந்தது.

என்னைக் கண்டதும், "உள்ளே வாருங்கள்" என்று வீட்டுக்குள் அழைத்துக்கொண்டு போனார்.

"என்ன ஸார் இது, அநியாயம்? யாராவது ஒரு நடை வந்து பார்க்கக் கூடாதா? இப்படியா விட்டு விட்டுப் பார்த்துக்கொண்டிருப்பார்கள்?" என்றார் உட்காரும் போதே.

"ஒன்றும் கடிதம் வரவில்லை ஸார். எங்களுக்கு எப்படித் தெரியும் சொல்லுங்கள். அந்தப் பிராமணன் என்ன செய்கிறார் இப்போது?" என்றேன் நான்.

"வர வர அவர் செய்யும் அநியாயந்தான் பொறுக்க முடியவில்லை. குழந்தைகளையும் வைத்துக்கொண்டு அந்த அம்மாள் என்ன செய்வாள் பாவம்! ஒரு வாரம் வீட்டைத் திரும்பிப் பார்ப்பதில்லை!"

"அப்படி இருந்தால் நீங்கள் யாராவதுதான் தெரியப் படுத்தக் கூடாதா ஸார்?" என்றேன் நான். நம்ம வீட்டுக் காரியத்தில் அவருக்கு என்ன அவ்வளவு கரிசனம் என்பது கூட மறந்துவிட்டது அந்தச் சமயத்தில்.

"எழுதலாம் என்றுதான் ஸார் பார்த்தேன். 'புருஷன் வழியில்லாவிட்டால் யார்தான் என்ன செய்வது? படவேண்டியதுதான். அப்பாவைத் தொந்தரவு செய்து எவ்வளவு காலம் சாப்பிட முடியும்? செத்தாலும் சரி; இவர் காலிலேயே விழுந்து சாகிறேன்' என்று அம்மா ஒரே பிடிவாதமாக எங்களையும் எழுத விடவில்லை" என்று அவர் ஒரு பெரிய கதை சொல்லிவிட்டார். நடந்ததையெல்லாம் கேட்டு என் மனம் அப்படியே துடித்துப் போய்விட்டது. இப்படியா இருக்கவேண்டும் அவள் தலையில் எழுத்து!

'ஐந்து ரூபாய்க்குப் பாடம் சொல்லிக்கொடுத்து வயிறு வளர்ப்பதற்கா அப்பா இந்தப் படிப்பைக் கற்பித்தார்?' என்று நினைத்தபோது என் துக்கத்துக்கு அளவே இல்லை.

பாபுவின்பேரில் ஒரு பக்கம் மிகுந்த கோபம் வந்தது.

"இப்படியெல்லாம் இருந்தால் எதற்காக இங்கே உட்கார்ந்திருக்க வேண்டும்? பேசாமல் புறப்பட்டு வந்துவிடக் கூடாது?" என்றேன்.

"எங்கே வந்தால்தான் என் தரித்திரம் விடப் போகிறதுடா? எங்கேயோ செத்துவிட்டுப் போகிறேன் போ" என்றாள் அவள்.

அவளுக்கு உலகத்தில் எல்லா ஆசையும் தீர்ந்துவிட்டதென்றே தோன்றியது. அவ்வளவு வெறுப்புடன் இருந்தாள். அவளுடன் பேசிப் பயன் இல்லை என்றே எனக்குப்

பட்டது. பேசாமல் புறப்பட்டு வந்து அப்பாவுக்கு விவரமாகப் பெரிய கடிதம் எழுதினேன்.

இரண்டு மூன்று நாட்களுக்குள் என் தேகம் எங்கேயோ பறந்து போவதுபோல் இருந்ததே தவிர, சாப்பாடோ தூக்கமோ ஒன்றும் பிடிக்கவில்லை. இவர் ஒரு பக்கத்தில் தொணதொணவென்று என் பிராணனை எடுத்துக்கொண் டிருந்தார்.

சொல்வதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டு இவரிடம் என் வேலையை முடித்துக்கொள்வதற்குள் உயிரே போய்விடும்போல் இருந்தது.

"அவர் அப்படித்தான் சொல்லிக்கொண் டிருப்பார். சீக்கிரம் வேலையை முடித்துக்கொண்டு வந்து சேர்" என்று ராஜன் எழுதியிருந்தார்.

என் கடிதத்துக்கு அப்பாவிடமிருந்து உடனே பதில் வந்தது.

"உடனே எல்லோரையும் அனுப்பிவிடு. என்னால் முடிந்தது வயிற்றுக்குச் சோறுபோட்டுத் துணி வாங்கிக் கொடுத்துவிடுகிறேன், என் மூச்சு உள்ளவரையில். எவ்வளவு செல்வமாக வளர்த்துச் சீரும் சிறப்புமாகக் கொடுத்தாலும் இதையெல்லாம் பார்க்க வேண்டுமென்று என் தலையில் எழுதி இருக்கிறது. உங்கம்மா ஒன்றையும் பார்க்காமல் கண்ணை மூடிக்கொண்டு போய்விட்டாள். இன்னும் என்ன என்ன பார்க்க வேண்டும் என்று எழுதியிருக்கிறதோ!" என்று மிகவும் வருத்தமாக எழுதியிருந்தார்.

அவர் கடிதத்தைப் பார்த்த பிறகுதான் எனக்கும் இதெல்லாம் நினைவு வந்தது. இவனையும் அனுப்பி என்ன ரகளை வருமோ என்று பயமாக இருந்தது.

பாபுவைக் கிளப்புவதும் மிகவும் சிரமமாகிவிட்டது.

"செத்தாலும் இங்கேயே சாகிறேன். போய் அவமானப்பட வேண்டாம். கையில் தாராளமாக இருந்தால்தான் ஒருவருக்கு மதிப்பு. சோற்றுக்குக்கூட இல்லா

மல் விதியற்று நின்றால் யார் மதிப்பார்கள்? நான் போகவே மாட்டேன்" என்று ஒரே-பிடியாக நின்றாள்.

"அப்பா இருக்கும்வரையில் இதையெல்லாம் நீ யோசிக்க வேண்டாம். எதுவானாலும் நான் பார்த்துக் கொள்ளுகிறேன். நீ கிளம்பு" என்று நான்தான் அவளைக் கிளப்பவேண்டி இருந்தது. அவளை ரெயில் ஏற்றிய பிறகுதான் என் வேலையில் கவனம் சென்றது. வாங்க வேண்டிய ஒரு யந்திரத்தையும் பார்த்து ஏற்பாடு செய்துவிட்டுப் பத்திரிகை விஷயமாக நாலைந்து பேர்வழிகளைப் பார்த்துப் பேசிவிட்டுக் கிளம்ப ஏற்பாடு செய்தேன்.

யோகம் ஒன்று பிறந்தால் கூடச் சோகம் ஒன்று வரும்போல் இருக்கிறது?

# 20

## காரியவாதிகள்

கல்கத்தாவிலிருந்து நான் ஒரு வாரத்தில் திரும்ப வேண்டும் என்று நினைத்ததற்கு நேர் விரோதமாகவே முடிந்தது. ஒரு வாரம் ஓடி இரண்டாம் வாரமும் ஓடி விட்டது. டில்லி வந்து சேர்ந்தபோது இருபது நாட்களுக்குமேல் ஆகிவிட்டது.

வந்து இறங்கியதும் இறங்காததுமாக, "நீ எதற்குப் பாபுவைக் கிளப்பி அனுப்பினாய்? அங்கே அப்பாவுக்கு இருக்கும் சள்ளைகள் போதாதா?" என்று கோபமாகக் கேட்டாள் அக்கா.

"நீ போய்ப் பார்த்திருந்தாயானால் உனக்குத் தெரியும். அப்பாதானே அனுப்பிவிடும்படி எழுதினார். நீ ஏன் இப்படிக் கோபித்துக்கொள்ளுகிறாய்?" என்றேன் நான்.

"அவருக்கு என்னடா தெரிகிறது? எதைப் பார்த்தாலும் சங்கடமாக இருக்கிறது. அவருக்கு எல்லாம் ஒன்று. மற்றவர்களுக்கு அப்படியா? இதோ மன்னி எழுதியிருக்கிறாள் பார் ஒரு பாட்டம். ஏதோ தன்னால் முடிந்தது பத்து ரூபாயை அனுப்பிவிட்டு எனக்கும் எழுதினால் நானும் எதையாவது அனுப்பிவிட்டுப் போகிறேன். என்னத்துக்கு எல்லாவற்றையும் இழுத்துக் கட்டிக்கொள்ள வேண்டும்?" என்றாள் அக்கா.

இதைக் கேட்டதும் அக்காவின் பேரில் எனக்குக் கோபந்தான் வந்தது. தனக்கென்று இருந்தால் இப்படி நினைப்பார்களா யாராவது? அப்போது அப்பா அழைக்கவில்லை, செய்யவில்லை என்றுதானே சொல்லு வார்கள்? பாவம்! அப்படி ஏதாவது ஒரு வார்த்தை யாரையாவது சொன்னாளா பாபு? இதையெல்லாம் நினைத்தபோது எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. முதலில் இவள் இருப்பாளா?

"இப்படி வீட்டில் எப்போது பார்த்தாலும் அமர்க்களமாக இருக்கிறதே ஒழிய எங்களுக்கென்று ஒரு காரியங்கூடச் செய்துகொள்ள முடிகிறதில்லை. எல்லாம் கொடுத்துவைத்தால்தானே கிடைக்கும்? எப்போதும் கஷ்டப்பட்டுக்கொண்டு வார்த்தை கேட்பதென்றே நம்ம தலையில் எழுதியிருக்கிறது. இது சம்சாரமாகவா இருக்கிறது? எப்போதும் சத்திரந்தான். ஏதோ அவருக்காகத் தோன்றி ஓர் இரண்டாயிரம் ரூபாய்க்கு வழி செய்தால் அதற்குத் தடை சொல்ல எல்லாரும் வந்துவிடுகிறார்கள். சம்சாரியாக இருந்தால்தானே அவர்களுக்குத் தோன்றப் போகிறது? இதெல்லாம் ஒன்றும் தோன்றாவிட்டாலும் இன்னும் பத்துப் பேரைக் கூட்டம் போடச் சொல்லத் தெரிகிறது. இவ்வளவு நாள் திரும்பிப் பார்க்காமல் இருந்த அத்தைக்கு, இப்போது கல்யாணம் செய்ய வேண்டும் என்று தோன்றியவுடன் மாப்பிள்ளை பார்க்க வந்து இறங்க இந்த இடந்தான் கிடைத்ததுபோல் இருக்கிறது" என்று இன்னும் எவ்வளவோ வரைந்து தள்ளியிருந்தாள் மன்னி.

"ஓஹோ! இதெல்லாம் எனக்கா டோஸ்?" என்று நினைத்துக்கொண்டேன்.

"வயிற்றில் பிறந்தது இப்படி இருந்தால் விட்டு விடுவார்களா? ஆனால் அப்பா செய்கிறார் என்றுதானே இவனுக்கு இவ்வளவு ரோஸம் வருகிறது? நான் அனுப்புகிறேன் பணம். இவனை யார் கேட்டது?" என்றேன் நான் கோபத்துடன்.

"ஆமாண்டா, நீ அனுப்பினாய்! எவ்வளவு நாளைக்கு அனுப்ப முடியும்? நாளைக்கு உனக்கும் ஒரு குடி, குடித்தனம் வராமலா இருக்கும்? அசட்டுப் பிசட்டென்று பேசாதே. அப்படி உனக்குத் தைரியமிருந்தால் அதை அங்கேயே ஏற்பாடு செய்துவிட்டு வருவதுதானே? அவர் தலையில் எதற்குக் கட்டுகிறாயாம்?" என்றாள் அக்கா.

"இப்படியெல்லாம் பேசாதே, அக்கா! அவள் இருந்த இடத்தையும், குழந்தைகளையும் அவளையும் யாராவது கண்ணால் பார்ப்பார்களா முதலில்? வழியில்லாத

புருஷன், வீட்டுக்குக்கூட வராமல், தான் போய் எங்கேயோ உழைத்துக் குழந்தைகளைக் காப்பாற்றுவ தென்றால் அது யாருக்கு அவமானம்? நீயே சொல்லு. இன்று அப்பா உயிருடன் இருக்கிறார்; இப்படியா பார்த்துக்கொண் டிருக்க வேண்டும் என்று வயிறு எரிகிறது. அவளும் நம்முடன் சேர்ந்து வளர்ந்தவள் தானே! நீ சொல்வது கொஞ்சங்கூட நன்றாக இல்லை. போ, அக்கா!'' என்றேன்.

''புருஷன் வழி இல்லாவிட்டால் அதற்கு யார் என்னடா செய்வது? அவளுக்கும் எல்லாம் பார்த்து நன்றாகத்தானே செய்தார் அப்பா. அவரவர் தலையில் எழுத்து. அதற்கு என்ன செய்வது? ஏதோ நம்மால் முடிந்ததை அனுப்பினால் அதை வைத்துக்கொண்டு பார்த்துக்கொண்டு போக வேண்டியதுதான். அதற்காக என்ன செய்கிறதாம்?'' என்று அக்கா மறுபடியும் அதையே சொன்னவுடன் எனக்குப் பேசப் பிடிக்க வில்லை.

'இவளுடைய போக்குத் தெரிந்துதான் மன்னி இவ்வளவு எழுதியிருக்கிறாள். இல்லாவிட்டால் எழுதக் கை வருமா?' என்று நினைத்தபோது அக்காவைப் பற்றி எனக்கு நல்ல அபிப்பிராயம் விழவில்லை. 'எவ் வளவு தெரிந்தவளாக இருந்தாலும் ஒரு கஷ்ட சுகம் தெரியாமல் இப்படிப் பேசுகிறாளே' என்று மிகவும் வருத்தமாக இருந்தது.

'இப்படி இருப்பவள் நம்மைப்பற்றித்தான் என்ன நினைத்துக்கொள்ள மாட்டாள்? நாமும் விலகி விட வேண்டியதுதான்'' என்று தோன்ற ஆரம்பித்துவிட்டது.

''ஆனால் இந்தச் சமயத்திலா இதையெல்லாம் காண் பிப்பது? பிறகு நம்மால் ஒரு பத்து ரூபாய் அனுப்ப முடியுமா? எல்லோரும் காரியவாதிகளாய்த்தான் இருக் கிறார்கள். நாமும் இனிமேல் இருந்து பார்ப்போம்'' என்று தீர்மானம் செய்துகொண்டேன்.

''அத்தை எதற்கு வருகிறாளாம் அக்கா?'' என்றேன், நான்.

"அதுதான் ருக்குவை யாரோ பார்க்க வருகிறுறமே. மாதவி சொன்னதைக் கேட்கவில்லையா நீ?" என்ருள் அக்கா. இதற்குமேல நான் பேசாமல் சென்றுவிட்டேன்.

"ருக்குவைத்தான் கல்யாணம் செய்துகொள்வது என்று ஒருவிதத் தீர்மானம் என் மனத்தில் இது வரையில் இல்லாமல் இருந்தாலுங்கூட இதைக் கேட்டதும் என் மனம் ஏன் அவ்வளவு ஏமாற்றத்தை அடைய வேண்டும் என்பது எனக்கே விளங்கவில்லை. அவளுடைய அழகுக்கு என்னைவிட உயர்ந்த அந்தஸ்தில் இருக்கும் புருஷன் ஏன் வாய்க்கக்கூடாது என்பது என் மனத்தில் உறுத்தியது. அவள் நன்ருகச் சிரமப்படாமல் வாழ வேண்டும் என்று நான் எவ்வளவோ தடவை எண்ணியது உண்டு. அவளுக்கு ஒரு நல்ல வரனைப் பார்க்காமலா இருந்துவிடுவார்கள், அத்தையும் அத்திம்பேரும்? நல்ல வரனைத்தான் பார்த்திருப்பார்கள்; சந்தேகமில்லை. ஆனாலும் அந்தப் பால் வடியும் ருக்குவின் அழகிய விழிகள் என்னைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டன. அவள் ஒவ்வொரு சமயமும் என்னிடம் காட்டிய அன்பும், மரியாதையும்!

ஊருக்குப் போவதற்குள் அவள் என்னிடம் நடந்து கொண்ட விதம், நாணம், நான் பார்த்தபோது அவளது இறங்கிய பார்வை! என்னைப்போல அவளுக்கும் கொஞ்சம் சபலம் ஏன் இருந்திருக்கக் கூடாது? ஊருக்குப் போகும்போதும் என்னைப் பார்க்கக் கூட முடியாத அவ்வளவு வேதனையும் விசாரமும் அவள் முகத்தில் நிறைந்திருந்தது என்ன காரணமாக இருக்கலாம் என்பது என் மனத்தில் இப்போதுதான் உறை ஆரம்பித்தது. அவளை விட எனக்கு மனமில்லை! என்னை விட எவ்வளவு உயர்ந்த கணவன் வருகிருன் என்று நினைத்துக்கொண்டு சமாதானம் செய்துகொண்டாலும் என் மனம் சமாதான மடையவில்லை. எனக்கே இவ்வளவு நாட்களாகத் தெரியாமல் எங்கேயோ ஒளிந்து கொண்டிருந்த காதல் அவளுடைய களங்கமற்ற உள்ளத்தில் ஏன் தோன்றாது என்பது எனக்கு விளங்கவில்லை. இதை உணராது அவளுடைய மிருதுவான உள்ளத்தை

இவ்வளவு வாட்டிவிட்டேனே என்று நினைத்தபோது என்னை என்ன செய்துகொள்வதென்று எனக்கே தெரிய வில்லை. இதை எப்படித் தெரிந்துகொள்வது? வேறு வரன் பார்க்கும்போது வெட்கமில்லாமல் இவ்விதம் போட்டியிடுவது? யாரிடம் என் மனத்தைச் சொல்வது? இவ்வளவு நாட்களாகச் சொல்லிப் பயன்படாத என்னிடம் இப்போது - அதுவும் அவளை வேறு ஒருவர் வந்து பார்க்கும்போது - யார் தலையிடப் போகிறார்கள்? என்னுடைய பைத்தியக்காரத்தனத்துக்கு எந்தத் தெய் வத்தினிடம் சென்று முட்டிக்கொள்வது? ருக்குவை நினைத்துக்கொண்டே சாய்ந்துவிட்டேன்.

அழகிய ருக்கு என் முன் வந்து, 'கடைசியில் இப் படித்தானா செய்வது? உன்னை நம்பி இருந்தேனே?' என்று கூறுவதுபோல் இருந்தது. அவ்விடத்திலும் என்னால் உட்கார முடியவில்லை. ஒருவரோடும் பேசவும் பிடிக்கவில்லை. உடனே புறப்பட்டு ஊருக்குப் போய்விட வேண்டுமென்று என் ஆவியும் உடலும் பறந்தன.

வேடிக்கையும், பொழுதுபோக்குமாக இருந்த ஆபீஸ் எனக்கு அன்று காராகிருகம்போல் தோன்றியது. எல்லா விலங்குகளையும் விலக்கிக்கொண்டு நான் தேடியது ஒரே ஒரு க்ஷேத்திரந்தான். அவ்விடத்திலும் கலகலப்பாக இருக்க முடியவில்லை.

"என்ன ஸார், பெரிய வேலை ஆய்விட்டதென்று கௌரவமாக இருக்கக் கற்றுக்கொண்டு விட்டீர்கள் போல் இருக்கிறது?" என்றார்கள் எல்லோரும்.

'மனிதனுக்கு வாழ்க்கையில் உண்மையான இன் பத்தைத் தரக்கூடிய சந்தோஷம் எது?' என்பதை அன்று தான் உணர்ந்தேன். பதவி இருந்தும், வேலை இருந்தும் அதையெல்லாம் என் மனம் பொருட்படுத்தவில்லை.

இரவு சாப்பிடும்போது, "என்னடா? என்னமோ போல் இருக்கிறாய்!" என்றார் அத்திம்பேர்.

"வந்ததும் நான் கோபித்துக்கொண்டேனோ இல்லை யோ? அதனால் ஒரு மாதிரியாக இருக்கானோக்கும்?" என்றாள் அக்கா.

"அதெல்லாம் ஒன்றுமில்லே" என்றேன் நான்.

"நீ மறைத்தாலும் உன் முகம் சொல்கிறதே? வேறு என்ன? ஆபிசில ஏதாவது விசேஷமா? அதைத் தான் சொல்லேன்" என்றாள் அக்கா மறுபடியும்.

"ஒன்றுமில்லே அக்கா. என்னமோ வேதனையாக இருக்கிறது. ஊருக்கு ஒரு நடை போய்விட்டு வரலாம் என்று பார்க்கிறேன்" என்றேன்.

"ஊர் நினைவு வந்துவிட்டதாக்கும் குழந்தைக்கு! எல்லாரையும் பார்த்து ரொம்ப நாள் ஆய்விட்ட தோன்னோ?" என்றார் அத்திம்பேர் கேலியாக. இந்தக் கேலியோ சிரிப்போ எனக்கு ஒன்றும் வேண்டியிருக்க வில்லே.

ராஜனிடம் சென்று ஒரு மாதத்துக்கு விடுமுறை கேட்டேன்.

"இப்போதுதான் வேலையை ஒப்புக்கொண் டிருக் கிறாய். ஒரு மாதம் எல்லாம் முடியாது. பதினைந்து நாட் கள் எடுத்துக்கொண்டு போய்விட்டு எவ்வளவு சீக்கிரம் முடிகிறதோ அவ்வளவு சீக்கிரம் வந்துவிடு" என்றார் அவர்.

"எப்படியாவது விட்டால் போதும். இவ்வளவாவது சொல்லுகிறாரே என்று பரம திருப்தியாக இருந்தது. போய்விட்டு வருகிறேன்" என்று ஒரு கும்பிடு போட்டு விட்டுக் கிளம்பிவிட்டேன்.

வாசலில் வரும்போதுகூட, "சீக்கிரம் வந்து விடு" என்றார் ராஜன்.

யார் எப்படிப் போனால் என்ன? அவரவர் வேலே தானே எல்லோருக்கும் முக்கியம்?

"வீணுகக் கவலேப்பட்டு உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதே என்று அப்பாவிடம் சொல்லு. நடக்கிற படி நடக்கிறது; என்ன செய்வது?" என்றாள் அக்கா.

# 21

## பிரம்ம லிபி

ரெயிலிலிருந்து வந்து இறங்கும்போதே, வீடு ஏன் இப்படி இருக்கிறது என்று நினைத்துக்கொண்டேன். வீடு அப்படிக் களை இழந்து இருந்தது. ஒரு சத்தத்தையும் காணவில்லை. ராமு எப்போதும் முன் பக்கம் இருப்பான். அவனையும் காணவில்லை. வண்டிக்காரன் சாமான்களை எடுத்து வந்து உள்ளே வைத்தபோது வரதன் வந்தான்.

"ஏண்டா, வீடு வெறிச்சென்று இருக்கு? அம்மா, குழந்தைகள் எல்லோரும் இருக்கிறார்களோன்னோ? நல்லபடியாய் இருக்கிறாரா அப்பா?" என்றேன் ஆவலுடன்.

"ஐயா நல்லபடியா இருக்காங்க. சின்ன ஐயருக்குத் தான் உடம்பு ரொம்ப சரி இல்லிங்க. நீங்க வந்துடப் போறிங்களேன்னுதான் ஐயருக்குக் கவலே. ஏன் இப்படி எளுதாமே கிளம்பிட்டீங்க?" என்று வரதன் சொல்லி முடிப்பதற்குள் வாசற்படியில் வேப்பிலைக் கொத்து இருப்பது கண்ணில் பட்டது.

'யார் பிள்ளை பெற்றாள் நம்ம வீட்டில்?' என்று நினைத்துக்கொண்டே அதைக் காண்பித்து, "என்னடா விசேஷம்?" என்றேன்.

"மணிக்கு அம்மை வார்த்து இருக்குங்க" என்றான் அவன்.

"என்ன அம்மை?" என்று நான் முடிப்பதற்குள், "பெரிய ஆயி வாத்து இருக்குதுங்க" என்றான் வரதன் மறுபடியும்.

"என்னடா இது?" என்று கவலையுடன் நான் உள்ளே நுழைந்தேன்.

"யாரடா அது? செருப்பும் சட்டையுமா வருகிறது? இன்னையும் பாக்காதே உள்ளே நுழைந்துவிடப் போகிறார்கள்! இந்தச் சத்திரத்தில்தான் ஒருவரையும் ஒன்றும் சொல்லப்படாதே!" என்று மன்னி சலிப்புடன் கூறியது என் காதில் பட்டது.

'சரி, வம்பு வேண்டாம், நிதானமாகப் போய்ப் பார்க்கலாம்.' என்று நினைத்துக்கொண்டு, "அப்பா எங்கேடா? மேலே இருக்கிறாரா?" என்றேன்.

வரதன் தலையை அசைத்ததும் மெத்தைக்கு ஏறிச் சென்றேன்.

அவ்விடத்தில் பாபு நின்றுகொண் டிருந்தாள். ஏன் என்னைப் பார்த்துவிட்டுக்கூட இப்படி நிற்கிறாள் என்பது தெரியவில்லை. முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு நின்றுகொண் டிருந்தாள். "பாபூ" என்று நான் அழைத்ததும் அவள் காதில் படவில்லைபோல் இருந்தது.

இரண்டு குழந்தைகள் விளையாடிக்கொண் டிருந்தன. ஒன்று படுக்கையில் படுத்துக்கொண் டிருந்தது.

"என்ன உடம்பு குழந்தைக்கு?" என்றேன் அருகில் சென்று.

பாபு சிறிது நேரம் ஏதோ பிரமை பிடித்தவள்போல் நின்றுகொண் டிருந்துவிட்டு நிதானமாக, "அம்மை" என்றாள்.

இதைக் கேட்டதும், 'வரதன் ஒன்றும் சொல்லவில்லையே? எல்லோருக்குமா அம்மை!' என்று எனக்குப் பகீர் என்றது.

அப்பாவின் அறையில் நுழைந்தேன். அவர் பத்திரிகை பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். என் காலடி ஓசை கேட்டவுடன் பத்திரிகையைத் தழைத்துப் பார்த்துவிட்டு, "என்னடா இப்படித் திடீரென்று? சொல்லாமல் கொள்ளாமல்?" என்றார் தடுக்கிட்டவர்போல்.

"ஒன்றுமில்லை. என்னவோ கவலையாக இருந்தது. இப்படி வேதனையாக இருக்கிறதே, பார்த்துவிட்டுப் போகலாம், எல்லோரையும் ஒரு நடை என்று வந்தேன்.

அதற்குத் தகுந்தாற்போல் இருக்கிறதே வீடு?'' என்றேன் ஒன்றும் தோன்றாமல்.

"நாங்கள் எல்லாம் கவலைப்படும்போது உன்னை மட்டும் எப்படி விட்டுவிடும்? ரத்த சம்பந்தம் என்றால் வேதனை செய்யுமே? நீயும் வராமல் இருக்க வேண்டுமே இந்தச் சமயத்தில்; தந்தியாவது அடிக்க வேண்டும், என்று நேத்துத்தான் சொல்லிக்கொண் டிருந்தேன். ஒரு தந்தியை அடித்து வைத்தால் என்ன கவலைப்படுவாயோ? விவரமாக எழுதலாம் என்று நினைத்துக்கொண் டிருந் தேன். அதற்குத் தகுந்தாப்போல் நீயும் வந்து நிக்கறே!'' என்றார் அப்பா.

"எனக்கு எப்படி அப்பா தெரியும்?'' அங்கே இருக்க முடியவில்லை வேதனை. புறப்பட்டு விட்டேன்'' என் றேன்.

"ஏன் பாபு அங்கே நிற்கிறாள்? என்று கேட்டுக் கொண்டே, "பாபு'' என்று அழைத்தேன்.

அப்பாவின் முகத்தில் தோன்றிய கடுப்பு இவ்வளவு அவ்வளவு இல்லை.

"அதை ஏன் இங்கே கூப்பிடுகிறாய்? விடியா மூஞ்சி கள் வந்த இடம் உருப்படாது'' என்று கோபித்துக் கொண்டார்.

"என்னப்பா இது?'' என்றேன்.

"கேள்வி என்ன? எல்லாம் வந்து கால் வைத்தது! வீட்டை உருப்படாமல் அடித்து விடப் போகிறார்கள்! ராமு பெரிய படுக்கை போட்டுவிட்டானே அதைச் சொல்லு'' என்றார் அப்பா.

"ராமுவுக்கும் அம்மையா? எப்படி இப்படித் திடீரென்று?'' என்றேன்.

"எல்லாம் இந்தச் சனியன்களால்தான்! வேறு எங்கிருந்து வரப்போகிறது?'' என்றார் கோபத்துடன்.

"அதுதான் என்ன செய்யும் அப்பா? எல்லாம் போராத வேளை'' என்றேன் நான்.

இதைக் கேட்டதும் அப்பாவுக்கு இன்னும் அதிக மாகிவிட்டது கோபம்.

"வேளையடா! வேளை! இன்னும் என்ன பார்க்க நான் இருக்கிறேனே? ராவும் பகலும் அந்தப் பெண் படும் பாட்டைப் பார்த்தால் பயமாக இருக்கிறது. வீட்டில் வேறு யாராவது கேள்வி முறை இருக்கா? வந்த சனியன்கள் உடம்பு ஒன்றுமில்லாமல் இருக்கப் படாதா? வரும்போதே என் தலையில் பெரிசாய்த் தூக்கி வைத்துவிட்டதுகள்! குழந்தையா கண்ணையே விழிக்கவில்லை. இதுகள் வந்த இடம் உருப்படுமா? நன்றாய் இருக்கிறதுகளானால் அங்கேயே இருக்காதுகளா? எல்லாம் பிராரப்தம்!"

"முதலில் இதுகள் தொலைந்தால்தான் வீடு விடியப் போகிறது! யாரால் இருக்கிறதுடா இந்தக் கவலைப்பட? 'ஒரு நாழி முன்னால் எங்கேயாவது தொலைந்து போங்கள். என் கண்ணிலேயே பட வேண்டாம்' என்று சொல்லி விட்டேன்" என்று சீறி விழுந்தார் அப்பா.

பாபு வெளியில் விசித்துக்கொண் டிருந்தது என் காதில் விழுந்தது.

"நன்றாய் இல்லை அப்பா, நீ சொல்லுவது. அவளும் நம்மாத்தில் பிறந்தவள் இல்லையா? எங்கே அப்பா போவாள்? குழந்தை இன்னும் படுத்த படுக்கையாக இருக்கிறதே? எல்லாம் நம்முடையதுதானே" என் றேன் நான். பொறுக்கவில்லை.

"உம்...உம்.....அழுகை என்ன வைத்திருக்கிறது இன்னும்? வீட்டையே ஒரே அழுகையாக அடித்தாய் விட்டதே! போதாதா? போய் அவரவர் இருக்கிற இடத்தில் கிடங்கோ. என்னால் முடிந்ததை அனுப்பித் தொலைக்கிறேன்! உங்கள் தரித்திரம் எங்கே போனால்தான் விடியப் போகிறது? விடியா மூஞ்சிகள்!" என்று அப்பா கூறியதும் எனக்கு அவர் பேரில் கோபந்தான் வந்தது.

'இவ்வளவு கடுமையான உள்ளமா? அம்மா இருந் தால் இப்படி இருக்குமா?' என்று நினைக்காமல் இருக் கவே முடியவில்லை.

"ஆகாது அப்பா இதெல்லாம்" என்றேன்.

"ஆமாண்டா! ஆகாது போகாது எல்லாம் யார் பார்த்துக்கொண் டிருக்கிறது? அவன் நல்லபடியாக எழுந்திருக்கவேண்டுமே என்று வேண்டிண் டிருக்கேன். நாளைக்குக் குழந்தைக்கு ஒரு ஜலம் விட்டுவிட்டு முதலில் தொலையட்டும். இல்லாவிட்டால் எல்லோரையும் தொடைத்து விட்டுத்தான் கிளம்புங்கள்! துடைகாலித் துக்கிரிகள்!" என்ற அப்பாவை அடக்கவே முடியவில்லை.

'அவரையும் சொல்லி என்ன பயன்? மலைபோல் அவன் படுத்துக்கொண் டிருப்பதைவிட அவருக்கு வேறு என்ன கவலை வேண்டும்? இந்த வயதில் அவருக்கு இன்னும் என்ன பாக்கி இருக்கிறதோ?' என்று நினைத்துக்கொண்ட போது எனக்கே ஒன்றும் ஓடவில்லை. மன்னியைக் கண் ணால் பார்க்க முடியவில்லை. இப்படி ஓர் அலங்கோலமா?

பாபுவை நினைத்தபோது அவளுடன் என்னால் ஒன்றுமே பேச முடியவில்லை. அப்பாவுக்கே வெறுப்பை உண்டாக்கும்படியான இப்படியா ஒரு ஜன்மம்!

அக்கா கூறியதுதான் எனக்கு ஞாபகம் வந்தது. அழைத்துக்கொண்டு வந்துதான் என்ன பயன்? 'எவ் வளவு செய்தால் என்ன? அவரவர் அநுபோகம் மட்டும் விடாது' என்பதைத் தவிர வேறு ஒன்றும் நினைக்க முடியவில்லை.

ஒருவர் முகத்தையாவது பார்க்க முடியவில்லை. குழந்தைக்கும் ராமுவுக்கும் மன்னி ஒருத்தியால் ஓடி ஓடிச் செய்ய முடியவில்லை. அவளும் சின்னவள்தானே? படுத் துக்கொண்டு விட்டால்? "பாபுவும் இருக்கட்டும் அப்பா, மன்னிக்கும் கொஞ்சம் ஒத்தாசையாக இருக்கும்" என்று என்னால் முடிந்தது எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன்.

அப்பா, பாபுவை ஊருக்கு அனுப்பிவிட்டுத்தான் மறுவேலை பார்க்க வேண்டுமென்று ஒரே பிடியாய் நின்றார்.

"நீ ஏண்டா சீமா, இவ்வளவு வேதனைப் படுகிறாய்? அவருக்கு இதைவிடக் கவலை வேறு என்ன வேண்டும்? வேண்டியது வாங்கிக்கொண்டு வந்து போட்டார்; செய்

தார். துக்கிரி ஜன்மங்களடா! அவரையும் சொல்லிப் பயன் இல்லை. எங்கள் தரித்திரந்தான் உங்களையும் பிடித்து ஆட்டுகிறது. தொலைந்தால் எல்லாம் சரியாகப் போய்விடும்; பாரேன்" என்று பாபு கண்ணைத் துடைத்துக்கொண்டாள்.

'எந்த வழி போவது? என்ன செய்வது?' என்று எனக்கும் ஒன்றுமே தோன்றவில்லை. ஒருவரையும் தேற்ற முடியவில்லை.

பாபு மறுநாளே ஊருக்குக் கிளம்பிவிட்டாள்.

"எப்படியோ. பகவான் அவர் வயிற்றில் பாலை வார்க்கணும். என்னைப்பற்றி என்ன? ஒன்றும் கவலைப் படாதேங்கோ. கவலைக்கு இனிமேல் ஏதாவது இருந்தால் தானே?" என்று பொங்கும் துக்கத்துடன் கண்ணீரைக் கூட அடக்கிக்கொண்டு அவள் கூறியபோது அவளைப் பாபு என்று நான் நினைக்கவில்லை.

'பெண் தெய்வம் என்பார்களே, இவள்தானோ?' என்றுதான் நினைத்துக்கொண்டேன்.

புறப்படும்போது அப்பாவையோ, மன்னியையோ நிமிர்ந்துகூடப் பார்க்காமல் பதறிய உள்ளத்துடன் அப்படியே குன்றிப்போய், அநாதையைப்போல் மூன்று குழந்தைகளுடன் அவள் வண்டி ஏறியபோது கல்லும் கரைந்துவிடும்போலவே எனக்குப் பட்டது.

'அப்பாடா! இவர் என்ன, கல்லா! இரும்பா?' என்று அப்பாவைப் பார்க்கும்போது என்னைவிட அதிகமாக அவர் துடித்துக்கொண்டிருந்தார். கண்ணீர் மாலை மாலையாகத் தரையில் கொட்டிக்கொண்டிருந்தது.

பாபு வண்டி ஏறுவதற்குள், "அம்மா........" என்று ஏதோ சொல்ல வாயெடுத்தவர் அப்படியே துண்டால் முகத்தை மூடிக்கொண்டு விட்டார். இப்படியா இருக்க வேண்டும் அவர் எழுத்து?

"மூட்டிக்கொண்டேனே, கேட்டாயா?" என்று கண்ணீர் வடித்தாள் பாபு.

"அம்மா இருந்தால் இப்படி விட்டுவிடுவாளா பாபு?" என்றேன் நான்.

"யாரைச் சொல்லி என்ன பயனடா அப்பா? அவள் கடுகளவு நாட்டுப்பெண். அவள் நன்றாக இருந்தால்தானே அவருக்கு? அவரவர் தலையில் எழுத்துப்படி தானே நடக்கும் எல்லாம்? சொல்லு. எப்போது கை பிடிந்தவன் ஒழுங்கு இல்லையோ, அப்போது அவன் கால் அடியிலேயே சாக வேண்டுமே தவிர ஓர் இடத்துக்குக் கால் எடுத்து வைக்க யோக்கியதை கிடையாது. நம்மால் ஒரு வருக்கு இடைஞ்சல் எதற்கு?"

"இனிமேல் எனக்கு இந்த உலகத்தில் என்ன பாக்கி என்கிறாய்? இது ஒன்று இருந்தது. அதுவும் முடிந்து விட்டது. எப்படியாவது மண்ணாய்ப் போகிறேன். வயது காலத்தில் அவர் நன்றாக இருக்க வேண்டும். பகவான் தான் கண் திறக்க வேணும். என்னை இப்படி அனுப்பி விட்டுச் சந்தோஷமாக இருந்துவிடப் போகிறாரா? பாவம், ஏதோ அஞ்ஞானம்! நாளைக்குச் சொல்ல முடியாமல் துடித்துப்போவார்" என்று பாபு கூறியபோது, 'தெய்வம் இதை விடவா உயர்ந்த குணங்களுடையதாக இருக்கும்?' என்ற சந்தேகம் தோன்றியது. அவளை அப்படிக் கண்ணும் கண்ணீருமாக அனுப்பிவிட்டு வீட்டுக்குத் திரும்பவே எனக்குப் பிடிக்கவில்லை.

வீட்டில் வந்து நுழைந்தேன்.

"செய்கிறவர் இருந்தும் கொடுத்துவைக்க வில்லையே, இதுகள்! வயிற்றெரிச்சல்!" என்றாள் மன்னி.

"இது ஒரு பேச்சா?" என்று எனக்குப் பிடிக்கவில்லை. வந்த நான் பாபுவுக்குக் கடைசிவரையில் எவ்வளவு வருத்தப்பட முடியுமோ, வேதனைப்பட முடியுமோ அவ்வளவையும் அன்றே பட்டுத் தீர்த்துவிட்டேன்.

"அந்தஸ்தும் காசும் இல்லாமல் எங்கும் வரக்கூடாதுடா" என்று அவள் கூறிய வார்த்தை என்னை ஈட்டி போல் குத்தியது.

'அந்தஸ்தையும் பணத்தையுமா தாயுள்ளம் பார்க்கும்?' யார் எதைச் செய்தாலும் தலை எழுத்தை யாரால் மாற்ற முடியும்?

# 22

## அனுகுண்டு

ராமு சரியாய் இரண்டு மாதம் படுக்கை போட்டு விட்டான். வீட்டில் வேறு ஒருவரும் இல்லாததால் நான் கிளம்புவது என்னும் பேச்சே எடுக்க முடியவில்லை.

"அத்தை வருவதாக இருந்தது. ருக்குவை யாரோ பார்க்க வரப் போகிறானும். நம்மால் அந்தக் காரியம் தடைப்படுவானேன்? சித்தியாத்தில் வந்து இறங்கிக் கொண்டு எதையும் பார்த்துக்கொண்டு போகும்படி எழுது. வேறு ஒரு விவரமும் வேண்டாம்" என்றார் அப்பா.

இதையும் எழுதிவிட்டு, "நீங்கள் வந்து இருந்தால் நான் ஊருக்குப் போகச் சௌகரியமாக இருக்கும்" என்றும் எழுதிப் போட்டேன் அத்தைக்கு.

அத்தையிடமிருந்து உடனே கடிதம் வந்துவிட்டது.

"எப்படியோ இந்த வயதில் அவன் வயிற்றில் பாலை வார்த்தாரே பகவான். அதுவே போதும். ராமுவை வெகு ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ள வேணும். மறுக்களித்துக்கொண்டால் இன்னும் சிரமம். அவனுக்கு இன்னும் மூன்று ஜலம் விட்டதுந்தான் நீ ஊருக்குக் கிளம்பலாம். மகமாயியை எடுத்துக்கொண்டு நீ ஒரு இடத்துக்கும் போகக்கூடாது. வேறு ஒருவரும் வரவும் கூடாது. நான் பார்த்துக்கொண்டு வருகிறேன். இவ்வளவுக்கிடையில் கல்யாணத்தைப்பற்றி எனக்கு ஒன்றும் ஓடவில்லை. எல்லாரும் நன்றாக இருந்தால் தை பிறந்து நடந்துவிட்டுப் போகிறது. அவர்களுக்கும் சந்தர்ப்பம் சரியாக இல்லை என்று எழுதியாகிவிட்டது. ராமுவை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளவும். அசட்டுப் பிசட்டென்று எதையாவது செய்துவைக்காதீர்கள். எனக்கு இருப்பாகவே இல்லை. கூடிய சீக்கிரத்தில் வரு

இறேன். பதில் போடவும்” என்று நீளமாக எழுதி யிருந்தாள் அத்தை. “யாருக்கு யார்? அவளுக்கும் எப் படிப் பிடிக்கும், சொல்லு” என்றார் அப்பா.

ஆபீசிலிருந்து எனக்கு மேல் மேல் கடிதம் வந்து கொண்டே இருந்தது. என்ன செய்வது? அத்தை கூறு வதை மீறிக்கொண்டு போனால் ஏதாவது நேரப் போகி றதே என்று எனக்கும் பயமாகிவிட்டது.

பாபுவிடமிருந்து கடிதமே வரவில்லை. அக்காவுக்கு இதையெல்லாம் யார் எழுதினார்களோ தெரியவில்லை.

“நான் முந்தியே உனக்குச் சொல்லவில்லையா?” என்று ஒரு ராமாயணம் எழுதியிருந்தாள்.

ராமுவையும் மணியையும் ஒரே மாதிரியாகப் பார்த் துக்கொள்ள வேண்டியிருந்தது. ராமு குழந்தையைப் போல் அவ்வளவு மெலிந்துவிட்டதும் அல்லாமல் முரட்டுத்தனமும் பிடிவாதமும் சகிக்க முடியவில்லை. வீட்டில் பெரியவர்கள் ஒருவரும் இல்லாமல் மிகவும் சிரமமாகத் தோன்றியது. ‘மன்னியின் தாயார் வேண்டு மானால் வந்து பத்து நாட்களுக்கு இருக்கட்டும்’ என்றார் அப்பா.

“செய்துகொள்வதற்கு மட்டும் இந்த மனுஷ்யாள் வேண்டும்! உழைப்பதற்கு மட்டும் அவர்கள் வரவேண் டுமோ? ஒன்றும் வேண்டாம்” என்றாள் மன்னி.

“சரி, ராமுவுக்குத்தான் இரண்டு ஜலம் விட்டாய் விட்டது. பாதகமில்லை. அத்தைக்கு எழுதிப்போடு” என்றார் அப்பா. அம்மாவைப்பற்றி அவரும் நினைத் தாரோ என்னவோ? நீண்ட பெருமூச்சு விட்டார்.

எழுதினால் ருக்குவை அழைத்துக்கொண்டு வரு வாளோ மாட்டாளோ என்று எனக்குச் சந்தேகமாக இருந்தது. அவள் கல்யாணம் தடங்கல் பட்டது எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியைத் தந்ததென்று என் மனத்துக்குத் தான் தெரியும். ‘அவளும் வருவாளோ மாட்டாளோ?’ என்று அதே நினைவாக இருந்தது.

அன்று காலை சற்று வெளியில் போக வேண்டிய வேலை இருந்தது. போய்விட்டு உள்ளே நுழையும் போது, அப்பா தாழ்வாரத்தில் கையில் ஒரு கடிதத் துடன் உட்கார்ந்துகொண் டிருந்தார்.

என்னைக் கண்டதும், "சீமா" என்று கூப்பிட்டுக் கொண்டே ஓ என்று அழுதுவிட்டார்.

"என்ன அப்பா!" என்றேன் நான். அப்பாவே பின்னால் சாய்ந்துவிடுவார்போல் இருந்தது. ஓடிப் பிடித்துக்கொண்டேன்.

"இருக்க விடாமல் துரத்தி அடித்தேனடா குழந் தையை!" என்று மேலும் விசித்தார் அவர்.

அவரைத் தாங்கியபடியே கடிதத்தை வாங்கிப் படித் தேன். அத்திம்பேர் மொட்டையாக ஒரு கடிதம் எழுதி யிருந்தார்.

"பாபு போன ஞாயிற்றுக்கிழமை சிவலோகம் போய்ச் சேர்ந்தான்' என்று எழுதியிருந்தது.

"எவ்வளவு பசி! பட்டினி! வேதனையோடு அந்த ஆத்மா பிரிந்ததோ!" என்று நான் அப்படியே துடித்து விட்டேன். வந்த யமன் எதையாவது கொண்டுபோகா மல் விட்டுவிடுவானா?

"நான்தான் விரட்டினேன் என்றால் உயிருடன் இருக்கக்கூட விடவில்லையேடா தெய்வம்?". என்று துடித்தார் அப்பா. பெற்ற மனம் கேட்குமா? எனக்கே முடியவில்லையே?

வேறு ஒரு சமாசாரமும் தெரியாது. அப்பா என்ன செய்தாரோ, எங்கிருந்து வாங்கினாரோ, என்னிடம் இரு நூறு ரூபாய்களைக் கொண்டுவந்து கொடுத்து, "உடனே புறப்படு, பறக்கும் பிராணனுக்கு இவ்வளவு எள்ளும் தண்ணியும் விடுகிறேனே இல்லையோ பாவி? பார்த்து விட்டு வா" என்று சொன்னார். என்னிடமும் பணம் இருந் தது. "வேண்டாம் அப்பா, பிறகு பார்த்துக்கொள்ள லாம்" என்று சொல்லிவிட்டுக் கிளம்பிவிட்டேன்.

அங்கே சென்று பார்த்தால் நான் நினைத்ததற்கு நேர் விரோதமாக இருந்தது. அத்திம்பேர் குழந்தைகளுடன் உட்கார்ந்துகொண்டு அழுதுகொண்டிருந்தார். உயிருடன் இருக்கும்வரையில் அவர்களுடைய அருமை தெரிகிறதில்லை என்று கூறுகிறார்களே அது உண்மையே.

என்னைக் கண்டாரோ இல்லையோ, தாம் செய்த பாபங்களை எல்லாம் சொல்லிச் சொல்லி வருத்தப்பட்டார். அந்த மாதிரிப் பிராணனுக்கு யார்தான் இரங்க மாட்டார்கள். அல் அசல் எல்லோரும் அவருடைய காரியத்துக்கு எந்த உதவி செய்யவும் காத்துக்கொண்டிருந்தார்கள். வேறு ஒரு பலமும் இல்லை. ஜனங்களுடைய இந்த வாழ்த்துத்தான் குழந்தைகளைக் காக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டேன். அந்தப் பத்துத் தினங்கள் அங்கே இருப்பது எனக்கு முள்ளின் மேல் இருப்பதுபோல் இருந்தது. பட்டுவும் வந்ததால் ஒரு பலமாக இருந்தது. எல்லாம் முடிந்ததும், "நான் குழந்தைகளை அழைத்துக்கொண்டு போகிறேன். நீ போய் அப்பாவைப் பார்த்துவிட்டுச் சீக்கிரமாய் வந்துவிடு" என்றாள் பட்டு.

"குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு போய் விட்டால் எனக்கு இங்கே யார்? இங்கேயே இருக்கட்டும்" என்றார் அத்திம்பேர்.

"இவ்வளவு நாள் இல்லாத அக்கறை இப்போது தான் வந்துவிட்டதாக்கும்" என்று நினைத்துக் கொண்டே நான் அக்காவைப் பார்த்தேன்.

"அது சரிதான் அத்திம்பேரே, குழந்தைகள் ஏங்கி விடாதா? அதைத்தானே முதலில் கவனிக்க வேண்டும்? அப்பாவும் கையோடு அழைத்துக்கொண்டு வரச்சொன்னார். நீங்களும் வேண்டுமானால் ஒரு மாசம் வந்துவிடுங்களேன்" என்றேன். பாபுவின் ஆத்மா அவரை என்ன செய்ததோ என்னவோ? அவர் "சரி" என்று கிளம்பி விட்டார்.

எங்களுக்கு அந்த இடத்தை விட்டு எப்போது கிளம்பப்போகிறோம் என்று இருந்ததே ஒழிய அவ்விடத்தில்

கூடியிருந்த ஜனங்களைப பார்க்கும்போது காலே எழும்பவில்லை.

"மகாலக்ஷ்மிபோல் அந்த அம்மாள் இருந்ததே எங்களுக்கு ஒரு பலமாய் இருந்ததே! பொறுமை என்றால் அந்த அம்மாளைப்போல் உண்டா! ஐயோ, பசியும் பட்டினியும் அந்த அம்மாவைக் கொண்டுபோய் விட்டனவே!" என்று ஒவ்வொருவரும் அந்தக் குழந்தைகளை விடமாட்டேன் என்று விட்டார்கள்.

"இப்படிப் பார்த்துத்தான் பொறுக்குகிறது தெய்வம்" என்று சொல்லிக்கொண்டே ஊளம்பினாள் பட்டு.

நான் அத்திம்பேரையும் குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு வந்து சேருவதற்குள் அத்தை வந்திருந்தாள். ருக்கு வந்திருக்கிறாளா என்பதைத் தெரிந்து கொள்ளத்தான் அந்தச் சமயம் என் மனம் அலைந்தது. காதலுக்குக் கண் இல்லை என்று கூறுகிறார்களே. சரியாகத்தான் இருந்தது. அவளைப் பார்த்ததுந்தான் என் மனம் ஒரு நிலைக்கு வந்தது. குழந்தைகளைக் காண ஆவலுடன் ஓடி வந்தவள் என்னைக் கண்டதும் மறைந்து கொண்டுவிட்டாள்.

"வந்திருக்கிறாள் குழந்தை என்று எனக்கு ஒரு வரி எழுதக்கூடாதா! ஓடிவந்து பார்த்திருப்பேனே? முகத்தைப் பார்க்கக்கூடக் கொடுத்து வைக்காத பாவியாய் விட்டேனே" என்று அத்தைதான் மிகவும் வருத்தப் பட்டு விட்டாள்.

சித்தியும் குழந்தைகளைப் பார்க்க வந்திருந்தாள். மன்னி, அத்தை, சித்தி எல்லோரும், குழந்தைகளை வைத்துக்கொண்டு, "பாபுவைப் போலவே இருக்கு; இல்லையா?" என்று ஏதோ பேசிக்கொண் டிருந்தார்களே ஒழிய என் மனம் வேறு எங்கேயோ ஓடிக்கொண் டிருந்தது.

'இனிமேல் தாமதம் செய்ய முடியாது. புறப்பட வேண்டியதுதான். எவ்வளவு நாட்களுக்கு விடுமுறை கொடுப்பான் அதுவும்?' என்று நினைத்துக்கொண்

டேனே ஒழிய, 'ருக்குவின் விஷயம் என்ன?' என்று தெரிந்துகொள்ளாமல் புறப்படுவதற்கும் பிடிக்கவில்லை. இதைப்பற்றி யார் பேசப் போகிருர்கள் இப்போது? எப்படித் தெரிந்துகொள்ளுவதென்று வழியும் விளங்கவில்லை. இதையெல்லாம் பார்த்துக்கொண் டிருந்தால் வேலைக்கு நாமம் விழுந்துவிட்டால்?

"நான் இனிமேல் புறப்படலாமோ இல்லையோ அப்பா?" என்றேன் அப்பாவிடம்.

"அதுக்குத்தான் நானும் ஒரு வழி செய்யலாம் என்று பார்த்தேன். ஒன்றும் சரியாக வருவதாய்க் காணுமே" என்ருர் அப்பா.

"மூத்தண்ணு விஷயந்தானே? வேண்டவே வேண்டாம் அப்பா. இவ்வளவு காலம் இல்லாதது இப்போது என்ன வந்துவிட்டது? அதெல்லாம் செய்தால் நமக்குத் தான் நன்ருய் இல்லை" என்றேன் நான்.

"உனக்கு இதெல்லாம் எப்படித் தெரியும்? நான் எழுதவில்லையே!" என்று ஆச்சரியத்துடன் கேட்டார் அப்பா. டில்லியில் நடந்ததையெல்லாம் அவருக்குக் கூறினேன்.

"நான் அப்படியெல்லாம் ஒன்றும் சொல்லவில்லையே? கேட்டதற்கா இவ்வளவு கோபம்? இன்னும் எதையாவது சொல்லுவதுதானே?" என்ருர் அவர்.

"எதற்காக அப்பா இந்த வம்பெல்லாம்? கொடுத்ததைக் கேட்டால் அடுத்தது பகை என்பது உலகத்தில் சகஜந்தானே?" என்றேன் நான்.

"நம்மையுந்தான் எவ்வளவோ பேர் கேட்கிருர்கள். அதற்காகக் கோபித்துக்கொண்டால் முடியுமாடா? முடிந்ததைக் கொடுப்பது. போகிருன் போ! அல்பப் பயல்" என்று சொல்லிவிட்டு, "ஆமாம், நீ என்று புறப்பட வேண்டும் என்கிருய்? எப்படியாவது உன் வேலையை இங்கேயே மாற்றிக்கொண்டுவிட முடியாதா? இங்கே

நான் ஓர் ஆபீஸ் வைக்கச்சொல்லேன்" என்றார் அப்பா.

"நமக்கு வேண்டியபடி எல்லாம் செய்ய அவன் என்ன நம்ம மாமனரா அப்பா?" என்று நான் சிரித்தேன்.

"அவன் பெயர் என்ன? ராஜனு?" என்று கேட்டு விட்டு அப்பாவும் சிரித்துவிட்டார்.

# 23

## குருவிக் கூடு

நான் ஊருக்குக் கிளம்ப வேண்டுமென்றதும் அப்பா என்னைப் பிடித்துக்கொண்டு விட்டார்.

"சீமா, கண்ணை மூடிக் கண்ணைத் திறப்பதுபோல் இருக்கிறது. அதற்குள் இவ்வளவெல்லாம் நடந்து விட்டது. இன்னும் அதிக நாள் இருக்க மாட்டேனடா. பாபுவோடு நானும் ஒடுங்கிவிட்டேன். உனக்கு ஒரு கல்யாணத்தைப் பண்ணிப் பார்த்துவிட்டால் கொஞ்ச மாவது திருப்தி இருக்கும். நித்தியம் அந்தப் பிள்ளை நடராஜன் வந்து பிராணனை வாங்குகிறான். உன்னையும் கேட்காமல் நான் எப்படிச் சொல்வது? 'போன வருஷம் வேண்டாம் என்றால், இப்போதுதான் சம்பாதிக் கிறானே!' என்று தொந்தரவு செய்கிறான். அதையும் நீ ஊருக்குப் புறப்படுவதற்குள் தீர்மானித்து முடித்து விட வேண்டும். என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டார் என்னை.

இவ்வளவு நாட்கள் செய்ததுபோல், 'இதற்கு என்ன அவசரம்?' என்று தட்டிக் கழிக்க வேண்டு மென்று எனக்கும் தோன்றவில்லை. 'யாராவது இதைப் பற்றிப் பேச்சு எடுக்க மாட்டார்களா? என் விருப்பத்தை யும் தெரிந்துகொள்ள மாட்டார்களா!' என்று மனம் தவித்துக்கொண்டிருந்ததென்று கூறுவதில் வெட்க மாகவும் இல்லை.

"அந்தச் சம்பந்தமே நமக்கு வேண்டாம் அப்பா" என்றேன் தீர்மானமாக.

"இவ்வளவு தீர்மானமாக இருக்கிறாயே? அவன் உன்னை வந்து பார்த்தால்?" என்றார் அப்பா.

"நடராஜன் வந்தால் என்ன? யார் வந்தால் என்ன? என் கல்யாண விஷயத்தில் அவன் என்ன சொல்லிவிட

முடியும்? கட்டாயம் முடியாது என்றுதான் சொல்லப் போகிறேன்" என்றேன்.

"சரி, அதற்குமேல் நான் என்ன சொல்ல முடியும்? வேறு எந்தப் பெண் வந்து காத்துக்கொண் டிருக்கிறது இப்போது? நம்மளுக்கு இருக்கிறாள் குழந்தை. ஒரு வம்பும் இல்லை. பேசாமல் அவளைச் செய்துகொண்டு விடுகிறாயா?" என்றார்.

ஏதோ எனக்குச் சமாதானம் சொல்லுவதுபோல் இதை அவர் சொன்னதும் எனக்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை. கேட்டாரே என்ற பெருமகிழ்ச்சி ஒரு புறம். எதைச் சொன்னால் என்ன தப்பு அர்த்தம் செய்து கொள்ளுவாரோ என்று பயமாகவும் இருந்தது. யோசனை இல்லாமல், சடக்கென்று பதில் கொடுத்துவிட்டேன்.

"உங்களுக்குச் சம்மதமானால் எனக்கு ஆக்ஷேபம் இல்லை" என்றேன்.

இதைக் கேட்டதும் அப்பா என்னைவிட அதிகமாகச் சந்தோஷப்படுவார் என்று நான் நினைக்கவில்லை. உடனே அத்தையைக் கூப்பிட்டுக் கல்யாணப் பேச்சு ஆரம்பித்து விட்டது.

சுகமும் துக்கமும் மாறி மாறி எவ்வளவோ நடந் தாலும் என் கல்யாணத்துக்கும் பிராப்தம் என்பது வந்து விட்டது. எல்லோருக்கும் தந்திக்குமேல் தந்தி பறந்ததே ஒழியக் கடிதம், எழுத்து என்பதே இல்லை.

எனக்கு என்னவோ நிம்மதியே இல்லாமல் இருந்தது. பாபுவை நினைத்துக்கொண்டபோது ஒன்றும் ஓடவில்லை.

"அதற்குள் என்னப்பா அவசரம்? இன்னும் ஆறு மாதம் போகட்டுமே" என்றேன்.

"என்னைப்பற்றி இனி என்னடா நிச்சயம்? ஒரு நாளைப் போலவா இருக்கு என் உடம்பு?" என்றார் அப்பா.

"கல்யாணம் கார்த்திகை என்றால் தள்ளிப்போட லாமோ? போறவா போய்ட்டா. நீ ஒருத்தன் இருக்கும்

போது குழந்தைகளை மாலையும் கழுத்துமாய்ப் பார்க்க வேண்டாமா? பார்த்து முகூர்த்தம் வைக்க வேண்டியது தான்'' என்றாள் அத்தை.

எல்லோருக்கும் கடிதம் போய்விட்டது. சித்தியைப் பார்த்துவிட்டுக் குஞ்சுவையும் நேரில் பார்த்துக்கொண்டு வரவேண்டுமென்று கிளம்பினேன். சித்தி அகப்பட்டாள். குஞ்சுவுக்குக் கடப்பைக்குத் தந்தி அடிக்க வேண்டியிருந்தது. அத்திப்பேருக்கு அங்கே வேலையாகி இருக்கிறதென்று தெரிந்தது.

''அத்திப்பேர் வந்துவிட்டால் கேட்க வேண்டுமா?''

''இதோ பார் கம்மனுச்சிக்கும், நம்பளுக்கோசரம்'' என்று கண்ணைக் கொட்டிக் கொட்டி விழித்துக்கொண்டு வடு ஒரே அமர்க்களமாய்விட்டது.

வெறும் நாளிலேயே அத்தையைக் கேட்க வேண்டாம். கல்யாணம் என்றால் கேட்க வேண்டுமா? அப்பளம் வடாம் எல்லாம் கொட்டும் முழக்குமாய்க் கிளம்பிவிட்டன.

பட்டு, அத்திப்பேர் எல்லோரும் வந்து இறங்கினார்கள். தங்கம், குஞ்சு எல்லோரும் வந்தார்கள். இதோடு இல்லை. முத்தன்னா, அவர் மாப்பிள்ளைகள், ராஜன், ஜோஸ்யர், ஒருவர் பாக்கி இல்லை. இவ்வளவு பேரையும் பார்த்து வீடு அமர்க்களப்படுவதையும் பார்த்தால், 'கடைசியில் என் மனோரதம் நிறைவேறியதே' என்று ஒரு பக்கத்தில் சந்தோஷம் இருந்தாலும் பாபுவை என்னால் நினைக்காமல் இருக்க முடியவில்லை. பிறகுதான் அம்மாவை நினைத்தேன். பாபுவின் குழந்தைகளுக்கு வேண்டியது செய்ய வேண்டுமென்று மிகவும் ஆவலாக இருந்தது.

சுமங்கலிப் பிரார்த்தனை என்று அத்தை ஆரம்பித்து விடப் போகிறாளே என்று பயமாக இருந்தது. ஆனால் அதை என் அத்தை நிறுத்தினாளோ தெரியவில்லை.

''ஒரே நாள் கல்யாணம் போதும்'' என்றேன் நான். எல்லாவற்றையும் ஒரே நாளில் செய்வதால் சிரமம் அதிகந்தான்.

ராஜன் வந்து இறங்கியதும் அப்பா அவரை வரவேற்றதுதான் மிகவும் வேடிக்கையாக இருந்தது.

"அடேடே! ராஜன், ராஜன்னு யாரோன்னுன்னு பார்த்தேன்! நம்ம கொட்டாங்கச்சிதானு, கையடியிலே?" என்று சிரித்தார்.

"அடே, அத்திக்காயா? இன்னும் அதை நீ மறக்கவில்லையா?" என்று ராஜன் சிரித்ததும் எங்களுக்கெல்லாம் வேடிக்கையாக இருந்தது. இரண்டு பேரும் ஒரே பள்ளிக்கூடத்தில் படித்தவர்களாம். அப்பாவும் அவரும் வெகு நேரம் வரையில் பேசிக்கொண்டிருந்தார்கள். கல்யாணத்தைப்பற்றிக் கேட்பானேன்? ருக்குவின் கழுத்தில் மாங்கல்யம் ஏறிவிட்டது.

சாப்பாடு முடிந்ததும் அத்திம்பேர் விகடக் கச்சேரி ஆரம்பித்துவிட்டார்.

"என்னமோ பிரமாதமாக எல்லோரும் எழுதி எழுதிக் கிழிக்கிறீர்களே ஐயா? கடைசியில் மலையைக் கல்லி எலி பிடிக்கும் கதைதான். "பிறந்த கதைசொல்லட்டா? வளர்ந்த கதை சொல்லட்டா? புங்கமலச் செட்டியிடம் பூந்த கதை சொல்லட்டுமா? என்று கதை எழுதறதா பிரமாதம் இங்கறேன்? என்னமோ பத்திரிகை, பத்திரிகைன்னு குதிக்கறேளே கிடந்து? நடந்ததை வச்சுண்டு ஒரு புராணம் எழுதிவிடலாமே!" என்று ஆரம்பித்துவிட்டார் ராஜனிடம் போய்.

"பலே! போட்டாலும் ஒரு போடு போட்டார் ஐயா! பெரிய பேர்வழியாக இருக்காரே உங்க அத்திம்பேர்! என்ன ஸ்ரீநிவாசன்? அவர் சொல்வதைச் செய்துவிட வேண்டியதுதான்" என்றார் ராஜனும் வேடிக்கையாக.

"அதற்கென்ன பிரமாதம் இப்போ? ஜமாய்த்து விடுகிறது. அதில் அத்திம்பேர்தானே பிரதான பாத்திரம் வகிக்கப்போகிறார்; தெரியாதா உங்களுக்கு? '365 நாட்களில்' என்று ஒன்றை எழுதித் தள்ளிவிடுவது!" என்றேன் நான்.

“ஙேய்.........ய எழுதுவேடாப்பா, எழுதுவே! சொல்லிக்கொடுத்தால் பெருமையாய்ப் பெயரைப் போட்டுக்கொள்ளமாட்டாயோ? பலே, சிப்பாய்!” என்று நாக்கையும் மூக்கையும் வளைத்துக்கொண்டு அத்திம்பேர் சொன்னதும் எல்லோரும் கொல்லென்று சிரித்துவிட்டார்கள்.

## 24

### கடிவாளம்

உடனேயே ஊருக்குப் புறப்பட வேண்டுமென்பது எனக்குப் பிடிக்கவே இல்லை. ருக்குவுடன் பேசிக்கொண்டிருந்தேன்.

"இந்தக் கல்யாணத்தைப்பற்றி இவ்வளவு அமர்க்களப்பட்டதே? வாயைத் திறந்தாயா நீ? யாராவது ஒரு வார்த்தை கேட்டார்களா பார்த்தாயா உன்னை? ஒன்றும் தோன்றுமலா ஒருத்தி இருந்தாய்?" என்று கேட்டுக் கொண்டே அவளை ஒரு தட்டுத் தட்டினேன்.

"ரொம்ப அழகாகத்தான் இருக்கு. இவ்வளவு பேர் இருக்கச்சே எனக்கு என்ன நாட்டாமை? நண்டாட்டமா! அம்மா ஒரு தலை இல்லன்னு மூலைக்கு ஒருத்தராய் இஷ்டப்படி ஓடுகிறேள், கடிவாளம் இல்லாத குதிரை மாதிரி! அது ஒண்ணு இருந்தால் இப்படி நிப்பேளா எல்லாரும்?" என்றாள் அவள்.

"என்னது என்னது?" என்று நான் கேட்க அவள், "சொல்லமாட்டேன்" என்று ஏக அமர்க்களமாகி விட்டது.

பட்டு, அத்தை, தங்கம் எல்லோரும் கும்பலாக வந்துவிட்டார்கள்.

"எலேய், ஓடாதேடா! இனிமே கடிவாளம் போட்டாச்சு தெரியுமா?" என்று அத்திம்பேர் கத்துவதுதான் கேட்டதே தவிர வேறு ஒன்றுமே புரியவில்லை.

கடிவாளமா - அம் - பலவாளம் தானோ!!

முற்றிற்று







# எங்கள் அந்தை

...ான் என் அறையில் உட்கார்ந்துகொண் டிருந்தேன். அப்போது இவைகள் என் காதில் விழுந்தன.

வேலைக்கார வரதன்' துணிகளுக்குச் சவுக்காரம் போட்டுக்கொண் டிருந்தான். கால் மணி ஒன்பது இருக்கும்.

அம்மணி விளக்குமாற்றை எடு... ...டார் என்று கிழ அறைந்தார்.

... ...என்னமோ காளியாயி மாதிரி ...யே? என்ன வந்துடுச்சு உனக்கு இப்போ அப்படி?

...ம்: ஒனக்கென்னடா? நீ ராசா! ஒருத்தருக்கு ...ல்லா ஒருத்தருக்குக் கோவம் பொத்துக்கிட்டு வருது ...ௌட்டுலே!

இப்படி உறுமிக்கொண்டே வாளியை உதைத்துத் ...ளினாள் அவள்.

வா: ஐயே! என்ன சங்கதின்னு என்னமோ ...ளியை உதைக்கறியே! என்ன வந்துடுச்சு ஒனக்கு? ...ா இனி பொரண்டு பூடுச்சா?

...ம்: அடே என்னுடாலே தம்பி, உள்ளே மொணுவ ...ாம்னு போனு அந்த ஐயர் என்னமோ மொணு ...மோ வுன்னு வாராரு சண்டைக்கிங்கறேன்! என்மேலே ...கோவிச்சுக்கிட்டாக்கா?

வா: யார்மேலாச்சியும் கோவமாங்காட்டியும் ...வூட்டுலே?

அம்: கோவம்னு அதை ஏங்கிட்டயா காட்டறத
அம்மா ஊருக்கு வராட்டி அம்மணியா அதுக்கு
பொண்ணே; நல்லாருக்குதே கதை!

வர: ஏன்? கடுகாசு வந்துச்சாமா எதாச்சியும்
பெரிய ஐயர் கூடல்லா நேத்துப் பேசிக்கிட் டிருந்தாரு?

அம்: போடாலே. எல்லாம் நம்ப அம்மா த
யோடே போச்சுடா! மவராசங்க, அவுங்க இருந்தாக்
இப்படி இருக்குமா வீடு? யானை இருக்கிற வெடத்திலே
பூனை இருக்காப்பலே... சீன்னு வருதுடா. எல்லாம்
சத்தேப் பாத்துக்கிட்டல்லா நடக்குதுக? ஆயிரம் கா
துக்கும் ஐயர் நல்லா இருக்கணும்.

இப்படிச் சொல்லி ஆகாயத்தை நோக்கி இரண்
கைகளையும் கூப்பினாள்.

"அதோ வந்துட்டாங்க பார், அம்மா. அவுங்களை
ட...ன் மனம் அப்படியே குன்னிப்போவுது
அ... சொல்லி என்னு செய்யறது? எல்லா
வேளைக்காரன் பிழைப்பு" என்று வரதன் அத்துடன்
பேச்சை நிறுத்திக்கொண்டான்.

அத்தை எங்கிருந்தோ அவசர அவசரமாக
கொண்டிருந்தாள். சமையல்கட்டிலிருந்து
மாவுக்குத் தாளிப்பது கம்மென்று மணந்து
டிருந்தது.

வரும்போதே, "பணி ஏகமாக ஆகிவிட்டதே?
போதுதானு உப்புமாக் கிண்டறே? முன்னாடிச் சாட
கிறவன்; அவனுக்கு ஒரு பிடி போடலாம்னுதானே
பவே கிண்டச் சொன்னேன்?" என்று அத்தை சமை
காரி மீனாக்ஷியைக் கேட்டுக்கொண்டே வந்தாள்.

"என்ன செய்யச் சொல்லறேள் அத்தை? எலை
கூடப் போட்டுத்தான் வச்சிருந்தேன்" என்று கத்தின
மீனாக்ஷி. அவளுக்கு மெள்ளப் பேசுவது மருந்துக்கு
கூடத் தெரியாது.

"ஆனால் சாப்பிடவில்லையா?" என்றாள் அத்தை.

"கோவிச்சுக்காதேங்கோ அத்தை; இப்பத்தான் வ
தார். சரக்கட்டையா? அடுப்பே எரியல்லே; அவச

அவசரமாகப் பறந்துண்டுதான் வாணலியைப் போட்டுட்டேன்; அவர் வரத்துக்குள்ளே ஆயிடணும் என்பதுதான் எனக்கும்.''

''இதோ வந்துவிட்டேன். அத்தை கொஞ்சம் உப்புமாக் கிளறச் சொன்னாள், என்று சொல்லிவிட்டு இலையில் உட்காரப் போறார்ன்னு நெனைச்சுண்டு இருந்தேன். விடுவிடுன்னு போயிட்டார்; நான் என்ன செய்யறது அத்தே?'' என்று மீனாக்ஷி இன்னும் பலக்கச் சத்தம் போட்டாள்.

''இந்தா, நான் ஒன்றும் சொல்லல்லே. நீ பிசாசுபோல் கிளம்பிவிடாதே இப்போ'' என்று சொல்லிக்கொண்டே அத்தை வெளியில் வந்துவிட்டாள்.

அவள் வந்து தாழ்வாரத்தில் உட்காருவதற்கும் அப்பா மெத்தையிலிருந்து இறங்கி வருவதற்கும் சரியாக இருந்தது.

''என்ன சத்தம்? மீனாக்ஷி என்னமோ அமக்களப்படுத்துகிறாளே?'' என்றார் அப்பா.

''என்னமோடாப்பா! நான் எல்லாம் மனசாரத்தான் செய்யறேன். ஒருவருக்கும் கெடுதல் நெனைக்கல்லே. எல்லாம் அவா அவா மனுஷா இருந்தால்தான் சரியாய் இருக்கும். நான் ஒருத்தி என்னத்துக்கு இங்கே பாரம்?'' என்றாள் அத்தை. அவள் கூறுவதைக் கேட்டால் ஏதோ குறையுடன் கூறுவதுபோல் இருந்தது.

இதைக் கேட்டதும் அப்பா சிரித்துவிட்டார்.

''அதையெல்லாம் யார் கேட்டா இப்போ? என்ன சத்தம் என்றுதானே கேட்டேன்?'' என்றார்.

''சத்தம் என்ன? நான் ஒருத்தி இருக்கேனோ இல்லையோ எல்லாத்துக்கும்? இந்தச் சாண் வயிற்றை எங்கே வளர்த்தால் என்ன? நான் இன்னிக்கே வேணும்னாலும் ஊரைப் பாக்கப் போறேண்டாப்பா! என்னால் எதுக்கு எல்லாருக்கும் கஷ்டம்?'' என்றாள் அத்தை.

அறுபது வருஷங்களாக இந்தக் குடும்பத்திலே ...லும் அவருக்கா விஷயத்தை ஊகிக்க முடியாது?

"வேறு என்ன? அவன் ஏதாவது உளறிறுக்கும்? நீயும் அதக்குச் சரியாய்க் குதிக்கறயே? அதைச் சொல்லு!" என்றார் அப்பா அலட்சியமாக.

அத்தை ஒன்றும் பதில் பேசவில்லை. உள்ளே சென்று ஒரு லோட்டா மோர் எடுத்துவந்து அப்பாவின் முன் வைத்தது தெரிந்தது.

அவர் மோரைச் சாப்பிட்டுக்கொண்டே, "என்ன சமைக்கச் சொன்னாய்? கீரைத்தண்டு இளசாய் வாங்கிக்கொண்டு வந்து வைத்தேனோ?" என்றார்.

அத்தைக்கு அலுப்பாய் இருந்ததோ என்னவோ, "ஆமாம்! எப்போது பார்த்தாலும் சமையல், சாப்பாடு! யாருக்கு வேண்டியிருக்கு!" என்றாள்.

"சரி! நீயும் ஆரம்பிச்சுட்டயா? இனிமேல் எனக்கு என்ன குறைச்சல்? என்னமோ, நீ இருக்கயே! என்ன கவலை என்று இருக்கேன். நீயும் இதுகளுக்குச் சரியாய் ஆரம்பித்துவிடு! விஷயத்தைக் கேட்டால் சொல்லாமே ஏன் இப்படிக் கோணமாணுன்னு பேசறே?" என்றார் அப்பா அலுப்புடன்.

அத்தை சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு "பாரேன், ஒன்றும் இல்லே! இன்னிக்கு இதுக்கு ஒரு அமக்களம். நேத்தின்னு அந்தப் புள்ளே! போட்டுக் கொள்ள ரெண்டு துணிகூடக் கிடையாது. வாயைத் திறக்கிறதா? காயக் காயப் பார்த்தால் வயிற்றெரிச்சலாய் இருக்கு. காலமே எங்கேயோ போகறேன்னு வர நாழியாகுமோ என்னமோன்னு கொஞ்சம் உப்புமா கிளறச் சொன்னேன். அவ்வளவுதான். அதுக்கு ஒரு பெரிய அமக்களம். இதுக்குக் கூடவா எனக்கு அதிகாரம் இல்லே? நான் எதுக்கு இருக்கறேன்? நீதான் ஒன்றையுமே கவனிக்கிறதில்லே" என்றாள்.

அப்பாவின் பேச்சில் வெறுப்புத் தொனித்தது. "நான் பார்த்துத்தான் என்ன மண்ணாய்ப் போறது? கடைசிலே சாப்பிடாமேயா போய்விட்டது?" என்றார்.

"இவ்வளவு நாழியா வேறே எதுக்கு வேதனைப் படுகிறேன்னு யோசிச்சுண்டு இருக்கே நீ? நான் ஒருத்தி இருப்பதில் இவ்வளவு கஷ்டம். நான் முதலில் தொலைந் தால எல்லாம் சரியாகும். இன்னைக்கே வேணுமானாலும் தொலைஞ்சுவிடுகிறேண்டாப்பா!" என்று அத்தை கண்ணைத் துடைத்துக்கொண்டாள். அப்பாவும் ஒரு பெரு மூச்சு விட்டார்.

"குழந்தை அவள் எங்கே? அதுக்குள்ளேயா பள்ளிக்கூடம் போய்விட்டாள்?" என்று கேட்டார்.

அத்தைக்கு அதுவும் பிடிக்கவில்லைபோல் இருந்தது.

"இது ஒன்று இங்கே சிராட!" என்று சொல்லிக் கொண்டே எழுந்து போய்விட்டாள்.

"சீமா, உப்புமாச் சாப்பிட வா" என்று கூப்பிட்டாள் திருஷி.

என் இலையில் உப்புமா வைக்கும்போது அத்தையின் கண்களில் ஜலம் துளும்பிக்கொண்டிருந்தது. கலகலத்துப் போய் இருக்கும் அவளைப் பார்க்க எனக்கே என்னவோ போல் இருந்தது.

"பாபுவிடமிருந்து ஏதாவது காகிதம் வந்ததா?" என்றேன்.

"கடுதாசும் வரவில்லை; தந்தியும் வரவில்லை! வந்தால் உனக்குத் தெரியாதா?" என்றாள் அத்தை.

எனக்கே வேதனைப்படும் சுபாவம். அத்தையை அப்படிப் பார்க்கப் பிடிக்கவில்லை. பேசாமல் எழுந்து விட்டேன்.

கையைக் கழுவிக்கொண்டு போன சமயத்தில், "வாத்தியாரைப் பார்த்துக்கொண்டு வந்தாயா சீமா? கண்ணிலேயே காணமே அவரை" என்றாள் அத்தை.

"காலையில் எழுந்தவுடன் அதற்குத்தான் போனேன். அதுதான் இவ்வளவு நாழி ஆயிடுத்து அத்தே. அவரை வீட்டிலேயே காணோம். ஒரு காரியத்தை முடிச்சுண்டு வந்துடலாம்னு காத்துண்டு இருந்ததுதான்

மிச்சம். வந்தா வரச்சொல்லுன்னு சொல்லிட்டு வந்தேன்" என்கிறன்.

"அநேகமாக இன்னிக்கி எட்டாம் நாள் இருக்கணும்; போகட்டும்; அவாவா செய்யறவாளுக்கு ஒரு அக்கறையுங் காணம். நான் ஏன் லோ லோன்னு அடிச்சுக்கறும்? கிடந்து! பண்ணிறப் பண்ணட்டும்! பண்ணுட்டாப் போகட்டும்" என்று என்னவோ பேசிக்கொண்டே போனுள் அத்தை.

எதுவாக இருந்தாலும் எனக்கு வாயைத் திறந்து சொல்லும் வழக்கமே இல்லை. அத்தை சொன்னது என் மனத்தில் ஏதோ வேதனையைத்தான் உண்டுபண்ணியது; என்ன நடந்தது என்று தெரிந்துகொள்ள வேண்டு மென்றுலுங்கூட நம் வீட்டுச் சமாசாரந்தான் 'கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது போல்' ஆயிற்றே; வாசலைப் பார்க்க நடந்தேன். அப்போது அப்பா பெரி தாகச் சத்தம் போட்டார்.

யாரை? அப்பாவா என்னைக் கூப்பிடுகிருர்? அப்பா முன் போவதென்றுலே எனக்கு என்னவோ சங்கோசம்; பேசவே பயம். ஏன் என்று எனக்கே தெரியவில்லை.

அப்பா என்னை உற்றுப் பார்த்தபோது என் உடம்பே ஒடுங்கிவிட்டது.

"ஏண்டா உடம்பு இப்படி இளைத்திருக்கு? ரொம்ப ஊர் சுத்தறயோ?" என்ருர்.

"ஒண்ணும் இல்லையேப்பா" என்றேன் மெதுவாக.

"துணிவே கிடையாதாமே நோக்கு? வந்து கேழ்க்கி றத்துக்கு என்ன என்னை?" என்ருர் மறுபடியும்.

என்ன சொல்லுவது என்று எனக்குப் புரியவில்லை.

"ஆமாம்" என்று ஒரே வார்த்தையில் சொல்லி விட்டுக் கீழே வந்துவிட்டேன்.

என் அறையில் வந்து உட்கார்ந்தபோது என் மன நிலையே எனக்குத் தெரியவில்லை. அம்மாவை நான் அதிக மாகப் பார்த்தது கிடையாது; அத்தைதான் எல்லாம். அவள் இப்படி இருப்பது எனக்குத் தாங்கவில்லை.

வேதனையும் விசாரமுமாகச் சேர்ந்து தலைவலி வந்துவிட்டது. அப்படியே கொஞ்ச நேரம் தூங்கிவிட்டேன்.

பாதித் தூக்கமும் விழிப்புமாக இருந்த சமயத்தில், "அத்தை காபி சாப்பிடக் கூப்படறு" என்று மீனுக்ஷி வந்து கூப்பிட்டாள்.

எனக்கும் மெத்தையிலிருந்து வந்தது முதல் அத்தையுடன் பேச வேண்டும் என்ற எண்ணம்.

"மணி என்ன? அப்பா வெளியில் போயிட்டாரா?" என்றேன்.

"மணி நாலடிக்கப்போகிறது. அப்பா கிளம்பிண்டு இருக்கார்" என்று சொல்லிவிட்டு அவள் போய்விட்டாள்.

நான் காபி சாப்பிடப் போனபோது அப்பாவை அங்கே காணவில்லை. பள்ளிக்கூடத்திலிருந்து வந்த ருக்குவுக்கு அத்தை தலைவாரிப் பின்னிக்கொண்டிருந்தாள்.

மீனுக்ஷி காபியைக் கொண்டுவந்து என் முன் வைத்தாள்.

காபியை ஒரு வாய் சாப்பிடப் போனவன், "யார் அத்தை, அப்பாவிடம் இதையெல்லாம் போய்ச் சொல்வது?" என்றேன்.

"யார் சொன்னு என்ன? அவன்தான் பூலோகமோ கைலாசமோன்னு இருக்கான். மகராஜி உங்கம்மா போனதிலிருந்து எதைத்தான் கவனிக்கிறுன்?" என்றுள் அத்தை.

"நான்தான் சொன்னேனென்று என்னமாடா தெரியும் நோக்கு? பார்த்தாப்பலே சொல்லறயே?" என்றுள் மறுபடியும்.

"எல்லாம் அப்பாவே சொன்னுர்" என்றேன் நான்.

"ரொம்பக் கோவிச்சுண்டாரோ? உள்ளத்தைத் தானே சொன்னேன்; இது ஒரு தப்பாடாப்பா?"

தப்பு ஒண்ணும் இல்லே அத்தே; அதுக்குள்ளே ஆரம்பிச்சுட்டயே! அவரைப் போய்ப் புடுங்க எனக்குப் பிடிக்கலே. அதுக்காகச் சொன்னேன். நீ இல்லாட்டா வேறு யார் இவ்வளவு அக்கறையாகப் போய்ச் சொல்லப்

போறு? எல்லாம் நானும் கேட்டுண்டுதான் இருக்கேன்'
என்றேன்.

அதற்குள் ருக்குவுக்குப் பள்ளி முடிந்தது. "போ
மூஞ்சியை அலம்பிண்டு விளையாடு போ'' என்று அனுப்பி
விட்டுப் பெருமூச்சு விட்டுக்கொண்டு, "என்னமோ
வரவர ஒவ்வொரு நாளும் எனக்கு இருப்பாயில
இல்லே. இந்த ஆத்துலே நீ ஒத்தன்தான் என்னை
மனுஷியா நெனச்சுண்டு இருக்கே'' என்றாள் மறுபடியும்
அத்தை.

"என்ன அத்தை? இப்படியெல்லாம் பேசு
எனக்கு ஒன்றும் புரியல்லே. காலமே பிடிச்சுப் பார்
கிறேன்: ஆத்துலே எல்லாரும் இப்படி ஒவ்வொரு மாதிரி
யாய் இருந்தாக்கா எனக்கு ஒண்ணும் பிடிக்கல்லே'' என்று
நான் சொன்னபோது ருக்கு முகத்தை அலம்பி
போட்டு இட்டுக்கொண்டு வந்து நின்றாள். கறுத்த படிப்
படியான மயிரும் அழகிய கண்களும்! அவளையே நெடு
நேரம் பார்த்துக்கொண்டிருந்தேன். அதற்குள் அத்தைக்கு
என்ன தோன்றிவிட்டதோ, தெரியவில்லை.

"போடீ. சனியனே, போ அந்தண்டை. உன்னையும்
என்னையும் யாரோ கூப்பிடறப்பலே வந்து நிக்கறு
இங்கே! தொலை. கண்மறைவாய்'' என்று ருக்குவின்
பேரில் எரிந்துவிழுந்தாள்.

"குழந்தை, அவளைப் பிடித்து என் அத்தை கோபி
த்துக்கொள்ளறே?'' என்று சொல்லிவிட்டு ருக்குவுக்கு
மையாகச் சொல்லி விளையாட அனுப்பினேன்.

அத்தை எழுந்து கையை அலம்பிக்கொண்டாள்
ஒரு நோட்டுப்புத்தகத்தையும் நூறு ரூபாய் சில்லறையை
யும் எடுத்துவந்து என்முன் வைத்தாள்.

"இந்தா, இனிமே இந்த ஜோலியே நமக்கு வேண்டாம்
எல்லாம் நீங்களே வச்சுக்கோங்கோ. அத்தை தலையி
ஒரு பட்டமும் கட்ட வேண்டாம்'' என்றாள் படபட
புடன்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. "என்ன ஒரே அடியா
இப்படிக் கோவிச்சுக்கறே? உன்னை யார் என்ன
சொன்னா இப்போ?''

"யார் சொன்னா என்ன? நீ சொல்லாட்டா உன்னைப்போல் ஒருத்தர் சொன்னா; வச்சுக்கோயேன்."

'இப்படியெல்லாம் யார் பேசி இருப்பா? அப்பா தான் கஷ்டத்தில் எதையாவது சொல்லிவிட்டாரோ? கோபம் வந்தால்தான் அவருக்குத் தலைகால தெரியாதே' என்று நினைத்துக்கொண்டு வாயைத் திறப்பதற்குள் அத்தை மறுபடியும் ஆரம்பித்துவிட்டாள்.

"இதோ பார் சீமா, எல்லாத்தையும் நன்னாப் பாத்துக்கோ; ஒரு பைசாவுக்குக்கூடக் கணக்கு எழுதி இருக்கேன். இந்நிலே மீந்து அத்தை வைர அட்டிகை பண்ணிப் போட்டுண்டுட முடியாது. தெரிஞ்சுதா?" என்று ஒரேயடியாக அடுக்கிக்கொண்டே போனாள்.

ஒரு நிமிஷம் என் தலையே ஒர்ரென்று சுற்றிவிட்டது. வாய் கொடுத்தால் இன்னும் பிரமாதமாகும் என்று பேசாமல் எழுந்து வெளியில் போய்விட்டேன்.

வேதனையைத் தணித்துக்கொள்ளக் கடற்கரையைப் பார்க்கச் சென்றேன். வெளியில் அலைவாரிக் காற்று அடித்துக்கொண்டிருந்தாலும் என் மனத்தில் வேதனையின் அனல் புயல்போல் வீசிக்கொண்டிருந்தது. கொஞ்ச நேரம் உலாவிப் பார்த்தேன். பனியோ ஏகமாக ஆகிவிட்டது. எவ்வளவு நேரமானால் என்ன? என் மனம் என்னவோ இப்படியேதான் இருக்கப்போகிறது. வீட்டில் காரியம் இல்லாமல் என் ஒருவனுக்காக எல்லோரும் காத்துக்கொண்டிருப்பார்கள். அப்பா வேறு சத்தம் போடுவார். எழுந்து மெள்ள வீட்டை அடைந்தேன்.

என் அறையில் நுழைந்தவுடன் எனக்கே ஆச்சரியமாக இருந்தது. மேஜையின்மேல் ஓர் அடுக்கில் புதுத் துணி வைத்திருந்தது. யார்? அப்பாதாம் வாங்கிக் கொண்டு வந்திருக்க வேண்டும். மூன்று ஜோடி வேஷ்டி, சட்டைத்துணி, நிஜாருக்குத் துணி, எல்லாம் ஐம்பது ரூபாய்க்குக் குறைச்சல் இல்லை. அதுவும் கணக்கில் வாங்கிக்கொண்டு வந்திருக்க வேண்டும். 'ஒரு வார்த்தை சொல்வதற்குள் அப்பா இவ்வளவு வாங்கிக்கொண்டு வந்திருக்

கிறேர' என்று எனக்குச் சந்தோஷம் உண்டாகவே
இல்லை. வேதனை இன்னும் அதிகமாகிவிட்டது.

சாப்பாட்டை முடித்துக்கொண்டு வந்து படுத்துக்
கொண்டேன். தூக்கமே பிடிக்கவில்லை.

'ஒரு வாரத்துக்குள் 'டரம் பீஸ்' கட்டியாகணும்
புத்தகங்களை இல்லை. ஒவ்வொரு நாளும் பஸ் சார்ஜுக்கு
லாட்டரி. ஐம்பது ரூபாய்க்குத் துணியை வாங்கிக்கொண்டு
என்ன செய்கிறது?' என்ற எண்ணங்கள் என்னைக் கலக்
கின. புரண்டு புரண்டு படுத்துக்கொண் டிருந்தேன்.

# 2

## மதுரைப் பிரயாணம்

இரவெல்லாம் வேதனையோடு புரண்டுகொண்டு இருந்துவிட்டு விடியற்காலையில்தான் கொஞ்சம் தூக்கம் வந்தது. போர்த்துப்படுத்துக்கொண் டிருந்தேன்.

"ஏயே, சிமா இன்னும் தூங்கறுன் பார்! தூங்குமூஞ்சி டோய்! என்னைப் பார் சிமா!" என்று கத்திக்கொண்டே நக்கு அறைக்குள் ஓடிவந்தாள். தலையைத் திறந்து பார்த்த போது குளித்துத் தலைவாரிப் பின்னிக்கொண்டு புதிய உடை உடுத்திக்கொண் டிருந்தாள் ருக்கு.

அரையில் அழகிய பாவாடையும் சொக்காயுமாகத் ந்த விக்கிரகம்போல் நின்றுள் ருக்கு; அவள் நல்ல அழகி.

படுக்கையைச் சுருட்டிவிட்டு, "என்ன இன்னிக்கி ஒரே தடபுடலாக இருக்கே? யாரோ பள்ளிக்கூடத்தைப் பார்க்க வரப்போறு. அதுக்கு நீ போய் முந்திப் பள்ளிக் கூடத்தைக் பெருக்கப் போறையாக்கும்?" என்று பரிகாச மாக அவள் முதுகைத் தட்டினேன்.

"அப்படி எல்லாம் சொன்னு மாமாவோடே சொல்லு வேன். நேத்திக்குப் புதுசா வாங்கிண்டுவந்தா தெரியுமா?" ான்று எனக்கு மறுபடியும் காட்டினுள் அவள்.

சாதாரணச் சிட்டிச் சொக்காயும் பாவாடையுந் தான். என்றுலும் ருக்குவுக்கு அது மிகவும் எடுத்துக் காண்பித்தது.

"இதோ பார்; பார்க்கக்கூட மாட்டேங்கறயே, என்னமோ?" என்று சொன்னபோது அவளுக்கு இருந்த பெருமை இந்த உலகத்திலேயே ஒருவருக்கும் இராதுபோல்தோன்றியது. சிறுமி; பெருமையைத் தவிர வேறு என்ன தெரியும் அவளுக்கு?

நான் காபி சாப்பிட்டுவிட்டு வெளியில் வந்தபோது எதிரில் வாத்தியார் வந்தார்.

"நேத்திக்கெல்லாம் உங்களை வந்து தேடினேனே" என்று அவரிடம் கேட்டுவிட்டு, "அத்தே, வாத்தியார் வந்திருக்கார்" என்றேன்.

"வந்தா அத்தை என்ன செய்யறுங்கறே? ஆத்தி வேணும்னு எடுக்கறது! சொல்றவாளோடே சொல்லி விட்டுப் போகட்டுமே" என்றாள் அத்தை பட்டென்று.

'இப்போ அவர் என்ன நினைத்துக்கொள்வார்?' என்று எனக்குத்தான் வெட்கமாக இருந்தது.

'எழுந்ததும் எழுந்திருக்காததுமாக இதென்னடா சண்டை?' என்று ஒரு நண்பன் வீட்டுக்குப் போய்விட்டேன்.

திரும்பி வீட்டுக்கு வந்தபோது போனான்தான் ஆனால் எனக்கே ஆச்சரியமாக இருந்தது. அத்தை சாதாரணையாக அப்பாவுடன் பேசிக்கொண்டிருந்தாள்.

"என்ன மங்கு? வெள்ளிக்கிழமைன்னு சொல்லிவிட்டுப் போய்ட்டான் அவன்" என்றார் அப்பா.

"ஆமாம், நீ இன்னிக்கே மதுரைக்கு ஒரு கடிதாசு போடேன்" என்றாள் அத்தை.

"அதைத்தான் நானும் நெனைச்சுண்டு வந்தேன். இப்போ. ஏதாவது எழுதிருன்னு ஒரு வார்த்தை பேச... கூடாம்னு கண்ணிலேயே காணம் ராமுவை" என்று அப்பா சொன்னபோது அத்தை ஒன்றும் சொல்லவில்லை.

"அவன் என்ன வேணும்னு செய்யறான். நான் நேரே சீமாவை அனுப்பிச்சுக் குழந்தைகளை அழைச்சுண்டு வரச் சொல்லலாம்னு நெனைச்சுண்டு இருக்கேன். என்ன சொல்றே மங்கு?" என்றார் அப்பா மறுபடியும்.

அதற்குமேல் அத்தையாலும் பதில் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

"எப்படி இஷ்டமோ செய்யேன். இதுக்கு நான் என்ன சொல்லக் கெடக்கு? குழந்தைக்கும் ஆண்

ுறைவு வரப்போகிறது. இன்னும் அந்தப் பொண்ணுக்கு ரனும்னு தோணலேயே? அவாவா கரிசனமுள்ளவா ிருந்தா நான்பாட்டிலே அக்கடான்னு இருப்பேனோ ிலலேயோ?'' என்று முடிப்பதற்குள் ராமு வருவதைப் ார்த்து நிறுத்திக்கொண்டாள்.

ராமு சாப்பிடும்போதுகூட அத்தை அங்கே இல்லே. வன் என்ன புலியா கரடியா? அத்தை அவனிடம் எதற் ப் பயப்பட வேண்டும்? எனக்கு அது பிடிக்கவில்லே.

"ஏண்டா ராமு, ராஜந்துக்கு ஏதாவது கடுதாசி பாட்டாயா?'' என்றார் அப்பா.

"நேத்திக்கிக் கூடத்தான் எழுதிப் போட்டேன்'' ன்றான் அவன்.

"வரச்சொல்லி எழுதிப் போட்டாயா, குழந்தை ளை?'' என்றார்.

சிறிது நேரம் கழித்து, "நான் ஒன்றும் எழுதல்லே'' ன்று அவன் சொன்னதைக் கேட்டு அப்பா பெருமூச்சு ிட்டார்.

"ஏண்டா, எழுதல்லேங்கறயே இப்படி? உங்கம்மா ாளை இன்னும் ரெண்டு நாளிலே. குழந்தைகள் வர ண்டாமா இங்கே?'' என்றார் மறுபடியும்.

"எல்லாம் நடக்கறபடி நடக்கட்டும், அவள் வந்து ான் ஆகணுமோ?'' என்று அவன் எரிந்துவிழுந் தை எல்லாம் அப்பா எப்படித்தான் பொறுத்துக் ாண்டிருந்தாரோ எனக்கே மலைப்பாக இருந்தது.

என்ன மொணமொணத்தாரோ அது ஒன்றும் ரியாகக் காதில் விழவில்லே. கடைசியாக, ஏண்டா வீட்டிலே 'எல்லாரும் இப்படிக் காறு மாறுன்னு பேசறேள்? குழந்தைகள் இல்லாமே வீட்டிலே எனக்குப் பிடிக்கலே இல்லே. வருஷம் ஒண் ாச்சு; நானும் எத்தனை தான் எழுதறது? நீயும் அழைச் ுண்டு வரவழியாக் காணம். சீமையையாவது அனுப்பிக் குழந்தைகளை அழைச்சுண்டு வரச் சொல்லலாம்னு ாக்கறேன்'' என்று அப்பா சொன்னதுதான் நன்றாகக் ாது கேட்டது.

மூன்றுக்கு ஒன்றாக இப்படிப் பேசிக்கொண் டிருந்தா
அப்பாவுக்குத்தான் எப்படி இருக்கும்? நம்ம அகத்
சமாசாரம் என்ன, புதுசா? அத்தைக்கு வரவர நினைத்
நினைத்துக்கொண்டு மூக்குக்குமேல கோபம் வருகிற
இந்த ராமுவுந்தான் கொஞ்சம் தணிந்து பேசினால் என்ன
மன்னியைப்பற்றித்தான் கேட்க வேண்டாம். விட்
நினைவே இல்லை. அவன் எதை வேறுமாறாலும் சொல்
கொள்ளட்டும். அப்பா சொல்வது எனக்குச் சரியாகப் ப
டது. எவ்வளவு நாள்தான் அங்கேயே உட்கார்ந்திருப்ப
அழைக்கப் போனால் வரமாட்டேன் என்று சொல்லி
வாள்? அப்பா சொன்னால் மறு வண்டியில் போகத் த
ராக இருந்தேன் நான். எனக்கும் வீட்டைவிட்டு இரண்
நாளாவது எங்கேயாவது போகவேண்டும்போல் இருந்த

மாலையில் அப்பா வந்தபோது ஒரு கூடைப் பழமு
குழந்தைகளுக்குப் பிஸ்கோத்தும் வாங்கிக்கொண்டு
தார். பணத்தையும் எண்ணிக் கொடுத்து அன்று இர
வண்டியிலேயே புறப்படச் சொன்னார். "தஞ்சாவூ
இறங்கி அத்திம்பேரைப் பார்த்துவிட்டுப் போ" என்று

நான் ரெயிலுக்குக் கிளம்பியபோது ராமுவை
பார்க்க முடியவில்லை. வெளியிலிருந்தே அவன் வரவில்

"சீக்கிரம் நாளைக்கே கிளம்பிவிடு. குழந்தைகளை
சௌகரியமாக அழைச்சுண்டு வா. ரொம்பக் கூட்டம
இருந்தால் இரண்டாவது வகுப்பிலாவது ஏற்
விடு" என்றார் அப்பா. குழந்தைகளிடம் அவருக்கு இரு
அன்பு அந்த வார்த்தைகளிலேயே தொனித்தது. பு
படும் சமயத்தில் அத்தை ஒரு சின்னத் தூக்கை எடு
வந்து கையில் கொடுத்தாள்.

"என்னது அத்தை இது ஸ்பெஷலாய்?" என்றேன்.

"என்னமோ அவள் ஆசை. சித்தப்பா குழந்
களைப் பார்க்கப் போறயே; வெறுங்கையோடு போ
தான்று கொஞ்சம் திரட்டிப்பால் கிளறினாம்" என்
சொல்லி அப்பா சிரித்தார்.

"உனக்கென்ன? எல்லாம் சிரிப்பாகத்தான் இ
கும்" என்று சொல்லி அத்தை அதற்கும் முகத்தைச் சு

க் கொண்டது எனக்குப் பிடிக்கவில்லை. 'எதற்கெடுத்தாலும் கோபமா?'

அத்தை, அப்பா, ருக்கு, எல்லோரிடமும் சொல்லிக் கொண்டு வண்டி ஏறினேன். தஞ்சைக்குப் போய் அத்திம் பேரைப் பார்த்துவிட்டுக் கிளம்பினேன்.

எல்லாரும் பயமுறுத்தியதுபோல் வண்டியில் கூட்டம் ஒன்றும் இல்லை. அப்பாவுடைய பழைய நண்பராம், யாரோ ஒருவர், என்னுடன் அவரும் வண்டியில் பிரயாணம் செய்தார். முன்பின் அவரை எங்கும் பார்த்ததாக எனக்கு ஞாபகம் இல்லை. தஞ்சாவூரில் அவர் வண்டி ஏறினார். சாமான்களை வண்டியில் வைத்து நான் உட்கார்ந்தபோது, "என்ன, என்னைத் தெரியலையா நோக்கு? அப்பா உடம்பு பிச்சா இருக்காரா? இப்போ இங்கேதான் இருக்காரோ?" என்றார்.

என்னை அவர் பார்த்திருக்கலாம். "ஆமாம், இங்கே தான் இருக்கார்" என்றேன் கொஞ்சம் சங்கோசத்தோடும் யோசனையோடும்.

"இப்போ என்ன பண்ணிண்டு இருக்கார்? பழைய ஜோலி ஏதாவது வச்சுண்டு இருக்காரா?" என்றார் அவர் மறுபடியும். பழைய ஜோலி என்றால் என்ன என்று எனக்குப் புரியவில்லை.

"எதைப்பற்றிக் கேட்கிறீர்கள்?" என்றேன்.

"உனக்கு ஒண்ணும் அப்படித் தெரியாது. நீ குழந்தை தானே? அப்பாவுக்கு ஏதாவது எழுதறத்துக்கு ரொம்பப் பிரியம். இப்பவும் எல்லாம் வச்சுண்டு இருக்காரா? நானும் அவரும் ரொம்பப் பழகினவா. திருச்சிறுப்பள்ளியிலே இருக்கச்சே ரெண்டு பேரும் பக்கத்துப் பக்கத்து வீட்டில் இருந்தோம். ரொம்ப நல்ல மனுஷன் பாவம். ரொம்ப உழைப்பாளி" என்றார் அவர் உணர்ச்சியுடன்.

அவர் யார் என்று தெரிந்துகொள்ள எனக்கு ஆவலாக இருந்தது. 'பேர் என்ன?' என்று கேட்பது எப்படி? கொஞ்சம் யோசனையில் ஆழ்ந்துவிட்டு, "உங்களை யாருன்னு எனக்குத் தெரியல்லையே?" என்றேன் பணிவுடன்.

அவர் பலே பேர்வழிபோல் இருக்கிறது. அ
சொல்லாமலே, "நீ அப்போதெல்லாம் நாலு வய
குழந்தை. மஹாலக்ஷ்மியாட்டமா உங்கம்மாவைப் பா
தாலே பண்ணின பாவம் போகும். அவன், ராமு என்
பண்றான் இப்போ?" என்றார்.

"பி. ஏ. பாஸ் பண்ணிவிட்டு இன்ஷூரன்ஸ் ஏஜெ
டாக இருக்கான்" என்றேன் சுவாரஸ்யமில்லாமல்.

"ஏதோ பிழைச்சுப்பான்; கவலை இல்லேன்னு சொல்
அந்த நாளில் அப்பா அவனை எப்படி வளர்த்தார் ெ
யுமா?' என்றார் அவர்.

எப்படி வளர்த்தாரோ என்ன செய்தாரோ? அ
தில் யாராவது சொல்லுவாரும் போவாரும் இருந்
தானே எனக்கு இதெல்லாம் தெரியப்போகிறது.?
போதுள்ள சமாசாரந்தான் எனக்குத் தெரியும். ந
ஒன்றும் பதில் சொல்லவில்லை.

"ஆமாம். ராமுவுக்குத்தான் மதுரையில் சுந்த
லையர் பெண்ணைக் கல்யாணம் செய்தார். பட்டு, ப
குஞ்சு இவாளையும் ஏதோ கவலை இல்லாமே கொடுத்
டார். உனக்குச் சின்னவள் ஒரு குழந்தை இருந்தா
அவளுக்கும் கல்யாணம் செஞ்சிருக்காளோமே? உன்னை
என்ன, இரண்டு வயசு சின்னவளா இருப்பாளா?" என்
அவர் மறுபடியும்.

"எல்லாச் சமாசாரங்களும் இவருக்குத் தெ
ிருக்கே" என்று எனக்குச் சற்று ஆச்சரியமாகத்த
இருந்தது.

"உங்களுக்குத்தான் எல்லாம் எனக்குமேலே தெ
ிருக்கே? தங்கத்தைத்தானே சொல்றேன்? அ
தான் நல்ல பணக்கார இடமாப் பார்த்துக் கொடுத்
கார் அப்பா. நல்ல சொத்துள்ளவா. திருவனந்தப
திலே" என்றேன்.

"பையன் படிச்சுண்டு இருக்கானோ?"

"எம். ஏ. பாஸ் செய்துவிட்டு இங்கேதான் வே
குப்பாத்துண்டு இருக்கான்."

"பையன் எம். ஏ. ந்நறே. நல்ல பணம் காசுள்ள ாள்னு ஒரு நல்ல வேலையாகிவிடாதா? ரொம்ப சந்தோம். பாவம், தாயில்லாக் குழந்தை. எப்படியாவது ஆயு சாடே இருக்கனும். ஆமாம். நீ என்ன பண்ணிண்டு ருக்கே இப்போ? படிக்கிறயா?"

"படிச்சுண்டுதான் இருக்கேன். இன்டர் இரண்டா து வருஷம்."

"ஹூம்.... அப்படியா? நீயும் ஒரு வழியைப் த்துண்டுட்டயானு அப்பா கவலை விட்டது. இப்போ ார் ஆத்துலே? மன்னி இருக்காளாக்கும்? வயசு காலத் லே அவருக்கும் வேறே மனுஷா யாரு? குழந்தை ருக்கா ராமுவுக்கு?" என்று அவர் கேட்டதும் எனக்குக் ாஞ்சம் ஆத்திரமாக இருந்தது.

'இப்போ ஆத்திலே இந்தச் சங்கடந்தானே பெரிய சங் டமாக இருக்கு' என்று மனத்தில் நினைத்துக்கொண்டு, மன்னியையும் குழந்தைகளையும் அழைச்சுண்டு வரத் ான் மதுரைக்குப் போறேன்" என்றேன்.

"ஓஹோ... அப்படிச் சொல்லு. ரொம்ப சந்தோஷம். ான் எப்படியும் இன்னும் பத்து நாளிலே இங்கே வரு வன். கட்டாயம் அப்பாவை வந்து பார்க்கிறேன்னு சால்லு: மறக்காதே; என்ன?" என்றார் அவர்.

திண்டுக்கல்லில் இறங்குவதற்குள் மேல்விலாசத்தை ம் குறித்துக்கொண்டார்.

'யார் என்று கடைசிவரையில் சொல்லாமலே பாய்ச்சுட்டுப் போறார் பார் இந்த ஆசாமி' என்பது ன் மனத்தில் மிகவும் உறுத்தியது. நானும் விடவில்லை.

"இங்கே திண்டுக்கல்லில் யார் இருக்கா உங்களுக்கு?" ன்றேன். 'அப்போதாவது சொல்வாரா பார்ப்போம்'? ன்பதுதான்.

"இங்கேயா? என் பிள்ளை சிரஸ்தாராய் இருக்கான். ன்னமோ உடம்பு சரிப்படலேன்னு எழுதியிருந்தான். ந்த ரெயில் கூட்டத்துலே என்னன்னுதான் இருந்தேன். இந்தப் பொம்மனாட்டிகள் இருக்காளோன்னு ஆத்துலே.

அவம்மா புறப்பட்டுப் போனல்தான் ஆச்சுன்னு கத்
னுள். பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன்" என்ருர்.

திண்டுக்கல்லில் அவர் இறங்கியபோது சாமா
களை எடுத்துக் கிழே கொடுத்தேன்.

"அப்பாவிடம் சொல்லு; கட்டாயம் வந்து பார்க்
றேன்" என்று சொல்லிவிட்டுச் சென்ருர் அந்தப்பிராமண

இவ்வளவு டிமிக்கி கொடுத்த ஆசாமியை நானு
கேட்டிருப்பேன் எல்லாம். ஆனல் அப்பாவுக்கு ரொம்ப
தெரிந்தவர் என்றவுடன் கொஞ்சம் பயந்தான் உண்ட
யிற்று. 'உங்கள் பிள்ளையாம்; மரியாதை இல்லாமல் பே
கிருன்' என்று அப்பாவிடம் வந்து சொன்னுரானல்?

மதுரைக்கு வண்டி போனபோது நல்ல இருட்
வேளை. நான் முன்பின் வந்ததில்லை. வரும் சங்கதி தெ
யாததால் ஆளோ வண்டியோ ரெயிலடிக்கு ஒன்றும் வ
வில்லை. சத்த வண்டி ஒன்று வைத்துக்கொண்டு வி
போய்ச் சேர்ந்தேன்.

எல்லோரும் படுக்கைக்குப் போய்விட்டார்கள்போல
இருந்தது. கதவை வண்டிக்காரன் இடித்ததும் சம்பந்
சுந்தரேசையரே வந்து கதவைத் திறந்தார்.

இருட்டா; அவருக்கும் சட்டென்று புரியவில்லை
"யார்?" என்று கேட்டார் முதலில். படுக்கையை வண்டிக்
காரன் எடுத்துப்போய்த் திண்ணையில் வைத்ததும் புற
கூடையையும் தூக்கையும் எடுத்துக்கொண்டு நான்
உள்ளே நுழைந்தேன். அப்போது வெளிச்சத்தில்தான்
அவருக்குப் புரிந்ததுபோல் இருந்தது. ஏன் என்ருல் அப்
படிப் பிரமித்துப்போய் நின்றுகொண்டிருந்தார்.

"சீமாவா? யாரடாப்பா இப்படித் திடீர்னு வரான்னு
பார்த்தேன்? என்ன இப்படி டேஷேச்சுண்டு? ஒரு வா
எழுதியிருந்தால் வண்டியை ஒட்டிவிடமாட்டேனு
ஊரிலே அப்பா எல்லாரும் சௌக்கியந்தானே?" என்ருர்

வண்டிக்காரனுக்குச் சத்தத்தைக் கொடுத்துக
கொண்டே, "எல்லாரும் சௌக்கியந்தான். அப்பா
திடீர்னு டேஷேச்சுண்டார். மன்னியை அழைச்சுண்டு
வான்னு அனுப்பிச்சார்" என்றேன் நான்.

சம்பந்திப் பிராம்மணன் ஓர் ஆளைக் கூப்பிட்டு எனக்குப் படுக்கை தயார் செய்யச் சொன்னார்.

"சாப்பிடலையே இன்னும்? டேய்! போய்ச் சின்ன அம்மாளை எழுப்பி ஊரிலேருந்து ஐயா வந்திருக்காருன்னு சொல்லு" என்றார்.

"வாண்டாம் சார். அகாலம் ஆகிவிட்டதால் நான் அங்கேயே ஹோட்டல்லே சாப்பிட்டுவிட்டு வந்து விட்டேன்" என்றேன்.

"அடாடா! ஆத்துக்கு வந்து சாப்பிடப்படாதோ? சரி, படுக்கையைப் போடச் சொன்னேன். போய்ப் படுத்துக்கோ. வண்டிலே வந்தது ரொம்பக் களைப்பா இருக்கும். ரொம்பக் கூட்டமோ வண்டிலே?" என்றார்.

"அப்படி ஒன்றும் கூட்டமில்லை" என்று சொல்லி விட்டு நானும் மெத்தையைப் பார்க்கப் போனேன்.

வெளிச்சத்தைப் போட்டுக் காட்டிவிட்டுச் சேவகன் கீழே இறங்கிப் போய்விட்டான்.

பொழுது விடிவதற்குள் குழந்தை மணி, "சித்தப்பா, சித்தப்பா!" என்று கத்திக்கொண்டு ஓடி வந்தான். ஒரு வருஷமாகக் குழந்தையைப் பார்க்காமல் அவன் முகத்தில் விழித்தது எனக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. பல்லைக்கூடத் தேய்க்கவில்லை. அத்தை கொடுத்த தூக்கையும் அப்பா கொடுத்த பழக்கூடையையும் எடுத்தேன். பிஸ்கோத்துப் பொட்டலத்தையும் தூக்கையும் என் கையிலிருந்து பிடுங்கிக்கொண்டு, "அம்மா! சித்தப்பா என்ன என்னமோ கொண்டுவந்திருக்கா!" என்று கத்திக் கொண்டு மணி கீழே ஓடினான். பழக்கூடையையும் எடுத்துக்கொண்டு நான் இறங்கிக் கீழே போனேன்.

பல்லைத் துலக்கிவிட்டு வந்தபோது குழந்தை கல்பகம் தூரத்தில் நின்றுகொண்டு என்னைப் பார்த்துக்கொண்டிருந்தாள். பார்த்து நாளாகிவிட்டதால் அவளுக்கே அருகில் வருவோமா வேண்டாமா என்ற சந்தேகம் தோன்றியதுபோல் இருந்தது.

"வா கபபு, ஓடியா" என்றேன் உட்கார்ந்து கொண்டே. சிரித்துக்கொண்டே அவள் ஓடிவிட்டாள். ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் மன்னி காபியை எடுத்து வந்தாள்.

"என்ன சார், திடீர்னு? நீ இந்த ஊரைப் பார்த்ததே இல்லையே? வந்தயே இப்பவாவது நினைச்சுண்டு" என்றாள் சிரித்துக்கொண்டே.

"என்னமோ இந்தச் சாக்கு ஒன்று கிடைச்சுது; வந்தேன். இல்லாட்டா எங்கே கிளம்பப் போறேன்?" என்றேன் நானும், குழந்தை மணியைக் கொஞ்சியபடி.

காபியைச் சாப்பிட்டுவிட்டு நானும் சுந்தரேசையிரும் ஹாலில் உட்கார்ந்திருந்தோம். சமையல்காரன் இட்டலி எடுத்துவந்து வைத்துவிட்டுப் போனான்.

"அப்பா உடனே வந்துடச் சொன்னா. இன்னிக்கே கிளம்பிப் போய்டலாம்னு பார்க்கறேன். மன்னியும் குழந்தைகளும் புறப்பட முடியுமோன்னோ?" என்றேன் நான் சம்பந்தப் பிராம்மணனைப் பார்த்து.

"இன்னிக்கேயா கிளம்பறாய்? இரண்டு நாள் இருந்துவிட்டுப் போகலாமென்று பார்த்தேன். என்னைப்பற்றின வரையில் ஆக்ஷேபம் ஒன்றும் இல்லை. எதுக்கும் ராஜத்தைக் கேட்டுடலாம்" என்று சொல்லிக்கொண்டே, "ராஜம்" என்று சத்தம் போட்டார்.

மன்னியும் உடனே வந்தாள். "இன்னிக்கே புறப்படணுங்கறான் சீனு; என்ன சொல்றே நீ?" என்றார்.

"அம்மாவையும் கேட்டுண்டு வந்துடறேன். அதுக்கென்ன, கிளம்பிடறது" என்று சாதாரணமாகச் சொல்லிவிட்டுப் போன மன்னி மறுபடியும் வெகுநேரம் அந்தப் பக்கமே வரவில்லை.

"இதென்னடா, கிளம்ப முடியப்போகிறதா இல்லையா?" என்று யோசனை வந்துவிட்டது எனக்கு. எல்லாம் பெண்டுகள் வியாபாரம்!

சாப்பிடும்போது குழந்தை மணி வந்து என் அருகில் உட்கார்ந்துகொண்டிருந்தான். என்னை விட்டு ஒரு நிமிஷமும்

அசையமாட்டேன் என்றுவிட்டான். 'எப்போ சித்தப்பா ஊருக்குப் போகலாம்?'னு நச்சரித்துக்கொண்டே இருந்தான், சாப்பிட்டுக்கொண் டிருக்கும்போதே.

"என்ன அவ்வளவு அவசரம்? ரெண்டு நாள் முந்தி மாப்பிள்ளைகூடக் கடிதாசு போட்டிருந்தார்; ஒன்றும் எழுதல்லையே?" என்றாள் சம்பந்தி அம்மாள்.

நான் ஒன்றும் சொல்லவில்லை. "அந்தம்மா தெவசம் வரதாம்; அதுக்குக் குழந்தைகளை அழைச்சுண்டு வரச் சொன்னாராம் சம்பந்தி" என்றார் சம்பந்திப் பிராம்மணன்.

"இப்பத்தான் நெனச்சுண்டாராக்கும்? ஒருவருஷமா ஒரு ரெண்டு வரி எழுதத் தெரியல்லே. குழந்தையையும் இருக்கா போச்சான்னு ஈ காக்கா எட்டிப் பாக்கலே. இப்போ திடீர்னு என்ன வந்துடுத்து? அவள் இல்லாதே தெவசமே நடந்ததில்லையாமோ?" என்று சம்பந்தியம்மாள் கூறியது எனக்குச் சுருக்கென்றது.

"குழந்தைகள் இல்லாமே வீடே நன்றாயில்லேன்னு அப்பா ரொம்ப வேதனைப்படறார்" என்றேன்.

"வேதனைப்படுவானேன் இப்போ? நாங்க என்ன பட்டினியா போட்டுடுவோம் குழந்தைகளை? இவளைக் கொண்டுபோய் வச்சுக்கறதும், போகறதும், வரதும்னு, உங்கப்பா குடித்தனம் பண்றா? எல்லாம் அவா மனுஷாளுக்குத்தான் நடத்தறார். குழந்தைகளுக்குன்னு ஒரு துரும்பு எதாவது செய்யறாரோ? அந்தப் புள்ளை சம்பாதிக்கற இரண்டு காசையும் வாங்கி அந்தக் குழியிலே போட்டுடறார்" என்று சம்பந்தியம்மா அடுக்கிக் கொண்டே போனபோது என்றால் ஒன்றுமே பேச முடியவில்லை. இலைமறையச் சம்பந்தி உபசாரம் செய்தும் என்ன?

"என்னம்மா இது? இந்தப் பழங்கதையெல்லாம் என்னத்துக்கு இப்போ? வரச் சொன்னார்னு நான் கிளம்பிப் போறேன். நீ என்னத்துக்காக இப்படிச் சத்தம் போடறே?" என்று மன்னி அம்மாவை அடக்கியதும் என் காதில் பட்டது.

ஆனால் சம்பந்தியம்மாளுக்குக் கோபம் இன்னும் அதிகப்பட்டதே ஒழியக் குறையவில்லை.

"ஆமாண்டா, வந்ததே புக்காய்! அழகான புக்காய்! இரண்டு கட்டின்டு பற, போறத்துக்கு. கொட்டிக் கொட்டிக் கொடுத்ததெல்லாம் ஒரு துரும்பு காணம். வீட்டிலே பாத்திரமா பண்டமா ஒரு துரும்பு இல்லை. வயத்தைத்தான் எரியறது! போறாத குறைக்கு வீட்டிலே ஒரு ராக்ஷஸி! இந்த அழகிலே புக்காத்துக்குப் போய் ஒவ்வொரு தடவையும் போணமாய் வரது" என்று ஒன்றில்லை இரண்டில்லை அவ்வளவு பேச்சுப் பேசிவிட்டாள்.

'ஏதோ ராமு அழைத்துக்கொண்டு வரவில்லை; மன்னி வரவில்லை' என்று நான் நினைத்துக்கொண்டிருந்தேனே ஒழிய இந்தச் சங்கதியை எல்லாம் நான் கேட்டது இதுதான் முதல் தடவை. ராமுவின் போக்குக்கு அர்த்தமும் இப்போது புரிந்தது. அத்தையின் கோபத்துக்கும் காரணம் தெரிந்தது.

எனக்கும் மனத்துக்குள் கோபம் தாங்க முடியவில்லை. நம் அகத்தில் என்ன நடக்கவில்லை? அப்பாவுக்கா குழந்தைகளிடம் அருமை இல்லை? ராமுவும் இவர்களோடு சேர்ந்துகொண்டு தாளம் போடுவதை நினைத்தால் கட்டோடு பிடிக்கவில்லை. அத்தையின் பாட்டை நினைத்துக்கொண்டால் மிகவும் பரிதாபமாக இருந்தது.

எப்படித்தான் கேட்டேனோ எனக்கே தெரியவில்லை:

"அத்தை என்ன பண்ணுவா பாவம்? அவளை என்னத்துக்கு இழுக்கறேள் வீணா?" என்று கேட்டுவிட்டேன்.

அதற்குச் சம்பந்தியம்மாள் சொன்ன பதிலைக் கேட்டுத்தான் எனக்கும் சீ என்று ஆகிவிட்டது. இவ்வளவு கெட்ட எண்ணங்களா?

"ஆமாண்டாப்பா ஆமாம்! அத்தைக்கு நீ பரிஞ்சுண்டு வராமே என்ன பண்றது? நாளைக்கு அவதானே நோக்குப் பொண்ணையும் குடுத்துப் பட்டமும் கட்டிக்கப் போறா? பொண்ணைக் குடுத்துட்டு எங்களாட்டயா வாயைப் பொளந்துண்டா நிக்கப்போறா? அதுக்குத்தான் இப்பவே பிடிச்சு எல்லாத்தையும் பார்த்துச் சேர்த்து



வைக்க வந்திருக்கா. மோருக்க வசரி இன்றைக்குமே காசு! குழந்தைகளுக்கு இந்த [illegible] வழி உண்டா!" என்று மேலே பேசுவதற்குள் நான் எழுந்து வெளியே போய்விட்டேன்.

அதற்குமேல் எனக்குப் பேசப் பிடிக்கவில்லை. அங்கே நின்று மன்னி வருகிறாளா என்று பார்க்கவும் பிடிக்கவில்லை. 'வந்தால் வரட்டும், போனால் போகட்டும்' என்று அடுத்த வண்டிக்குக் கிளம்பிவிட்டேன். 'சித்தப்பா, சித்தப்பா' என்று நச்சுப்பண்ணும் குழந்தையுடன் பேசக்கூடப் பிடிக்கவில்லை. இந்தப் பிரஸ்தாபங்கள் எங்கிருந்து கிளம்பின என்றே கொஞ்சங்கூடப் புரியவில்லை. 'இதைக் கேட்டுக்கொண்டா அத்தை அந்தக் குழந்தையின்பேரில் எரிந்து விழுகிறாள்!' எனக்கே ஆச்சரியமாக இருந்தது.

சாமான்களைக் கட்டிக்கொண்டிருந்தேன். மன்னி காபியை எடுத்துவந்து வைத்துவிட்டு நின்றாள். எனக்கு அவளுடனும் ஒன்றும் பேசப் பிடிக்கவில்லை. அவளாக, "ஏழுமணி வண்டிக்குத்தானே?" என்றாள்.

"ஆமாம்" என்று சொல்லிவிட்டுத் திரும்பிக்கொண்டேன். இவ்வளவுக்கும் இந்தப் பிராம்மணன் பேசாமல் இருந்தாரே அதைச் சொல்லு. 'உலகத்தில் பெண்களே இப்படித்தான் இருப்பார்களோ?' என்ற எண்ணம் என் மனத்தில் பலமாகப் படிந்தது. என்ன அற்ப புத்தி! இப்படித்தானே இருப்பாள் மன்னியும்?

வண்டி பூட்டி வாசலில் வந்து நின்றது. என் படுக்கை சாமானுடன் இன்னும் சாமான்கள் இருப்பதைப் பார்த்துத்தான் மன்னி வருகிறாள் என்று தெரிந்தது. இவ்வளவு கோபத்துக்கும் இடையில், 'மன்னியாவது இவ்வளவு தெரிந்துகொண்டாளே' என்ற மகிழ்ச்சி மனத்தில் தோன்றியது. மன்னியும் குழந்தைகளும் வண்டியில் ஏறிக்கொண்டவுடன் மரியாதை என்பது ஒன்று இருக்கிறதே! எப்படி விட்டுவிடுவது?

"நான் போய்ட்டு வறேன்" என்றேன்.

"அவர் வாண்டாம்னாலும் இது விடுவிடுன்னு பறக்கறது. அப்பாவோடே சொல்லு" என்றாள் சம்பத்தியம்மாள்.

மன்னி, "போருமேம்மா" என்று அடக்கினாளே ஒழிய அவள் கண்களிலும் கண்ணீர் துளும்பிக்கொண்டிருந்தது.

ரெயில்வண்டியில் தாராளமாக இடம் கிடைத்துவிட்டது. வண்டியில் நான் மன்னியுடன் அதிகமாகப் பேச்சுக் கொடுக்கவில்லை. குழந்தைகளைக் கட்டி மேய்ப்பதற்கே சரியாகப் போய்விட்டது. சின்னக் குழந்தை கத்தித் தீர்த்துவிட்டது.

வந்து இறங்கியவுடன் மன்னிக்கும் குழந்தைகளுக்கும் அத்தை ஆரத்தி சுற்றிக் கொட்டினாள். ருக்கு ஓடிவந்து 'கப்பி'யை எடுத்துக்கொண்டு கூத்தாடினாள்.

பாவம்! அவளுக்கு என்ன தெரிந்தது? களங்கமற்ற அவளுடைய முகத்தைப் பார்த்தவுடன் என் வேதனை இன்னும் பன்மடங்கு ஆகிவிட்டது. நேரே மெத்தைக்கு அப்பாவைப் பார்க்கச் சென்றேன்.

குழந்தைகளை எதிர்பார்த்துக்கொண்டு வாசலிலேயே நின்றுகொண்டிருப்பார் என்று நினைத்தேன். ஆனால் அவரை எங்கும் காணவில்லை. 'ஒரு சமயம் வெளியில் எங்கேயாவது போயிருக்கிறாரோ?' என்று யோசித்தவண்ணம் சில்லறையை எண்ணி அவர் கைப்பெட்டிக்குள் போட்டேன்.

இறங்கிக் கீழே வந்தபோது எதிரில் வரதன் வந்தான்.

"அப்பா எங்கேடா? வெளியில் போனாரா?" என்று கேட்டேன்.

"நேத்து ராவிக்கே ஊருக்குப் போனாருங்க" என்றான் அவன்.

'இப்போது எந்த ஊருக்கு?'

"எந்த ஊருக்குடா?" என்றேன்.

"அதெல்லாம் ஒண்ணும் சொல்லலிங்க" என்று சொல்லிவிட்டு அவன் போய்விட்டான்.

"எங்கே போயிருப்பார்?" என்று எனக்கு விளங்கவில்லை. அத்தையைப் போய்க் கேட்டேன்.

"என்னிடம் ஒன்றும் சொல்லவில்லையேடாப்பா. உடனே வந்துவிடுவேன்னு மாத்திரம் சொன்னார்; அவ்வளவுதான் எனக்குத் தெரியும்" என்றாள் அத்தை.

"நான் கிளம்பியபோது ஒன்றும் சொல்லவில்லையே?"

"ராமு வந்துவிட்டானா பார்க்கலாம். அவனுக்கா வது தெரிந்திருக்கிறதா?" என்று அவன் அறையைப் பார்க்கப் போனேன். அவன் அப்போது பத்திரிகை படித்துக்கொண் டிருந்தான்; மன்னியும் குழந்தைகளும் இருந்தார்கள்.

"அப்பா எந்த ஊருக்குப் போனார்? உன்னிடம் ஏதா வது சொன்னாரா? நான் போறச்சேகூட ஒன்றும் சொல்லலியே" என்று அவனைக் கேட்டேன்.

"அவர் போறதையும் வரதையும் ஏதாவது சொல்றா என்ன? நெனச்சுண்டார்; கிளம்பிவிட்டார். யாரைக் கேக்கணும்? நான் ஒருத்தன் இருக்கேன்னு நெனச்சுண்டு இருக்காரா என்ன அவர்? உன்னை ஒருத் தனைத்தான் அவர் புள்ளைன்னு நெனைச்சுண்டு இருக்கார்" என்றான் ராமு வெறுப்புடன்.

"வேறே எங்கே போயிருக்கப் போறார்? தங்கத்தை அழைச்சுண்டு வருவார்" என்றாள் மன்னி வெடுக் கென்று.

எதற்குப் போய்க் கேட்டோம் என்று ஆகிவிட்டது எனக்கு. எந்த இடத்தில் போனாலும் இப்படியா? என் தலையில் எழுத்து!

ஏன் எல்லோருக்கும் இப்படி விபரீதமாகத் தோன்ற வேண்டும்? 'அத்தை எனக்குப் பெண்ணைக் கொடுத்து எல்லாவற்றையும் கட்டிக்கொள்ளப் போகி றாளாம்!' யார் கிளப்பினார்கள் இதை எல்லாம்? அதுவும் அல்லாமல் கட்டிக்கொண்டு போவதற்கு புரட்டிக் கொண்டு போவதற்கும் என்ன கொட்டிக்கிடக்கிறது இங்கே? இவ்வளவு அசூசையையா மனுஷாளுக்கு? அவா

நான் நெய்யில் விழுந்த அப்பம்மாதிரி குதிக்கிருர்கள் என்ருல் இந்த ராமுவும் இப்படிப் புத்திகெட்டுப் பேசுவது எனக்குப் பிடிக்கவே இல்லே. அப்பா எல்லாம் எனக்கே செய்துவிடுகிருராம்! இந்தத் துணி வாங்கிக் கொண்டு வந்ததா அவனுக்குப் பொறுக்கவில்லே? அதற்குள் 'தங்கத்தை அழைத்துக் கொண்டு வரப் போயிருர் அப்பா! என்கிருள் மன்னி. ஒருவருக்கு மேல் ஒருவர்! 'அடேயப்பா! உலகம் என்ருல் இப்படித்தான் இருக்குமோ?' என்று நினைத்துக்கொண்டபோதே எனக்குப் பயமாக இருந்தது.

அம்மணி கூறியதுபோல், 'எல்லோரையும் இப்படி விட்டுப் போய்விட்டாளே அம்மா' என்று மிகவும் வருத்தமாக இருந்தது.

# மதிப்புரை

'அம்மா மட்டும் இருந்தால்—' என்ன நடக்கும் அல்லது என்ன நடக்காது என்பதை நன்ருகத் தெரிந்துகொள்ள, யாரேனும் விரும்பினால், ஸ்ரீ கௌரி அம்மாள் எழுதியிருக்கும் 'நடிவாளம்' என்ற கதையைப் படித்தால், அவர்கள் தெளிவாகத் தெரிந்துகொள்ளுவார்கள்.

நாலைந்து குழந்தைகளைப் பெற்றுவிட்டு, அவர்களில் சிலர் வயது வந்தவர்களாகவும் சிலர் வயது வராதவர்களாகவும் இருக்கும் நிலையில், தாய் இறந்து போனால், அந்தக் குடும்பத்தின் கதி என்ன ஆகும் என்பதை ... இந்த நூல் ஆசிரியை வெகு அழ காகச் சித்திரித்துக் காண்பி... ...கிருர்.

பெரிய பொறுப்பைச் சு... ...ட மனைவி இறந்துபோன ...க்கியமா

கடிவாளம்

4328

பசுமை

# பொருளடக்கம்